# தோழி நல்ல தோழிதான்!

வல்லிக்கண்ணன்




14, சித்திரைக்குளம் மேற்கு தெரு,
மயிலாப்பூர் : : சென்னை - 600 004.
தொலைபேசி எண் : 4943074.

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **தோழி நல்ல தோழிதான்!** |
| நூல் ஆசிரியர் | : | **வல்லிக்கண்ணன்** |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | சிறு கதைகள் |
| பதிப்பு விவரம் | : | முதற் பதிப்பு, ஆகஸ்ட், 2000 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| நூல் வெளியீடு | : | பூங்கொடி பதிப்பகம்<br>14, சித்திரைக்குளம் மேற்கு தெரு,<br>மயிலாப்பூர், சென்னை-600 004. |
| தாள் | : | 11.6 வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 18 x 12.5 செ.மீ. கிரவுன் |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 190 |
| பைண்டிங் | : | சாதா அட்டை |

| | | |
|---|---|---|
| **விலை** | : | ரூ. 40-00 |

| | | |
|---|---|---|
| அச்சிட்டோர் | : | வைகறை அச்சகம்,<br>30. வடுகு இடையர் தெரு,<br>மயிலாப்பூர், சென்னை-600 004. |

# பதிப்புரை

தமிழில் சிறுகதை இலக்கிய வளர்ச்சிக்கு தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டவர் பழம்பெரும் எழுத்தாளர் திரு. வல்லிக்கண்ணன் அவர்கள். அவர் தற்போது நம்மோடு வாழ்ந்து வருவதும் பல புதிய— புதுமை எழுத்தாளர்கள் தோன்றுவதற்கு வழி காட்டிக் கொண்டிருப்பதும் தமிழ்ச் சமுதாயம் பெற்ற பேறாகும்.

இத்தகு பெருமைக்குரிய எழுத்தாளர். திரு. வல்லிக்கண்ணன் அவர்களின் 21 சிறுகதைகளைத் தொகுத்து ''தோழி நல்ல தோழிதான்'' என்று தலைப்பிட்டு வெளியிட்டுள்ளோம்.

இது பூங்கொடி வெளியிடும் இந்நூல் ஆசிரியரின் மூன்றாவது சிறுகதைத் தொகுப்பு நூலாகும்.

வே. சுப்பையா

பூங்கொடி பதிப்பகம்

# பொருளடக்கம்

# தோழி, நல்ல தோழிதான்!

"உந்தன் மனநிலையை நான் தெரிந்து கொண்டேனடி தங்கமே தங்கம்!" என்று சொல்லி, வளைகள் கலகலக்கும்படியாகக் கைகொட்டி, களி துலங்கும் குலுக்குச் சிரிப்பு சிந்தினாள் ராஜம்மா.

"என்னைத்தையடி கண்டு விட்டாய் பிரமாதமாக?" என்று சிடுசிடுத்தாள் தங்கம்.

அவள் சிநேகிதி சிரித்தபடி சொன்னாள்: "நெல்லுக்குள்ளே அரிசி இருக்கிறது. எள்ளுக்குள்ளே எண்ணெய் கலந்திருக்கிறது. உன் மனசுக்குள்ளே காதல் புகுந்திருக்கிறது. இதை எல்லாம்தான்."

தங்கம் பதில் பேசவில்லை. தோழியின் விழிகளைச் சந்திக்க மறுத்த அவளுடைய அஞ்சனம் தோய்ந்த கண்களும், செம்மை படர்ந்த முகமும், தலை தாழ்ந்து கொண்ட நிலையும் 'ராஜம்மா பொய் சொல்லவில்லை' என்று விளம்பரப்படுத்தின.

"என் அருமைத் தங்கம்! டாக்டரிடமும் தோழியிடமும் உள்ளதை உள்ளபடி சொல்லிவிட வேண்டும், தெரியுமா? மனசில் உள்ளதை வெளிப்படையாகச் சொன்னால்தான் நன்மை பிறக்க வழி ஏற்படும். அதனாலே, என்னிடம் சொல்வாய் தோழி- உன் உள்ளம் கவர்ந்த கள்வன் யாரோ? என்ன பேரோ? எந்தத் தெருவோ?" என்று நீட்டி நீட்டிப் பேசினாள் ராஜம்மா.

அவள் இருக்கிற இடத்திலே சிரிப்பும் துணை இருக்கும். ஹாய்-ஊய்ய்' என்ற கூச்சலும் கீச்சொலியும் விஜயம் செய்து போகும். குஷியும் கும்மாளியும் வளையமிட்டுக் கொண்டே இருக்கும். அமைதி என்பதை அறிந்து கொள்ளாத அழகி அவள். மௌனம் என்பதைக் கலையாகவோ, பண்பாகவோ போற்ற விரும்பாத குமரி அவள்.

அவளுடைய தோழி தங்கம் "சாதுக் குழந்தை." "அடித்தால் கூட அழத் தெரியாத பாப்பா, இல்லை இல்லை; அழ விரும்பாத பேதை" என்று ராஜம்மா கிண்டலாகக் குறிப்பிடுவது உண்டு. சிநேகிதிகளை சாதாரணமாகவே கேண்டை பண்ணி மகிழும் சுபாவம் உடைய ராஜம்மா குத்திக் குத்தி கேலி செய்வதற்கு விஷயம் கிடைக்கிற போது சும்மா இருந்து விடுவாளா?

"தங்கம் உன்னுடைய... உம், வந்து... உம்... உன்னுடைய... எலலெவென்று சொல்ல? ஆமா ஆமா... காதலர் எப்படிப்பட்டவர் என்று நான் சொல்லட்டுமா?" "ஆவாரா" ஸ்டைலில் டிரஸ் செய்து கொண்டு, திலீப் குமார் மாதிரி கிராப் வளர்த்துக் கொண்டு, ஜிப்பி பாணி யில் வேலைத்தனங்கள் செய்து...

'சீ போ!' என்று சீறிப் பாய்ந்தாள் தங்கம்.

'தெரியும் தங்கம்!' என்று இழுத்தாள் தோழி. ஒரு நபரைக் காணாத போதெல்லாம் எங்கள் தங்கத்தின் மையுண்ட கண்கள் காற்றில் அலைபட்ட கருமேகங்கள் போல அங்கும் இங்கும் உருண்டு புரண்டது எங்க ளுக்குத் தெரியாதா? பஸ் ஸ்டாப்பிலே தவம் செய்ததும், கடலோரத்திலே காத்து நின்றதும், ரோட்டிலே ஏங்கி நடந்ததும் நாங்கள் அறிய மாட்டோமா? அந்த நபர் வரக் கண்டதும் எங்கள் தங்கத்தின் முகம் செந்தாமரை யாக மாறியதும், அவள் கண்கள் படபடத்ததும், இதழ்க்

கடையிலே குறுநகை பூத்ததும் நாங்கள் அறியாத விஷயங்களா? அந்த துஷ்யந்த மகாபுருடரும் எங்கள் சகுந்தலை அம்மாளும் கண்களை புறாக்கள் ஆக்கிக் காதல் தூது விட்டு மகிழ்ந்து போவதைத்தான் நாங்கள் தெரிந்து கொள்ளவில்லையா?......

"ஐயோ ராஜம், சும்மா இரேன்!" என்று தங்கம் கெஞ்சினாள்.

"சும்மா இருந்தால் ஆகாதடி தங்கம். காதல் வளர வேண்டுமானால் தோழியின் தயவு தேவை. நீதான் இலக்கிய ரசிகை ஆயிற்றே; உனக்குத் தெரியாத விஷயமா இது?" என்று ராஜம்மா சொன்னாள்.

இப்படிப் பேசிப்பேசி அவள் தங்கத்தின் உள்ளத்தில் வளர்ந்த ரகசியத்தை உணர்ந்து விட்டாள். "தங்கத்துக்கு துணிச்சல் கிடையாது. அச்சம், மடம், நாணம் வகையரா, அளவுக்கு அதிகம் இருக்கிறது!" என்பது தோழியின் அபிப்பிராயம். ஆகவே, தன் சிநேகிதிக்குத் துணைபுரிய வேண்டியது தனது கடமை என்று ராஜம்மா தானாகவே முடிவு செய்து, செயல் திட்டத்திலும் ஈடுபட்டு விட்டாள். புதுமைப் பெண் அவள். பயம், தயக்கம் போன்றவை அவள் பக்கம் தலைகாட்டத் துணிவதில்லை.

ராஜம்மாளின் உதவியினால் தங்கமும், அவள் பார்வைக்கு இனியனாக விளங்கியவனும் பேச்சு பரிமாறிக் கொள்ளும் நிலைபெற முடிந்தது.

ஒரு சமயம் 'பஸ் ஸ்டாப்'பில் தங்கமும் ராஜம்மாளும் நின்ற வேளையில், அவனும் சிறிது தள்ளி நின்று கொண்டிருந்தான். ராஜம் தன் சிநேகிதியோடு சிரித்துப் பேசி மகிழ்ந்ததை அவனும் ரசித்தான். அப்போழுது வேகமாக ஒரு டாக்ஸி வந்தது ரஸ்தாவில் மழைநீர் தேங்கிக் கிடந்தது. டாக்ஸியின் வேகம் தண்ணீரில்

அதிர்ச்சி உண்டாக்கியது. நீர்த்துளிகள் மேலெழுந்து எங்கும் சிதறித் தெறித்தன.

இந்த விபத்தை ராஜம்மா மட்டுமே முன்கூட்டி உணர்ந்தாள். டாக்ஸியின் சக்கரங்கள் நீரில் பாய்ந்ததுமே, அவள் 'ஊஊ...ஊய்ய்!' என்று கீச்சிட்டு ஒரு துள்ளுத்துள்ளி பின்னால் விலகிக் கொண்டாள். மற்ற இருவரும் திடுக்கிட்டு அவளை நோக்கிய வேளையில், நீர்த்துளிகள் அவர்கள்மீது பட்டு விட்டன.

'ஐயே!' என்றாள் தங்கம்.

'செச்சே!' என்று வருத்தப்பட்டான் இளைஞன்.

'டாக்ஸி ஹோலி-ரங்க ஹோலி கொண்டாடி விட்டு ஓடுகிறது. பரவால்ல. காய்ந்ததும் சரியாகிவிடும்' என்று ராஜம்மா சொன்னாள். அவனையும் தங்கத்தையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டே பேசினாள் அவள்.

அவன் அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டு மேலும் கீழும் பார்த்தபடி நின்றான். பிறகு 'என்ன இருந்தாலும் இந்த டாக்ஸிக்காரங்க செய்வது அநியாயம். இப்படியா கண்ணை மூடிக் கொண்டு வேகமாகப் போவது?' என்றான்.

"அது சரிதான், நமது கண்களும் சரியாகக் கடமையைச் செய்வதில்லை. சில சமயங்களில், ஏதாவது ஒரு காரியத்தில் தீவிரமாக ஆழ்ந்து, சுற்றுப்புறத்தைக் கவனிக்க மறந்து விடுகின்றன" என்று வம்பளந்தாள் ராஜம்.

"சும்மா இருக்க மாட்டியா, ராஜம்?" என்று தங்கம் முணுமுணுத்தாள்.

"இவள் பெயர் தெரியவில்லையே என்று பார்க்கிறீர்களா? இவள் தங்கம்!" என்று அவனுக்கு எடுத்துச் சொன்னாள தோழி.

"போடி என்று எரிந்து விழுந்த தங்கம் கீழே பார்வையைச் செலுத்தி நின்றாள்.

"தங்கத்துக்குக் கோபம். அவள் பெயரைச் சொல்லி விட்டேனே என்பதனால் அல்ல. உங்கள் பெயரைக் கேட்டுச் சொல்லவில்லையே என்றுதான்" எனக் கூறிய சிநேகிதி, 'இல்லையா தங்கம்? என்று கேட்டாள். ஒய்யாரமாகச் சிரித்தாள்.

அவளுடைய சாதுர்யத்தை வியந்து ரசித்து, மகிழ்ந்தான் அவன். 'என் பெயர் சந்திரன்' என்று அறிமுகப் படுத்திக் கொண்டான்.

அதன் பிறகு அவர்கள் சந்திப்பதும், பேசிக் களிப்பதும், உலா போவதும் நித்திய நிகழ்ச்சிகள் ஆகி விட்டன. அத்தகைய சந்தர்ப்பங்களில் எல்லாம் ராஜம்மாவும் தன்னுடன் இருக்க வேண்டும் என்று தங்கம் வற்புறுத்தினாள். தோழியும் உடன் வருவதனால் தான் பொழுது பொன்னாகக் கழிகிறது; பேச்சு சுவையாகக் கனிகிறது என்றே சந்திரனும் உணர்ந்தான்.

ஒருநாள், சில செடிகளில் அழகு மயமாகப் பூத்து விளங்கிய புஷ்பங்களை அவர்கள் கண்டு ரசிக்க நேர்ந்தது.

"இந்தப் பூக்கள் ரொம்ப அழகாக இருக்கின்றன; இல்லையா?" என்றாள் தங்கம்.

"செடியில் பூத்துக் குலுங்குகிறபோது மலர்களின் அழகு தனிதான்" என்று சந்திரன் சொன்னான்.

"இருக்கலாம், ஆனாலும், அந்நிலையைவிட அதிகமான அழகை அதே புஷ்பங்கள் பெறுவதும் உண்டு" என்று ராஜம்மா கூறினாள்.

அவ்வேளையில் அவள் கண்களின் பார்வை மிகவும் வசீகரமாக இருந்தது குவிந்த மலர் போன்ற இதழில்

சிலிர்த்த சிறுநகை கவர்ச்சிகரமாகத் திகழ்ந்தது. அவளுடைய முகமே முழுதலர்ந்து இளம் வெயிலில் மினுமினுக்கும் அருமையான புஷ்பம் போல் மிளிர்ந்தது.

அம் முகத்தை வெகுவாக ரசித்த சந்திரன் கேட்டான் 'எப்போது?' என்று.

''காதலுக்கு உரியவளின் கூந்தலிலே கொலுவிருக்கிற போதுதான். வேறு எப்போது?'' என்று கேட்டு அருவிச் சிரிப்பை அள்ளி வீசினாள் தோழி.

தங்கத்தை வெட்கம் பற்றிக் கொண்டது. சந்திரனின் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கிப் பொங்கி வழிந்தது.

அவன் கைநிறைய புஷ்பங்களைக் கொய்து தங்கத்திடம் கொடுத்தான். அவற்றை வாங்கிக் கொண்ட தங்கம் கைகளில் ஏற்றியபடியே நின்றாள்.

''என்? தலையில் சூடிக்கொள்ளவில்லை?'' என்று அவன் விசாரித்தான்.

''தானாக வைத்துக் கொள்வதைவிட, காதலனே புஷ்பங்களைக் காதலியின் கூந்தலில் சூட்டுகிற போது அதிக இன்பம் உண்டாகும். பூக்களும் தனிச் சிறப்பைப் பெறும்'' என்று ராஜம்மா சொன்னாள்.

சந்திரனும் 'அப்படியா!' என்று கேட்டுச் சிரித்தான்,

'போடி வாயாடி!' என்று சீறிய தங்கம் மலர்களைத் தோழியின் மீது விசிறி அடித்தாள்.

''ஐயோ பாவம்! பூக்கள் வீணாய்ப் போச்சு. அவற்றை என்மேலே விட்டெறிந்ததற்கு பதிலாக அவர் மீது வீசி இருந்தாலாவது ஜாலியாக இருந்திருக்கும்'' என்று தோழி தெரிவித்தாள்.

''ஐயோ! என்று முணங்கிய தங்கத்தின் முகம் செக்கச் சிவந்து விட்டது.

இத்தகைய இனிமைகளை ரசிக்காமல் இருந்து விட முடியுமா சந்திரனால்?

தோழி இல்லாத சமயங்களில், அவனுக்கும் தங்கத்துக்கும் என்ன பேசுவது என்றே புரியாமல் போய் விடுவதும் உண்டு. ராஜம்மா உடனிருந்தால் விஷயப் பஞ்சம் ஏற்படவே ஏற்படாதே என்று அவன் எண்ணுவான்.

தங்கம் சங்கோஜம் உடையவள். கலகலப்பாகப் பேசிப்பழகும் சுபாவம் அவளிடம் இல்லை. அதனால் சந்திரன்தான் பேச்சுக்குப் பொருள் தேடித் திண்டாட வேண்டிய அவசியம் ஏற்படும். சிலசமயம் அவன் பேச்சு அவளுக்கு 'போர்' அடித்துவிடும். ஆனால் அவளுடைய மௌனமே அவனுக்குப் பெரிய 'போர்' ஆக இருந்தது.

ராஜம்மா திடீரென்று தனது ஊருக்குப் போக நேர்ந்தது. திரும்பி வருவதற்குள் தங்கத்தின் காதல் வெறும் அரும்பு நிலையிலேயே இருக்காது என்று அவள் நினைத்தாள். இதற்குள் மலர்ச்சியுற்றிருக்கும். மணம் பரப்பும் நிலை வந்திருக்கும் என்று அவள் ஒரு கடிதத்தில் எழுதினாள். 'எல்லாம் வழக்கம் போல் தான்' என்று தங்கம் எழுதிய பதில் தோழிக்கு திருப்தி தரவில்லை. ஆகவே அவள் சந்திரனுக்குக் கடிதம் எழுதினாள்.

''நான் எவ்வளவோ காதல் கதைகள் படித்திருக்கிறேன். சினிமாவிலும் நாடகங்களிலும் பலரகமான காதல் ஜோடிகளைக் கண்டிருக்கிறேன். வாழ்க்கையிலும் அநேக காதலன் காதலிகளையும், அவர்கள் காதல் முடிவுகளையும் பற்றி அறிந்தது உண்டு. எனக்கு சந்திரன் –தங்கம் காதல் அதிசயமாகவே தோன்றுகிறது. இன்னும் ஆரம்பித்த இடத்திலேயே நிற்கிறதே அது! இதை அறியும்போது சிரிப்பதா அனுதாபப்

படுவதா என்றே எனக்குப் புரியவில்லை'' என்று அவள் எழுதினாள்.

சந்திரன் பதில் எழுதினான். அவள் தனது பண்பின் படி கேலி செய்தும் சுவையான விஷயங்கள் சேர்த்தும் கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தாள். சுவாரஸ்ய மில்லாமல் பதில் எழுதி வந்த தங்கம் நாளடைவில் கடிதம் எழுதுவதையே விட்டு விட்டாள். அவளைப் பற்றிக் குறைகூறியும் மனம் கசந்தும் எழுதி வந்த சந்திரன், ராஜம்மாளைத் துதி பாடத் தொடங்கியிருந் தான். அடிக்கடி அவளுக்குக் கடிதம் எழுதுவதில் ஆர்வம் காட்டினான் அவன்.

ரசமான பொழுதுபோக்கு என்று மகிழ்ச்சியோடு இவ் விவகாரத்தில் ஈடுபட்ட ராஜம்மா உண்மையை உணர்ந்து கொண்டாள். சந்திரன் தங்கத்தின்மீது கொண்டிருந்த காதல் கருகிவிட்டது; காதல் பயிரை அவள் சரியாக வளர்க்கத் தவறிவிட்டாள் என்பது புரிந்தது.

இனி என்ன செய்யலாம் என்ற யோசனை ராஜத்தை அலைக்கழித்தது. அவள் சந்திரனின் கடிதங் களுக்குப் பதில் எழுதாமலே இருந்து விட்டாள். அவள் எதிர்பார்க்கவில்லை சந்திரன் அவளைத் தேடி அவள் இருக்குமிடத்திற்கே வந்து விடுவான் என்று.

அவன் அவ்விதம் வந்தது ராஜத்துக்கு மகிழ்ச்சி தான் அளித்தது. எனினும் தன் சிநேகிதிக்காக அவள் பரிந்து பேசினாள். பலன்தான் கிட்டவில்லை.

ராஜம்மாளுக்குச் சந்திரனைப் பிடிக்காமல் இல்லை. அவன் தோற்றமும் குணங்களும் பேச்சும் அவளுக்குத் திருப்தியே தந்தன. ''தங்கம் காதலில் வெற்றி பெற வில்லை என்றால், அது தங்கத்தின் தவறுதான். சந்திரன் என்மீது அளவிலாக் காதல் கொண்டு விட்டதற்கு நானா பழி?'' என்று அவள் தன் நெஞ் சோடு கூறிக்கொண்டாள்.

சந்திரன் ராஜம்மாளைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான் என்ற செய்தி அறிந்ததும் தங்கம் பெருமூச்செறிந்தாள். அவள் உள்ளத்தில் பொறாமையும் ஆத்திரமும் 'திகு திகு'வென்று எரிந்தது.

"இந்த நோக்கத்தோடுதான் அவள் சிரித்துக் குலுக்கி அவன்கூட வலியவலியப் பேசினாள் போலிருக்கிறது!" என்றுதான் அவளால் எண்ணமுடிந்தது.

"தங்கம், நீ என்மீது வருத்தம் கொண்டிருக்கலாம். கோபப்படலாம். அதற்கு நான் என்ன செய்ய முடியும்? தலைவி சிறந்தவள் என்று நம்ப வேண்டிய காதல் தலைவன் தோழிதான் நல்லவள் என்று நினைக்க நேர்ந்துவிட்டால், அது யார் பிசகு? தலைவன் மீது தவறா? தலைவி பேரில்தான் தவறா? இதற்கு விடையை நீயேதான் கண்டு கொள்ள வேண்டும். என்னைப் பொறுத்த வரையில் நான் ஒன்று கூற விரும்பிகிறேன். உனக்காக நான் எவ்வளவோ வாதாடினேன். கடைசி வரையில், தோழி நல்ல தோழியாக விளங்கவே பாடுபட்டாள். அவ்வளவுதான்' என்று ராஜம்மா எழுதினாள்.

அந்தக் கடிதத்தை ஆத்திரத்தோடு கிழித்தெறிந்தாள் தங்கம்.

சந்திரன் என்ன நினைத்தான் என்றும் தெரிந்து கொள்ள வேண்டியதுதானே? "அவள் தங்கமாக இருக்கலாம். ஆனால், தங்கத்தின் தோழி வெள்ளியாக இருக்கவில்லையே! இணையில்லாத மாமணியாக அல்லவா வாய்த்துவிட்டாள். அதனால்தான், தங்கத்தின் தோழியை நான் என்னுடைய தோழியாய்—துணையாய் வாழ்வின் ஒளியாய் ஏற்றுக் கொண்டேன்' என்று அவன் எண்ணினான்.

தான் செய்த முடிவுக்காகச் சந்திரன் வருத்தம் கொள்ள நேர்ந்ததே இல்லை. ●

☆ 'மாத மலர்'—செப்டம்பர் 1968

# வாழ்க்கை

வெயில் தீக்கங்குகளைச் சொரிவதுபோல், அனலைப் பரப்பிக் கொண்டிருந்தது. ஈவு இரக்கம் இல்லாதவர்களின் உள்ளம் போல் வறண்டு கிடந்தது நிலம்.

உழைப்பை நம்பி வாழ்பவர்கள் அப்போதும் அரும் பாடுபட்டுக் கொண்டுதான் இருந்தார்கள்.

ஒரு கிழவன் மண்ணைக் கொத்திக் கிளறி என்னவோ செய்து கொண்டிருந்தான்.

அவனுக்குத் துணை அவன் மனைவி கிழவி.

இரண்டு பேருக்கும் உயிர் வாழ்வதற்கு உரம் அளித்தது அவர்கள் உழைப்பு. அதற்கு ஆதாரம் கொஞ்சம் நிலம்.

கிழவன் மண்வெட்டியால் கொத்தி மண்ணைச் சரி செய்து பாத்தி பிடித்தால், மண்ணில் கலந்து கிடக்கும் கற்கள், கட்டிகள் முதலிய வேண்டாத பொருட்களை அள்ளிக் கூடையில் சேர்த்து, சுமந்து சென்று அப்புறப் படுத்துவாள் கிழவி. அவன் விதைகளைத் தெளிப்பான்: அவள் தண்ணீர் இறைப்பாள். உழைப்பால் மெலிந்த கிழவனுக்கு உற்றதுணையாக உடனிருந்து ஊக்கம் கொடுத்து வந்தாள் அந்தக் கிழவி.

அவன் பெயர் யாருக்கும் தெரியாது. 'ஏ கிழவா!' என்றே எல்லோரும் அவனைக் கூப்பிடுவார்கள். அவளுக்கும் தனியாக ஒரு பெயர் இல்லாமலா இருக்

கும்? எனினும் 'கிழவி' என்றுதான் அவள் அழைக்கப் பட்டாள்.

அவனது வயது... அவனுக்கே தெரியாது. அவள் பிறந்த வருடத்தையும் நாளையும் எவரும் குறித்து வைத்திருக்கவுமில்லை. இரண்டு பேருக்கும் வயது அதிகமாகத்தான் இருக்கும். எவ்வளவு என்று கணக் கிட அவர்களும் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை: பிறரும் கவலைப்பட்டதில்லை.

அவர்கள் அறிந்தது உழைப்பு ஒன்றே. நேற்றுப் போல் இன்று, இன்றுபோல் நாளை. என்றும் ஒரே மாதிரித்தான். உழைப்பிலே உதயமாகி, உழைப்போடு அஸ்தமனமாகும்.

அவர்கள் தனிமைப்பட்டவர்கள். கிழவன் ஆகி விட்ட அந்த மனிதனுக்குக் கிழவி ஆகிவிட்ட ஒருத்தி தான் துணை. இருவருக்கும் அவர்களது உழைப்பே வாழ்விக்கும் சக்தியாக இருந்தது. உழைக்கவும், உயிர் வாழவும் அவர்கள் மண்ணை நம்பி இருந்தார்கள்.

வெயில் செஞ்சூலம் பாய்ச்சும் கொடிய நாட்களிலும் அவர்கள் உழைத்தார்கள். மழை நாட்களிலும் பாடுபட் டார்கள். மழை கொட்டுகிறபோது நனைந்தும், ஓடிப் பதுங்கியும், மழை நின்றதும் மீண்டும் மண்ணில் இறங்கியும் உழைத்தார்கள் உழைக்காமல் இருக்க முடியாது அவர்களால். பாடுபட்டால்தான் அரை வயிற்றுக் கஞ்சியாவது கிடைக்கும்.

ஒரு சமயம் மழையில் நனைந்தபடி குடிசைக்குத் திரும்பினான் கிழவன். ஜுரம் அவனைப் பற்றிக் கொண்டது. இரண்டு மூன்று நாட்கள் விடாது அடை மழை பெய்தது. அவனுக்குத் துணையாகக் கிழவியும், இருவருக்கும் துணையாகப் பட்டினியும் என்ற நிலையே நீடித்தது.

பனி மிகுந்த நேரங்கள் அவ்விருவரையும் சித்திர வதை செய்யும். குளிர் நிறைந்த அதிகாலை வேளைகள், காலத்தாலும் உழைப்பாலும் மெலிந்துவிட்ட அவ்வுடல்களை வெகுவாகச் சோதிக்கும். அத்தகைய நாட்களில் பல தினங்கள் அவர்களால் உழைக்க முடியாமல் போகும். உழைக்க ஆசை இருக்கும் உள்ளத்தில், ஆனால் உடலில் தெம்பு இருக்காது. அப்போதெல்லாம் அவர்கள் பட்டினி கிடக்க வேண்டிய அவசியமே ஏற்படும்.

அண்டை அயலார்கள் அபூர்வமாக எப்பொழுதாவது உதவி செய்வார்கள். ஒரு சில காசுகள்; ஒரு வேளை உணவு. சில சமயம் எப்பொழுது ரசம் அல்லது குழம்பு என்று உதவலாம். வாழ்க்கைக்கு தீயில் புடம் போடப்படுகிற சாதாரண மக்கள் வேறு என்ன உதவியைச் செய்யமுடியும்?

இவ்வித மனிதர்களுக்கு இயற்கை அணையாக நின்று உதவிபுரிய வேண்டும் எனும் அவசியமில்லையே. மேலும், இயற்கை இஷ்டம் போல் புரிந்து மகிழும் குறும்புத்தனச் சிறுவன் மாதிரி நடந்து கொள்கிறதே! பாடுகிறவர்களது உழைப்பின் பலன் எல்லாம் பாழாகும்படி—அவர்கள் நெஞ்சில் நெருப்பில் மூண்டெழவும், வயிற்றில் தீராத எரிச்சல் குடிபுகவும்—வழி செய்வதும் இயற்கையின் போக்கிரித்தனமேயன்றோ? வேண்டாத பொழுது கடும் மழையைக் கொட்டியும் தண்ணீர் தேவைப்படுகிற போது சுட்டெரிக்கும் வெயில் வீசியும், அவ்வப்போது புழுதிப் புயலையும் சூறைக் காற்றையும் அனுப்பியும் வெறியாட்டம் போடவில்லையா? அதன் கூத்து மனிதருக்கு வேதனையாக முடிகிறது.

கிழவனும், கிழவியும் உயிரைக் கொடுத்து உழைத்தார்கள். மண்ணை நம்பி விதை விதைத்தார்கள்.

பயிர் வளர்ந்து பலன் தருவதற்கு அவசியமான மழை வரத்தான் செய்யும் என்று நம்பிக்கையோடு வானத்தைப் பார்த்தபடி இருந்தார்கள்.

வானம் பொய்த்தது. வறட்சி பரவியது. பயிரிட்டவர்களின் நம்பிக்கை கருகியது. அவர்கள் வாழ்வில் ஒட்டிக்கொண்டிருந்த கொஞ்ச நஞ்சப் பசுமைகூடத் தீய்ந்தது.

கிழவனும், கிழவியும் கடும் வெயிலில் வதங்கினார்கள். வாழ்க்கைச் சூட்டினால் உருக்கி எடுக்கப்பட்டார்கள். அவர்கள் வயிறு ஒட்டியது. உடல் வெறும் எலும்புக்கூடு ஆயிற்று. சாப்பாட்டுக்கு வழியே இல்லை. எத்தனை காலத்துக்குத்தான் கடன் வாங்கிக் கடன் வாங்கி நாளோட்ட இயலும்? இல்லை. எவ்வளவு நாட்களுக்குத்தான் அண்டை அயலார் அவர்களுக்குக் கடனுக்குமேல் கடன் கொடுத்துக் கொண்டிருப்பார்கள்? அப்படிக் கடன் கேட்கிறபோதெல்லாம் தாராளமாக இவர்களுக்குக் கொடுத்துக்கொண்டே இருப்பதற்கு அவர்களிடம்தான் என்ன வசதி உண்டு?

ஆகவே, பட்டினி நிலைமைதான். இந்தப் பயங்கரமான அனுபவத்திலும் கிழவனுக்குத் துணை கிழவிதான். அவளுக்குத் துணை அவனே.

மழை வரும்; இன்று பெய்யும் என்று ஒவ்வொரு நாளும் எதிர்பார்ப்பதும், நாள் முடிவில் ஏமாறுவதும், பெருமூச்சு விட்டுப் புலம்புவதும் அவர்களுடைய நித்திய நியதி ஆகிவிட்டது.

அன்றும் அதே நிலைதான்.

மழை வரும் என்று எண்ணினார்கள். வரவேண்டும் என்று ஆசைப்பட்டார்கள் வராதா என்று ஏங்கினார்கள்.

மனிதர்கள் எதிர்பார்க்கிறபடி பரஸ்பரம் மனிதர்களே நடந்து கொள்வதில்லையே! இயற்கைதானா மனிதர் எண்ணுகிறபடி- எதிர் பார்க்கிறபடி-ஆசைப்படுகிறபடி நடந்து சகாயம் பண்ணப்போகிறது.

வெயில்தான் வறட்சியைப் படுவறட்சியாக்கிக் கொண்டிருந்தது.

கிழவன் பெருமூச்செறிந்தான். கிழவி தலைமீது கைவைத்தாள். அவர்கள் எப்படி வாழ்க்கையைக் கழிப்பது? பெரும் பகுதி கழிந்துபோன வாழ்க்கைதான்- இருப்பது வாழ்வின் எஞ்சிய துணுக்குத்தான். என்றாலும், உயிர் இருக்கிறவரை, உடலின் உணர்வுகள் அவியாது இருக்கிற வரை, அவஸ்தைகளும் உண்டு தானே? அவற்றின் தேவைகளைக் கவனிக்க வேண்டிய அவசியமும் அவர்களுக்கு உண்டு அல்லவா? அவற்றைச் சரி செய்வதற்குப் போதிய வலு இல்லாது போயின்-ஈடு கொடுத்துத் தாங்கிக் கொள்வதற்கு வேண்டிய தெம்பும் இல்லையென்றால்-

ஒவ்வொரு கணமும் ஒரு பிரச்னையாய், பயமாய், பூதமாய் மிரட்டுவதை எப்படித் தடுக்க முடியும்?

அவர்கள் திணறினார்கள். செயலற்றுத் திகைத் தார்கள். முனகி, முணுமுணுத்து, என்னென்னவோ பேசினார்கள். துணிந்து திட்டமிட்டார்கள்.

திட்டமிட்டபடி செயலாற்ற இயலுமா என்ற ஐயம் கிழவனுக்கு எழுந்தது. கிழவன் கிழவியைப் பார்த்தான். அவள் அவன் முகத்தையே கூர்ந்து கவனித்தாள்.

"இந்த வயசு காலத்திலே நமக்கு ஏன்தான் இந்தத் துயரமெல்லாம் ஏற்பட்டிருக்கிறதோ?" என்று முணு முணுத்தான் கிழவன்.

''எல்லாம் விதிப்படிதான் நடக்கும். அதை எழுதினவன் அழிச்செழுத மாட்டான்'' என்றாள் கிழவி.

இரண்டு பேரும் சேர்ந்து குடிசைக்குள் போனார்கள். தங்களுக்குப் பழக்கமான பொருட்களை, இடத்தை, சூழ்நிலையை எல்லாம் வேதனையோடு உற்று நோக்கினார்கள். ஒருவர் முகத்தை ஒருவர் வெகு நேரம் பார்த்துக் கொண்டே இருந்தார்கள்.

அவர்களுடைய கைகள் ஒரு சட்டியிலிருந்த தண்ணீரில் ஒரு பொடியைக்கொட்டின. தாராளமாகவே கொட்டின. கலக்கின. அவன் ஈயத்தம்ளரில் அவளுக்கு அதைக் கொடுத்தான்; சட்டியோடு தான் குடித்தான்.

வாழ்க்கையில் வேறு துணை அற்றுப்போன அவ்விருவருக்கும் முடிவில் 'எலிப் பாஷாணம்' துணையாக வாய்த்தது.

☆ 'எழில்' (தூத்துக்குடி) நவம்பர் 1972

# மெத்தப் படித்தவர்

புத்தகங்கள்தான் சுந்தரமூர்த்தியின் உலகம். எப்போதும் அவர் புத்தகமும் கையுமாகத்தான் காணப் படுவார். எல்லா அறைகளிலும், மேஜை மீதும், படுக்கிற கட்டிலில்கூட, பல வகையான புத்தகங்கள் இருக்கும். நினைத்தபோது எடுத்துப் படிப்பதற்கு வசதியாக.

சாப்பிடுகிறபோது கூட சுந்தரமூர்த்தி இடது கையில் புத்தகத்தைப் பிடித்தபடிதான் சாப்பிடுவார். படிப்பது அவருக்குப் பொழுதுபோக்கு இல்லை. அது அவருடைய வேலை என்றுகூடச் சொல்ல முடியாது. அதுதான் அவரது வாழ்க்கை; அது அவரது உயிர்மூச்சு.

நண்பர்கள் வந்தால் அவர்களோடு அவர் உற்சாக மாகப் பேசி மகிழ்வார். பெரும்பாலும் பேச்சு புத்தகங் களைப் பற்றியும், பத்திரிகைகளைப் பற்றியுமே இருக்கும். நாட்டுநடப்பு, சமூகப் பிரச்சனைகள், அரசியல்கட்சி விவகாரங்கள் முதலியன பற்றியும் அவர் காரசாரமாகக் கருத்துக்கள் கூறுவார்.

உலகத்தில் உள்ள எந்த விஷயம் குறித்தும் சுந்தரமூர்த்தி ஓங்கி அடித்துப் பேசுவார். வானத்தின் கீழ் நிலவுகிற சகல விஷயங்கள் பற்றியும் அவர் தீவிர மான கருத்துக்கள் தெரிவிக்கத் தயங்க மாட்டார். பிரமுகர்கள், தலைவர்கள், முக்கியமானவர்கள் பேசுகிற பேச்சுக்கள், எழுதுகிற எழுத்துக்களை, எல்லாம் படித்துவிட்டு, அவற்றை அங்கீகரித்தோ

அல்லது மறுத்தோ, பத்திரிகைகளுக்குக் கடிதங்கள் எழுதுவதிலும் அவருக்கு ஆர்வம் அதிகம்.

சுந்தமூர்த்தி ஒரு இன்டலெக்சுவல் - நல்ல அறிவாளி-சரியான அறிவுஜீவி என்று அவரை அறிந் திருப்பவர் குறிப்பிடுவது வழக்கம். அதில் அவருக்கும் பெருமைதான்.

"சுந்தரமா? அவனுக்கு என்ன தெரியும்? சும்மா புத்தகங்களை வச்சுப் படிச்சுக்கிட்டிருக்கத் தெரியும். மற்றபடி அவன் ஒரு இழவுக்கும் லாயக்கில்லை!"

இது சுந்தரமூர்த்தியின் உறவினர்களுடைய அபிப்பிராயம்.

அவர் மனைவி மீனாட்சிகூட அவருடைய படிப்பை யும், சகல பிரச்னைகள் சம்மந்தமான கருத்து உலுப்பு தல்களையும் பெரிதாக மதிப்பதில்லை.

"கடைக்குப் போயி நல்ல சாமானாப் பார்த்து வாங்கி வரத் துப்பில்லை. எப்பத் தேங்கா வாங்கி வந்தாலும் அழுகலாகத்தான் இருக்கும். காயைக் கொட்டிப் பார்த்து நல்ல தேங்காயா எடுக்கத் தெரியாது. கடைக்காரன் கொடுத்ததை வாங்கிக்கிட்டு வந்து நிற்பாக. காய்கறிகளையும் பார்த்து வாங்க சாமர்த்தியம் போதாது. சொத்தை சொள்ளை வாடல் வதங்கல்களை எல்லாம் கடைக்காரங்க இவுக தலையிலே கட்டிடுவாங்க. விலையும் அவன் கேட்டதைக் குறைக்காமல் கொடுத்துடுவாக. பேரம் பேசத் தெரியாது..."

இப்படி எவ்வளவோ அடுக்குவாள் அவள்.

சிலசமயம் சில்லறையைச் சரியாக எண்ணிப் பார்த்து வாங்காமல், கடைக்காரன் கொடுப்பதை அப்படியே வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு

விடுவார் சுந்தரமூர்த்தி. வீட்டில் வந்து கணக்குப் பார்க்கையில் காசுகள் குறையும். செல்லாத நாணயங்கள் கிழிந்த நோட்டுகள் இருக்கும். அதற்காக அவர் மனைவி சண்டை பிடிப்பாள்.

ஏதாவது சாமான் வாங்க, அல்லது ஏதோ முக்கிய விஷயமாக, அவர் கிளம்பிப் போவார். வழியில், ரொம்ப வும் வேண்டியவர் எவராவது எதிர்ப்பட்டு விடுவார். அவரோடு அந்த இடத்திலேயே நின்று, புத்தகங்கள் மற்றும் பத்திரிகைச் செய்திகள் பற்றி ஆர்வமாகப் பேசத் தொடங்கி விடுவார். நேரம் போவதே தெரியாது. பிறகு வீட்டுக்குத் திரும்புவார்.

மனைவி விசாரிக்கும்போதோ அல்லது வெகுநேரம் கழித்துத் தானாகவோ, 'அடடா, மறந்தே போனேனே' என்று அந்த முக்கிய காரியம் அவருக்கு நினைப்பு வரும். வருத்தமும் மனசில் எழும். என்ன செய்வது! அவருக்கு மறதி அதிகம்.

அன்றும் வழக்கம்போல் சுந்தரமூர்த்தி ஒரு பெரிய புத்தகத்தை படித்துக் கொண்டிருந்தார்.

"என்னய்யா, எப்படி இருக்கிறீர்?" என்று கேட்ட படி, அவருக்கு வேண்டியவர் ஒருவர் வந்து சேர்ந்தார்.

நமசிவாயம் என்று பெயர். கொஞ்சம் தொலைவில் உள்ள ஒரு கிராமத்தில் வசிப்பவர். அபூர்வமாக என்றைக்காவது ஒருநாள் வருவார். வந்தால், மணிக் கணக்கில் பேசிக் கொண்டிருப்பார்.

அவர் சுந்தரமூர்த்தி கருத்துக்களை மறுத்துப் பேசுவதில் உற்சாகம் காண்பவர். தீவிரமாக விவாதிப் பார். அன்றும் அப்படித்தான் நடந்தது.

நமசிவாயம் வந்ததும் சொன்னார்:

"உங்களிடம் போன வருசம் நான் ஐநூறு ரூபாய் அவசரத்துக்கு வாங்கிப் போனேன். கடனாகவே இருக்கட்டும். உரிய வட்டி சேர்த்துத் தந்துவிடுவதாகச் சொன்னேன் அல்லவா? இன்றைக்கு உங்க பணத்தைத் திருப்பிக் கொடுக்கலாம்னு வந்திருக்கேன். கொஞ்சம் பணம் கிடைச்சுது. கடனைத் திருப்பித் தந்துவிடணுமில்லையா? வட்டி என்ன ஆச்சுன்னு கணக்குப் பார்ப்போம். நோட்டிலே எழுதி வச்சிருப்பீகளே? அதை எடுங்க!"

"இருமய்யா. வீட்டிலே அவள் மார்க்கெட்டுக்குப் போயிருக்கிறா. வரட்டும். கணக்கு வழக்கு எல்லாம் அவள் டிபார்ட்மெண்டுதான். குறிச்சு வச்ச நோட்டு அவகிட்டேதான் இருக்கும்" என்று சுந்தரமூர்த்தி சொன்னார்.

பிறகு, நாட்டில் அதிகரித்து வரும் வன்முறைச் செயல்கள் பற்றிக் காரசாரமாகப் பேசலானார்.

நமசிவாயமும் கருத்துத் தெரிவித்தார்.

அரசியல் கட்சிகளின் போக்குகள், சினிமா, பத்திரிகை மற்றும் மக்களின் தன்மைகள் பற்றி எல்லாம் இரண்டு பேரும் உற்சாகமாகப் பேசினார்கள்.

இடையில், மனைவி வீட்டுக்கு வந்து அடுப்படி வேலையில் ஈடுபட்டு விட்டதுகூட சுந்தரமூர்த்திக்குத் தெரியாது. மரபுக் கவிதை செத்துவிட்டது என்று அவர் ஓங்கி அடித்துப் பேசிக் கொண்டிருந்தார்.

மரபுக் கவிதை சாகவில்லை; அது சாகவும் சாகாது என்று நமசிவாயம் தீவிரமாக மறுத்துப் பேசினார்.

இப்படி யதார்த்த இலக்கியம் பற்றியும், புதுக்கவிதையின் தேக்க நிலை குறித்தும் இருவரும் சூடாக விவாதித்து முடித்தார்கள்.

மணி ஓடியிருந்தது.

நமசிவாயம், ''அட, நான் வந்து ரொம்ப நேரமா யிட்டுதே! கீழ ரதவீதியிலே ஒருவரைப் பார்க்க வருவ தாகச் சொல்லியிருந்தேன். நான் வர்றேன்' என்று கூறி அவசரமாக விடை பெற்றுச் சென்றார்.

தமது விவாதத் திறமையையும், தம்முடைய கருத்துக்களை அழுத்தம் திருத்தமாக எடுத்துச் சொன்னதையும் எண்ணி மகிழ்ந்து போனார் சுந்தர மூர்த்தி. சட்டென அவர் மூளையில் ஒரு அதிர்வு ஏற்பட்டது.

நமசிவாயம் எதுக்காகவோ வந்தேன்னு சொன் னாரே ஆங், கடன் பணத்தை வட்டியோடு திருப்பித் தர வந்தேன்னார்... அடடா, பணத்தை அவர் கொடுக் கவே இல்லையே...

அவர் உள்ளத்தில் ஒரு உளைச்சல்...

'அடடா, பண விஷயம் மறந்தே போச்சே. இனிமே அவர் எப்ப வருவாரோ, அல்லது வராமலே போயிடு வாரோ.. ?

உண்மையாகவே அவர் வருத்தப்பட்டார். பணம் இனி திரும்பக் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற வருத்தத்துக்கு மேலாக ஒரு உறுத்தல் அவருக்கு.

—இது தெரிந்ததும் மீனாட்சி பிடிபிடின்னு பிடிச்சு சரியான கொடை கொடுப்பா. அவளுக்கு ரொம்பக் கோபம் வரத்தான் செய்யும்.

நீண்ட பெருமூச்செறிந்தார் சுந்தரமூர்த்தி

# காதல் செய்த காஞ்சனா

"டீ வசந்தா!"

"என்னடி, காஞ்சனா?"

"ரொம்ப போர் ஆக இல்லே?"

"ஆமாண்டி!"

"வரவர எல்லாமே போர் ஆக இருக்குடீ!"

"ஒரே...!"

இவளுக்கு 'ஒரே போர்' என்று சொல்லக்கூட முடியாத அளவுக்கு அலுப்பு. ஆகவே 'ஒரே' என்று மட்டும் அழுத்தமாகத் தெரிவித்தாள்.

"இதுக்கு என்னடி வசந்தா செய்யலாம்?"

"எனக்கு என்னடி தெரியும்?"

"பிகு பண்ணாதேடி, நீதான் பெரிய ஐடியா மன்னி ஆச்சே!"

'மன்னன்' என்பதற்குப் பெண்பால் 'மன்னி'தான் என்று இப்போது எத்தனையோ பேர் அடித்துப் பேசுகிறார்கள். அதனால் காஞ்சனா இப்படி 'நற்சான்று' வழங்கியதில் தவறு எதுவும் இருக்கமுடியாது அல்லவா?

"எனக்கு ஒரு ஐடியா தோணுது..."

"உன் மனசுதான் ஐடியாக்களின் களஞ்சியம் ஆச்சே, அங்கே ஒரே ஒரு ஐடியாதானா இருக்கும்? சரி, சொல்லு!"

“நீ எரிஞ்சு விழப் படாது.”

“நான் ஏன்டி எரிஞ்சி விழப் போறேன்?”

“அப்போ, காதல் பண்ணிப்பாரு!”

“ஏய் வசந்தா, என்னடி நீ...”

“பார்த்தியா பார்த்தியா, இதோ கோபம் வந்து கொண்டே இருக்கே உனக்கு!”

“நான் ஒண்ணும் கோபிக்கலே, நீதான் கேலி பண்றே!”

“விளையாட்டு இல்லேடி காஞ்சனா, நான் மெய்யாலுமே சொல்றேன்— வாழ்க்கை ஒரே போர் ஆயிட்டுது இல்லே? அதிலே குளுகுளு இனிமையும், ஜிலுஜிலு மகிழ்ச்சியும் வந்து சேரணுமின்னா. காதல் செய்ய வேண்டியதுதான்.”

“இது சரியான யோசனைதானா, வசந்தா?”

“இதிலே என்ன தப்பு? ‘காதல் செய்வீர் உலகத் தீரே’ன்னு’ஒரு பொயட் யோசனை-இல்லை, புத்திமதி கூறியிருக்கிறான். வெறும் பொயட் கூட இல்லை, மகாப் பொயட். ஐ மீன், மகாகவி!”

“அப்போ காதல் பண்ணலாம்கிறே?”

“ஆமாம், காதல் செய்து பார்ப்போம்!” என்று பாட்டாக இழுத்தாள் வசந்தா.

“சரி, யாரை லவ் பண்ணலாம்?”

“இனி நாம் கவலைப்பட வேண்டிய பிரச்னை அது தான்!” என்றாள் காஞ்சனாவின் தோழி.

காஞ்சனாவுக்கு வயசு பதின்மூன்று நடந்து கொண்டிருந்தது. அவள் தோழி வசந்தாவுக்குப் பதின் மூன்று முடிந்து சில மாதங்கள் ஆகியிருந்தன.

பெண்ணின் வளர்ச்சிப் பருவத்தில் இது ஒரு 'இன்ட்ரஸ்டிங்'கான கட்டம். அப்போது அவள் சிறுமியாகவும் இருப்பதில்லை; பெரியவளாகவும் ஆகிவிடுவதில்லை. அவள் உள்ளத்தில் பலவிதமான குறுகுறுப்புக்கள்; எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற துடிப்பு; மனசில், தனக்கு எல்லாம் தெரியும். தான் பெரியவள் என்ற நினைப்பு; செயல்களில் சிறுபிள்ளைத்தனம்; மற்றவர்கள் தன்னைச் சிறுபிள்ளையாகவே இன்னும் கருதுகிறார்களே என்ற ஆதங்கம் அதனால், தனது பெரிய மனுஷித்தனத்தை நிரூபிப்பதற்காக எதையாவது செய்ய வேண்டும் என்ற ஆசை இப்படிப் பல உணர்ச்சிக் குழப்பங்களாலும் அலைக்கழிக்கப்படும் 'இரண்டும் கெட்டான்' நிலையில் அவள் ஊசலிடுகிறாள்.

இந்த நிலையின் சரியான பிரதிநிதிகள் காஞ்சனாவும் அவள் சிநேகிதியும். பள்ளியில் படித்துக்கொண்டுதான் இருந்தார்கள். பள்ளிக்கூடப் பாடங்களைப் படிப்பதில் செலுத்துகிற அக்கறையைவிட அதிகமான சிரத்தையை சினிமாப் பாடங்களைப் பார்ப்பதிலும், மனசுக்குப் பிடித்த சில நடிகர், நடிகைகளைப் புகழ்ந்து பேசுவதிலும் காட்டினார்கள். இனிய கதைகளையும், மனோகரமான புத்தகங்களையும் வாசிப்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார்கள். எனவே, அன்றாட வாழ்வின் 'போரடிப்பு'க்கு மாற்றுக் காண அவர்கள் ஒரு தீர்மானம் நிறைவேற்றிக் கொண்டதில் அதிசயப்படுவதற்கு எதுவும் இல்லைதான்.

மறுநாள் "அதோ பாரடி, காஞ்சனா! அங்கே" என்று வசந்தா சுட்டிக் காட்டினாள்.

"என்னடி, என்ன?" என்று பரபரத்தாள் மற்றவள்.

"பக்கத்து வீட்டுப் பருவ மச்சான். பார்வையிலே படம் புடிச்சான்!" என்று அதற்குரிய நீட்டல் நிறுத்தல் களோடு பாட்டிழுத்தாள் வசந்தா.

அவள் காட்டிய வீட்டின் வராந்தாவில் ஓர் இளைஞன் பொழுது போகாமல் முழித்துக் கொண் டிருந்தான். 'கலர்' பார்வையில் பட்டது என்றால் அவன் கண்களில் மின்னல் தெறிக்கும். பளிச்சென்ற வர்ணத் தில் பாவாடை-தாவணி அணிந்து வந்த சின்னச் சிட்டுக்கள் அவன் கவனத்தைக் கவர்ந்தன—பார்த் தான்.

அவன் பார்த்ததை வசந்தா கவனித்துவிட்டாள். 'னவேதான் பாடினாள்.

"டி, அவர் உன்னைத்தாண்டி பார்க்கிறார்" ன்றாள் காஞ்சனா.

"இல்லைடி, உன்னைத்தான்" என்று மறுப்புரை 'டகார்'னு தெறித்தது வசந்தாவின் வாயிலிருந்து.

"இல்லை, உன்னைத்தான்!" என்ற சொற்களை வைத்துக் கொண்டு இரண்டு பேரும் 'டக் ஆஃப் வார். பண்ணினார்கள். அதில் அவர்களுக்கு ஓர் உற்சாகம்' 'போரடிப்பு'க்கு ஏதோ கொஞ்சம் மாற்று!

"அவர் காதில் விழப்போகிறதடி, வசந்தா!" என்று முணமுணத்தாள் காஞ்சனா.

"விழுந்தால் எனக்கென்ன, நானா அவரை லவ் பண்ணப் போறேன்?" என்று சிநேகிதி சீண்டினாள்.

"நான் ஒண்ணும்..." என்று இழுத்த காஞ்சனா வுக்கு வெட்கம் மேலிடவே, பேச்சுக்குப் போட்டாள் 'ஸடன் பிரேக்.'

அவள் விழி வண்டுகள் வட்டமிட்ட திசையை நோக்கி, அங்கிருந்தவன் பார்த்ததையும் கவனித்து விட்டு, வசந்தா குறும்பாகச் சிரித்தாள். "பார்வையிலே ஒரு சுகம், உன் பார்வை தந்த சுகம்!" என்று இசைத்தாள்.

"என்னடி நீ?" என்று காஞ்சனா கத்தியதற்கு, தோழியின் பதில் இடக்காக நீண்டது, "பார்த்தால் போதுமா? பேசிப் பழக வேண்டாமா?" என்று பாட்டிழுப்பாக.

"எனக்குக் கெட்ட கோபம் வரும்டி, வசந்தா!" என்று கோபக் குரல் காட்டிய காஞ்சனா, அவள் பின்னலைப் பற்றி இழுக்கக் கை நீட்டினாள்.

அவள் பிடியில் சிக்காமல் துள்ளி ஓட, இவள் துரத்த, ஜாலி விளையாட்டாகத் திரும்பியது அவர்கள் போக்கு.

பார்த்துக் கொண்டிருந்தவன் ரசனைக்கு நல்ல விருந்து.

அவனுக்கு இருபத்தைந்துக்கு மேல் முப்பதுக்குள் எந்த வயசும் இருக்கலாம். 'நவயுகடிசைன்: நாகரிக மாடல்.' எங்கோ ஓர் ஆபீசில் ஏதோ ஒரு வேலை. உடம்பிலே பிடிக்காத வேலை மட்டுமல்ல, ஓய்வாகப் பொழுது போக்க நிறையவே நேரம் இருந்தது என்பதும் அதில் முக்கிய 'பாயிண்ட்.' எப்படியாவது இனிமையாகப் பொழுது போக வேண்டும்—இது தவிர வேறு முக்கிய நோக்கம் எதுவும் அவனுக்கு வாழ்க்கையில் இருந்ததாகத் தெரியவில்லை.

அவன் அந்தப் பெண்களை முதலில் சும்மா பார்த்தான். அவ்விருவரும் தன்னைப் பார்ப்பதும், என்னவோ சொல்லிச் சிரிப்பதும், மீண்டும் பார்ப்பது

மாக இருப்பதைக் கவனித்ததும் 'அவங்க நம்மைப் பத்தித்தான் பேசிக்கிறாங்க' என்று அவன் மனம் உறுதி கூறியது அவர்களது கண்கள் பேசிய ரகசியம் அவன் மனசைக் கிளுகிளுக்க வைத்தது.

''பெண் எப்போது பெரியவள் ஆகிறாள்?'' என்றொரு கேள்விக்கு, 'அவள் உள்ளத்து ரகசியங்களை அவளுடைய கண்கள் பேசக் கற்றுக் கொள்கிறபோது' என்று ஒரு புத்திசாலி பதில் கூறியிருந்தான். 'அது கரெக்ட்! இந்தப் பெண்களும் பெரிய ஆளுகதான்! என்று அவன் மனக்குறளி பேசியது. 'சரி, நமக்கென்ன? நாமும் பார்த்து வைப்போமே! சேதாரம் இல்லாத பொழுதுபோக்கு! ஹார்ம் லெஸ் பாஸ் டைம்!' என்று அவன் மனம் வழி வகுத்துக் கொடுத்தது.

காஞ்சனா கண்ணாடி முன் நின்றபோது வசந்தா வந்து சேர்ந்தாள். சும்மா வரவில்லை ''விஷயம் தெரியுமாடி உனக்கு?'' என்று கேட்டுக்கொண்டே வந்தாள்.

முன்பெல்லாம் காஞ்சனா அரைமணி நேரம் முக ஒப்பனைக்காக ஒதுக்கினாள் என்றால், இப்போது சில தினங்களாக முக்கால் மணி நேரம் கண்ணாடி முன் போக்கினாள். பவுடரைப் பூசிப் பூசி அழித்தும், கண் மையைத் தீட்டியும் நீட்டியும், நெற்றிப் பொட்டை விதம் விதமாக வைத்தும் திருத்தியும், பல்வேறு கோணங்களில் 'போஸ்' கொடுத்துப் பொழுது போக்கினாள். ,நான் அவளைப்போல இருக்கேனா? இல்லை, இவளைப்போல இருக்கேனா? அந்த ஸ்டார் மாதிரி தோற்றம் இருக்குன்னு சில பேரு சொல்றாங்களே, அது நிசமா?' என்று கண்ணாடியை அடிக்கடி கேட்டுக் கொண்டாள். எவளோ ஓர் அழகியின் கண்ணாடி அன்பாகப் பதில் சொல்லும் என்று அவள் கதையில்

படித்திருந்தாள். என்ன செய்வது? அவள் அழகைப் படித்துக் காட்டிய கண்ணாடி 'மக்குப் பிளாஸ்திரி'யாக இருந்தது.

இருந்தாலும் பரவாயில்லை, அவளுக்குப் பரிசு அந்த இளைஞன் கண்களில் மின்னிடும் புத்தொளியில் கிடைத்துவிடும். அதற்காக அவள், அவன் வராந்தாவில் இருக்கும் சமயங்களில், வேலை எதுவும் இல்லாத போதும் வேலைகள் இருப்பதுபோல் அப்படியும் இப்படியும் நடப்பதையும் குதித்து ஓடுவதையும் மேற்கொண்டாள். அவள் மனம் இன்பச் சிறகுகள் கட்டிப் பறந்தன.

அவள் உற்சாகத்துக்கு ஊக்கம் ஊட்டுவதில் வசந்தா ஆர்வம் காட்டினாள். அவள் வீடு கொஞ்சம் தள்ளியிருந்தது. தோழிக்காகத் தான் தகவல்கள் சேகரிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பதாக அவள் சொன்னாள்.

இப்போதும் அப்படி ஒரு சேதியோடுதான் அவள் வந்திருந்தாள்.

"என்னது, சொல்லேன்?"

"அவர் பேர் என்ன தெரியுமா, காஞ்சனா?"

"நான் என்ன கண்டேன்?"

"சந்தர்...ஆமாம், சந்...தர்!"

"உனக்கு எப்படித் தெரிஞ்சது?"

"அந்த வீட்டிலே ஒரு பெரியம்மா இருக்காங்க, அவங்களை ஃபிரண்ட் பிடிச்சேன்..."

"நீ அந்த வீட்டுக்குப் போனியா?"

"ஆமா, போனா என்ன?"

"ஒண்ணுமில்லே!" என்று இழுத்த காஞ்சனாவின் குரலில் கொஞ்சம் பொறாமை கலந்திருந்தது. அதை உணரும் திறம் தோழிக்கு இல்லை.

"சந்தர்! அருமையா இல்லே?" என்று மிட்டாயை இனிமையாகச் சுவைப்பதுபோல் ரசித்துப் பேசினாள் வசந்தா.

"ஊம்."

"அல்லியை மலர வைக்கும் சந்திரன்; உன் முகம் மலர வைக்கும் சந்தர் நோக்கு, இல்லையாடி?"

"போதும், நிறுத்து உன் வசனத்தை!" என்று தடை விதித்தாள் காஞ்சனா.

எனினும் வசந்தா சந்தரைப் பற்றி ஏதாவது சொல்லிக் கொண்டுதான் இருந்தாள். தினந்தோறும் சந்திக்கும் ஒவ்வொரு தடவையும் அவனைப் பற்றிச் சொல்வதும், சிநேகிதியைக் கேலி செய்வதும் அவளுக்குப் பிடித்த விளையாட்டு ஆகிவிட்டது. "இனி அடுத்த கட்டம் என்ன? பிளான் ஏதேனும் வச்சிரிக்கியா?" என்று சீண்டி விட்டு, "நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும்; நாளோடும் பொழுதோடும் உறவாட வேண்டும்!" என்று பாட்டிழுப்பாள்.

அப்போதெல்லாம் காஞ்சனா வெட்கமுற்றுக் குழம்பி, "சரிதான், போடி!" என்று முணகுவாள்.

ஒரு நாள் வசந்தா ஒரு பத்திரிகை கொண்டு வந்தாள்.

"ஏதுடீ இது?" என்று காஞ்சனா ஆவலோடு கேட்கவும், அவள் பதில் சொல்வதில் ரொம்பவும் பிகு பண்ணிவிட்டு, "சந்தர் வீட்டில் வாங்கி வந்தேன்" என்றாள்.

"அவர் கையிலிருந்தா வாங்கினே?"

"ஊகுங், அந்த அம்மாகிட்டே கேட்டு வாங்கி னேன்!" என்றாள். அந்த வீட்டில் நிறைய புத்தகங் களும், பத்திரிகைகளும் இருப்பதுபற்றிச் சொன்னாள் "நீயும் என்னோடு வாயேன்டி. அந்த அம்மா நல்ல வங்க, அதோடு அவரையும்... உம்... உம்... உன் லவரை யும் பார்த்த மாதிரி இருக்கும்!" என்றாள்.

இது போன்ற 'கெண்டைகள் காஞ்சனாவின் உள்ளத்தில் ஒரு கிளுகிளுப்பை உண்டாக்கிய போதி லும், வெளிக்குச் சீறிப்பாய்வதை வழக்கமாக்கிக் கொண் டாள். இப்போது அப்படித்தான் நடந்தது. "போடி, நீ பெரிய இது! நீயே அவரோடு பேசு, பழகு, போ, நான் ஒண்ணும் யாரையும் இது பண்ணலே!" என்று சிடுசிடுந்தாள்.

"காஞ்சனா, நான் சொல்றதைக் கேளு. நீ லவ் லெட்டர் எழுது. அதை இந்தப் பத்திரிகைக்குள் வச்சு அவரிடம் கொடுத்துவிடலாம். காதல் வளர்க்கும் வழியிலே இதுவும் ஒண்ணுதானே?"

"நான் உன்னிடம் யோசனை கேட்கலியே!"

"இருந்தாலும், இவ்விஷயத்தில் நீ தலைவி, நான் தோழியில்லையா? தோழி தலைவிக்கு ஆற்றும் உதவி யாதெனின், தலைவி தன் காதல் வெற்றி பெறச் செயல். இது திருவள்ளுவர் எழுதி வைக்க மறந்துவிட்ட 'குறள்' அதனா'லே '

"இப்படிச் செய்யணும்!" என்று தோழியின் தலை யில் 'ணங்'கென்று ஒரு குட்டு வைத்தாள் காஞ்சனா. அவள் பதிலடி கொடுக்கப் பாய்வதற்குள் இவள் பறந் தோடிப் போனாள்!

இந்த விளையாட்டு, அல்லது நாடகம், அல்லது ஸீரியஸ் நட வடிக்கை எது வென்று காஞ்சனாவினால் நிச்சயமாகத் தீர்மானிக்க முடியாத ஒன்று - அவளுக்கு ரசிக்கத்தக்கதாகவும், சுவை மிக்கதாகவுமே இருந்தது.

அவளும் வசந்தாவும் அந்த வீட்டுக்கு முன்னால் போகிற சமையங்களில், அவள் கள்ளத்தனமாகப் பார்வையை வீசுவாள். தோழி சந்தர் பக்கம் பார்த்து விட்டு இவளை நோக்கி குறும்புத்தனமாகச் சிரிக்கையில் இவள் முகம் சிவப்பேறிவிடும்.

அவள் மட்டும் தனியாக நடக்கையில் சற்றுத் தைரியமாக அவன் முகத்தைப் பார்ப்பாள். அவன் புன்முறுவல் பூப்பதுபோல் தோன்றும். உடனே அவள் குழப்பமுற்றுத் தலை கவிழ்ந்து நடப்பாள். பிறகும். அவன் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பான் என்ற உள்ளக் குறுகுறுப்புடன் தலைநிமிராமலே திரும்பிச் செல்வாள்.

சங்கோஜியான இந்தப் பெண்ணின் போக்குகளைச் சந்தர் ரசிக்கத் தவறவில்லை. கலகலப்பாகத் திரியும் வசந்தாவின் துணிச்சலை அவன் வெகுவாக வரவேற்றான்.

ஒரு நாள் மாலை நேரம். காஞ்சனா சிரத்தையோடு 'மேக்கப்' செய்து கொண்டு, ஜம்மென்று அழகை எடுத்துக் காட்டும் 'டிரஸ்' அணிந்து, அவன் அந்த இடத்தில் இருப்பான் என்ற நிச்சயமான நம்பிக்கை மனசில் உற்சாகத்தையும் உவகையும் எழுப்பிவிட, "வசந்தா வீட்டுக்குப் போயிட்டு வறேன்மா!" என்று 'ஸ்டைட்'லாக வந்தாள்.

சந்தர் வழக்கமான இடத்தில் இருந்தான். ஆனால், அவள் எதிர்பாராத ஒன்றும் அவளுக்காக அங்கே காத்திருந்தது.

அவன் அருகே வசந்தாவும் நின்றாள், சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டு, அவனைத் தொடுவதுபோல் அவள் ஒட்டி நின்றும், அவன் பேச்சைக் கேட்டுச் சிரித்தபடி விலகியும்...

"டான்ஸ் ஆடுகிறாளா, டான்ஸ்?" என்று கனன்றது காஞ்சனாவின் உள்ளம். "மானம் கெட்டவ, வெட்கம் இல்லாம இளிச்சுக்கிட்டு... என்னமா நிக்கறா பாரேன், அவனை இடிக்கிற மாதிரி... அவனும் தேன் குடிச்ச குரங்கு மாதிரி இந்தத் தேவாங்கு மூஞ்சியையே பார்த்துக்கிட்டு, பல்லைப் பல்லைக் காட்டிக்கிட்டு... ஐயே, சகிக்கலே!"

அவள் மனம் குமைந்து குமுறியது.

திரும்பி வீட்டுக்கே போய்விடலாமா என்று நினைத்தாள். 'எது எக்கேடு கெட்டால் நமக்கென்ன, நாம் பாட்டுக்கு நேரே போவோம்' என்று துணிந்து நடந்தாள். 'அந்தப் பக்கம் பார்க்கப்படாது' என்று தீர்மானம் கொண்டு வந்த மனசினாலேயே அதைக் கடைப்பிடிக்க இயலவில்லை. 'இப்ப என்ன செய்றாங்க, பாரேன்!' என்று தூண்டியது.

"அதோ, உன் ஃபிரண்டு வந்துட்டா!" என்று அவன் வசந்தாவிடம் சொன்னது காஞ்சனாவின் காதிலும் விழுந்தது.

திரும்பிப் பார்த்த வசந்தா சிரித்தாள். "காஞ்சனா, இங்கே வாயேன்!" என்று கூப்பிட்டாள்.

காஞ்சனா ஒன்றும் பேசாமல் விடுவிடென நடந்தாள்.

"காஞ்ச், நில்லுடீ... நில்லேன், ஒரு சமாச்சாரம்" என்று கூறியபடி, ஒரு துள்ளுத் துள்ளி ஓடிவந்தாள் தோழி.

"அவனுக்குத் தன் அழகையும் அலங்காரத்தையும் காட்றா. வெட்கங் கெட்டவ!" என்று, தன்னை மறந்து சிநேகிதியை மனசில் பழித்துக் கொண்டே காஞ்சனா நடந்தாள்.

ஓடி வந்து அவளைப் பிடித்து நிறுத்திய வசந்தா, "டியே, என்னடி இது? கூப்பிடக் கூப்பிட நீ பாட்டுக் குப் போறியே?" என்றாள்.

"நீ நடத்தற லவ் சீனை வேடிக்கை பார்க்க நிற்கணும்கிறியா?"

பொறாமையும் கோபமும் காஞ்சனாவின் பேச்சில் வெடித்தன.

வசந்தா திகைப்புடன் அவள் முகத்தைப் பார்த்தாள். "என்ன.. நீ.. வந்து..." திணறினாள்.

...தெரியும்டீ, திருடி! இப்போல்ல புரியுது!" என்று கத்தினாள் காஞ்சனா.

"என்ன, என்ன புரியுது?"

"நீ உன்... உன்... காதலை மறைக்கிறதுக்காக அடிக்கடி என்னைக் கிண்டல் பண்ணி வந்திருக்கிறதே! அவரைப் பத்திப் பேசறது உனக்கு இனிப்பாயிருந் திருக்கு. அதனாலே எனக்காகப் பரிந்து பேசற மாதிரி வாய் ஓயாது அவர் புரவோலம் பாடியிருக்கிறே! அவர் வீட்டிலே அம்மா இருக்கிறா, கிழவி இருக்கிறான்னு சொல்லி என்னை ஏமாத்தி, நீ அடிக்கடி அவரைச் சந்திச்சு இளிச்சிப் பேசிக்கிட்டு வந்திருக்கிறே...!"

வசந்தாவுக்கும் ஆத்திரம் ஏற்பட்டது. "ஆமாம்டி ஆமாம்; அப்படித்தான். அது என் இஷ்டம். உனக் கென்ன அதைப் பத்தி?" என்று முறைத்தாள்.

"நீ எப்படிப் போனா எனக்கென்னடி? ரொம்ப நல்லவ மாதிரி நடிச்சுக்கிட்டு என்னைக் கேலி பண்ணினியே, அதுக்காகத்தான்..."

"இப்ப என்னடி செய்யணுங்கிறே?"

சிங்காரச் சிட்டுக்களாய்த் திரிந்த இரு பெண்களும் 'உர்-உர்' ரென்று ஒன்றை ஒன்று முறைத்து, மேலே பாய்ந்து ஒன்றையொன்று பிறாண்டத் தயாராகிவிட்ட பூனைகள் மாதிரி தோன்றினார்கள்.

சந்தருக்கு இது மிகவும் ஜோரான திருப்பமாகத் தென்பட்டது. ஏகப்பட்ட மகிழ்ச்சி அவனுக்கு.

"வெட்கம் கெட்ட சிறுக்கி!" என்று ஏசினாள் காஞ்சனா.

"ஓகோ, அவ்வளவுக்கு ஆயிட்டுதா?" என்று கூவி அவள் கன்னத்தில் ஓங்கி அறைந்தாள் வசந்தா.

"என் கை என்ன, புளியங்கா பறிக்கவா போயிருக்கு?" என்று சொல்லி, 'பளார், பளா'ரென இரண்டு அறைகள் கொடுத்தாள் காஞ்சனா. "ஷேம்! உன்னுடன் தெருவில் நின்று பேசுவதே வெட்கக்கேடு!" என்று கூச்சலிட்டபடி வந்த வழியே திரும்பினாள் காஞ்சனா.

வசந்தா மூஞ்சியை உம்மென்று வைத்துக்கொண்டு, 'நாய், பேய்' என்று மனசில் திட்டியவாறு, தன் வீட்டுக்குப் போனாள்.

"இந்தச் சிடுமூஞ்சியோடு இனி யாரு பேசப் போறா? ஷேமாம் ஷேம்! செங் குரங்கு!"

அவள் மனசுக்குத் திருப்தி ஏற்படவேயில்லை.

மறு நாள் காஞ்சனாவின் மனம் ஆனந்தத்தினால் கூத்தாடுவதற்கு வகை செய்த சேதி ஒன்று அவள் காதில் விழுந்தது. அவளுடைய அம்மாவும், இன்னொரு பெரியவளும் 'ஊர்க்கதை நாட்டுக் கதை எல்லாம்' பேசிக் கொண்டிருந்தார்கள். பேச்சோடு பேச்சாக இதுவும் ஒலித்தது.

"சங்கதி தெரியுமா, அக்கா? அந்த மூணாம் வீட்டிலே ஒரு பிள்ளையாண்டான் இருப்பானே, எப்ப பார்த்தாலும் வராந்தாவிலே உட்கார்ந்து, வழியோடு யாரு போறா, யாரு வாறான்னு முழிச்சுக்கிட்டிருப்பானே அந்த ஆந்தைப் பையன் அடுத்த தெருவிலே இருக்கிற ஒருத்தியைக் கூட்டிக்கிட்டு எங்கேயோ போயிட்டா னாம். அவனும், அவன் கூட ஆபீசிலே வேலை பார்க்கிற பொண்ணும்தான் அப்படிப் போயிருக்காம், ரெண்டு பேருக்கும் என்னவோ சொல்றாளே, இப்ப எங்கே பார்த்தாலும் அதாத்தானே இருக்கு— காதலா?... ஆங் காதல், அது ஏற்பட்டு வளர்ந்து வந்ததாம். பொண்ணு வீட்டிலே கண்டிச்சாங்களாம். அதனாலே ரெண்டு பேரும் ஒத்துப் பேசி எங்கேயோ போயிட் டாங்க... பரவாயில்லே, ரெண்டு பேரும் சம்பாதிக்கி றாங்க. கல்யாணம் செய்துக்கிட்டு குடும்பம் நடத்து வாங்க!"

காஞ்சனாவின் உள்ளத்திலே ஊற்றெடுத்துப் பெருகிய உற்சாகம் பல நூறு மணிகளின் 'கிண கிண'ப்பு களாய்ச் சிதறி வெடித்தது. சிரிப்பின் வடிவிலே.

"வேணும், இந்த வசந்தாக் குரங்குக்கு நல்லா வேணும். இப்போ அவ மூஞ்சியைப் பார்க்கணுமே?" என்று அவள் மனம் பேசியது.

இந்த உற்சாக வெள்ளம் அவளுடைய ஏமாற்றத்தை யும் தோல்வியையும் இருந்த இடம் தெரியாமல் அடித்துச் சென்றுவிட்டது. தான் 'ஷேம்' போட்டதை யும், அவளுடைய 'சண்டைக்காரி' என்பதையும் மறந்து விட்டு, தோழியைக் கண்டு களிக்கும் ஆவல் உந்த, வசந்தாவின் வீடு நோக்கி நடந்தாள் காஞ்சனா!

☆ 'தினமணி கதிர்' 24-4-70.

# சிறுகுறும்பு

"உமக்குப் பார்க்கும் கண்களும் ரசிக்கும் மனமும் இருக்க வேண்டும். அதுதான் முக்கியம்" என்றது சிதம்பரத்தின் மனக்குறளி.

"பார்வை என்பது எல்லோருக்கும் இயல்பாக அமைந்த ஒரு திறன். ஆனால், பார்ப்பது என்பது தனிப்பட்ட கலை!" என்றும் அது குறிப்பிட்டது.

சிதம்பரம் அப்போது ஓடும் ரயிலின் மூன்றாம் வகுப்புப் பெட்டியில் தூங்காமல் உட்கார்ந்திருந்தான். கூட்டம் நிறைந்த சூழ்நிலைதான்.

அவன் வண்டி வண்டியாகத் தேடி, ஒரு பெட்டியைத் தேர்ந்து, உள்ளே புகுந்து, இடம் பிடித்து, ஜன்னல் ஓரத்து மூலையில் சுகமாகச் சாய்ந்திருந்த போது, அந்தச் சூழல் வறண்டதாகத்தான் இருந்தது. பிறகு ஒரு பிரயாணி, தன் மனைவி, குழந்தை, பெட்டிகள் சகிதம் வந்து சேர்ந்தான்.

"இவனுடைய சகோதரியோ என்று எண்ணத் தூண்டும் முகத்தோற்றம் இவளுக்கு இருக்கிறது" என்று சிதம்பரம் நினைத்தான். "இவர்கள் இங்கே வந்து சேர்ந்ததனால் அதிகமான இடைஞ்சல் எதுவும் ஏற்பட்டு விடவில்லை!" என்று விமர்சித்தது அவன் மனம்.

பட்டாடையும் பளபளப்பும் பெற்றிருந்த அந்த இளம்பெண் வறண்ட இடத்துக்குக் குளுமையும்,

கலரும், கவர்ச்சியும் சேர்த்தாள். அதனால் அவனுக்குச் சிறிது மகிழ்ச்சிகூட.

இதை எண்ணி அவன் மகிழ்வுற்றிருந்த வேளையில் வந்து சேர்ந்தது ஒரு கும்பல். தெற்குக் கடைசி ஊர் ஒன்றிலிருந்து திருப்பதிக்கு வந்து விட்டு, மறுபடியும் சொந்த ஊருக்குப் பிரயாணமாகும் பெரிய குடும்பம் அது. குடும்பத் தலைவன், தலைவி, மாமியார், அம்மா, குழந்தைகள், பெரிய பெரிய பெட்டிகள், படுக்கைகள், மூட்டை முடிச்சுக்கள் எல்லாமாகச் சேர்ந்து இடம் முழுவதையும் அடைத்துக் கொண்டு நெருக்கடி வளர்ப்பதில் ஆர்வம் காட்டியது அக்கூட்டம்.

சிறிதுநேரம் வரைதான். பிறகு, மணி ஆக ஆக, வண்டி ஓடஓட, இரவு நேரப் பயணிகள் எப்படி எப்படியோ விழுந்து கிடந்து, தூங்குவதில் உற்சாகம் காட்டுவது இயல்பு எனும் பொது விதி அங்கும் ஆட்சி புரியலாயிற்று.

அகலமில்லாத பெஞ்சுகளில், கிடைத்த இடத்தில், ஒடுங்கியும் கோணியும் படுத்துக் கிடந்தும், திரும்பியும் ஓய்வு பெற்றுக் கொண்டிருந்தார்கள் அவர்கள். அப்படித் தூங்குகிறவர்கள் திரும்புகிற போதும், மீண்டும் மறு பக்கம் பார்த்துப் புரண்டு தூங்குகிற போதும் பெண்களின் பல விதத் தூக்க நிலைத் தோற்றங்களைக் கண்டு ரசிக்கக் கூடிய வாய்ப்பு விழித்துக் கொண்டிருக்கும் பிரயாணியான சிதம்பரத்துக்குக் கிட்டியது.

அதனால்தான் அவன் மனம் பார்வை விஷயமாக எண்ண அலை வீச நேர்ந்தது.

''மனைவி என்னும் ஒருத்தியோடு தனி அறையில் தூங்கும் பழக்கமுடைய ஆண் கண்டு களிப்பதைவிட அதிகப்படியான அழகுக் காட்சிகளை, இன்டரஸ்டிங் போஸ்களை, அன்— இன்டல்ஷனல் வெளிச்சங்களை,

அதாவது வேண்டுமென்றே செய்யப்படாத- தன்னினை வற்றுத் தானே நிகழ்ந்துவிடுகிற திரை நீக்கங்களை, விதம் விதமான பெண்களிடம் பார்த்து இன்புறும் பாக்கியம் இரவு நேர ரயிலில் தூங்காது விழித்திருக்கும் வீணனுக்கு வந்து சேர்கிறது'' என்று அவன் எண்ணிக் கொண்டான்.

அவன் பார்வை எதிர் பெஞ்சு மீது படிந்தது. கண்களை பிடித்திழுத்து அங்கேயே நின்று விடும்படி செய்யும் தோற்றம்தான்.

நீலப்பட்டு உடுத்திய உருவம். எடுப்பான பருவத் திரட்சிகளையும் பிடிப்புக்களையும், நெளிவு வளைவுகளையும் பெற்றிருந்த பெண். மினுமினுக்கும் வெண்மை என்றும் சொல்ல முடியாத, மஞ்சள் என்றும் கொள்ள முடியாத, ஆயினும் தாழம்பூ நிறம் என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும் என்று நினைக்க வைக்கும் நிறத்தைக் கொண்டிருந்த யுவதி படுத்துக் கிடந்த ஒடுங்கல் தோற்றம் அவனைக் கிறக்கியது. அவள் திரும்பிப்படுத்த கோலமும், முன் புற அழகு காட்டிய நிலையும், ஆழ்துயில் பயின்ற எழில் முகத்து அமைதிக் கொலுவும் காணுந்தோறும் காணுந்தோறும், மீண்டும் மீண்டும் காணவேண்டும் எனும் ஆசையைத் தூண்டும் அற்புத இனிமைகளாகத் திகழ்ந்தன.

சிதம்பரம் மற்றவர்களையும் கவனித்தான்.

அந்தக் குடும்பத்தின் இளம்பெண் அழகியுமல்ல, அலங்காரியுமல்ல; குரூபியுமல்ல; கோரமும் இல்லை. கண்டு சகிக்கக்கூடிய சராசரிப் பெண். தூங்கும் நிலையில் அவளிடம் ஒரு வசீகரம் சூழ்ந்திருந்தது. சிதம்பரம் இருந்த பெஞ்சில்தான் அவள் தூங்கிக் கிடந்தாள்.

எதிர்ப்பெஞ்சில் துயில் புரிந்த அழகி, தலைமாட்டில் கணவனும், கால்பக்கம் எவளோ ஒருத்தியும் இருக்க.

கால்களை மடக்கி, தானே ஒடுங்கிக் கோணிக் கிடக்க நேர்ந்தது. இந்தப் பெஞ்சில், சிதம்பரத்தின் அருகில், தூங்கியவளுக்கு நல்ல வசதி.

அவள் தலைமாட்டில், சாளரத்தை ஒட்டி, அவன் ஒடுங்கியிருந்தான். பெஞ்சில் இடம் பிடித்து அமர்ந்தி ருந்த மற்றவர்கள் கீழே பலகைப் பரப்பிலும், மேலே கட்டைகளிலும் படுக்கப் போய்விட்டார்கள். எனவே, அந்தப் பெண் கால்களை நீட்டிச் சுகமாகப் படுத்துத் தூங்க முடிந்தது. வாயினால் ஊதி ஊதி, உள்ளே காற்றைப் புகச் செய்து பருமனாக்கிக் கொள்ளக்கூடிய ரப்பர் தலையணை வேறு வைத்திருந்தாள் அவள். ஓடும் வண்டியின் அசைவு காரணமாக அவளது உணர்வற்ற உடல் நகர்ந்து மெதுமெதுவாக அவனைத் தொட நெருங்கிக் கொண்டிருந்தது. அவள் தலை அவனைத் தொட்டுவிட்டது. தடித்த சடைப் பின்னல் தலையை அழுத்தியிருக்கும் போலும். அவள் விழிக்காமலே, அதை எடுத்துப் பின்னால் தலைக்கு மேல் வீசினாள். அப்படி வீசிய வேகத்தில் அது நெளிந்து வந்து சிதம்பரத்தின் மடிமீது விழுந்தது. மினுமினுக்கும் கருநாகம் போன்ற குழற் பின்னல் அது.

அதைத் தொட வேண்டும் என்ற ஆசை சிதம்பரத் துக்கு எழுந்தது. அவ்வாறு தொட்டால் அவள் விழித்து விடுவாளோ என்ற பயமும் சந்தேகமும் கூடவே தோன்றின. தூங்கும் பெண்ணின் கூந்தலைத் தொடுவ தனால் அவள் உணர்வு விழிப்பு பெறப்போவதில்லை என்று துணிந்தான் அவன்.

பெண்ணின் கூந்தல் அழகு, அதன் மென்மை, இனிமை முதலியன பற்றியும், அதை விரும்புவதாலும், பிடித்து இழுப்பதாலும் ஏற்படக் கூடிய மகிழ்ச்சி பற்றி யும் அவன் எங்கெங்கோ எவ்வளவு எவ்வளவோ படித் திருந்தான். அதுவரை அப்படியொரு சுகானுபவம் அவனுக்கு ஏற்பட்டதில்லை. இப்போது அதை

அனுபவித்து உணர்ந்தால் என்ன? அவன் மனக்குறளி தூண்டியது.

நெஞ்சில் சிறு பதைப்புடன், அவன், நெடுகிலும் பார்வை எறிந்தான். எல்லோரும் அயர்ந்து துயிலில் ஆழ்ந்து கிடந்தனர்.

ஆயினும் அவன் சிறிது தயங்கினான். பிறகு துணிந்து விரல்களைத் தன் மடிமீது கிடந்து சடைப் பின்னல் மீது வைத்தான். லேசாகத் தொட்டு, யாரும் கவனிக்கவில்லை என்று நிச்சயம் செய்துகொண்ட பிறகு அன்பாக, மிருதுவாகத் தடவினான். பின்னலின் நுனியிலிருந்து, அகலமான மேல் பகுதிவரை மெதுவாக வருடினான். அவனுக்கு ஏதோ ஏமாந்து விட்டது போன்ற உணர்வே ஏற்பட்டது.

தூங்கிக் கிடக்கும் எவளோ ஒருத்தியின் துவண்டு கிடக்கிற கூந்தலைத் தொடுவதிலோ தடவிக் கொடுப்ப திலோ எவ்விதமான இன்பமும் இல்லை என்ற ஞானோதயம் அவனுக்கு உண்டாயிற்று. உணர்வற்ற அந்த 'மயிர்க்'கற்றை'யை எடுத்துத் தூங்கும் தலை யருகே தலையணைமீது போட்டான்.

நெளிந்து துவளும் பின்னல் பார்வைக்கு இனிய அழகுக் காட்சியாகத்தான் விழுந்து கிடந்தது.

அவன் அந்தப் பின்னலையும், அது அணி செய்த தலையையும், அமைதியாய் உறங்கிய முகத்தையும் பார்த்தபடியே இருந்தான். அவனது மனம் அமைதியாய் இல்லை. அது குறுகுறுத்துக் கொண்டிருந்தது,

விழித்த நிலையில் உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் கண்களோடு, முகத்தோடு, பெண் பார்த்துக் கொண் டிருக்க, அவளுடைய கூந்தலை விரல்களால் நீவுவ திலும், பின்னலைப் பிடித்து இழுப்பதிலும், சேட்டை கள் செய்வதிலும்-அதனால் அவள் காட்டுகிற ஆனந்தம், உளக் கிளர்ச்சி, உணர்வுச் சலனம் காரண

மாக – தடவுகிறவனுக்கு இன்ப உணர்வும் மகிழ்ச்சியும் ஏற்படக்கூடும். அவ்வாறு இனிய சிறு விளையாட்டுக்கு உள்ளாகிறவள் உமது காதலுக்கு உரியவளாகவும், உம்மிடம் ஆசை காட்டுகிறவளாகவும், பிணங்கியும் இணங்கியும் விளையாடும் இனியையாகவும் இருந்தால், இந்தத் தடவல், நீவல், வருடல் வகையறாக்களின் சுவையும் ரசனையும் அதிகரிக்கும்.

இந்த விதமாக ரகசியம் பேசியது சிதம்பரத்தின் உள்ளம்.

நேரமோ நள்ளிரவு. இடம், குறுகலான அறை போன்ற ரயில் பெட்டி. சுற்றிலும் ஆட்கள் உண்டு என்றாலும் அவர்களோ தூக்கத்தால் உணர்விழந்து விட்ட கட்டைகள் எதிரே வசியப்போஸ் காட்டிக் கிடக்கும் பளபளப் பட்டாடை மினுமினு மங்கை. அருகிலே மிக நெருக்கத்தில் — போதிய கவர்ச்சி உடைய இளம் பெண்ணின் தூக்கநிலை.

மூடியிருக்கும் அவள் கண்களும், மூடுண்ட நிலையில் தென்பட்ட கை விரல்களும், ஒத்த வளைகளை அணிந்த தந்தநிறக் கையும் அதிகக் கவர்ச்சியுடன் விளங்கின.

இவற்றையெல்லாம் ரசித்துக் கொண்டிருந்த இளைஞனின் மனம் இஷ்டம்போல் கனவுகளையும் நினைவுகளையும் சிருஷ்டித்துக் களித்தது. எதிர் பெஞ்சில் தூங்கிக் கிடந்த இளம் பெண்ணின் மாம்பழக் கன்னங்களைத் தடவிப் பார்க்க வேண்டும் என்ற ஆசையை அவன் உள்ளம் விதைத்தது.

மனம் ஒரு குரங்கு என்றால், சிறு குறும்புகள் செய்வது அதன் இயல்பாகத்தானே அமையும்.

ஆனாலும், சிதம்பரம் துணியவில்லை. அவன் தூங்கவும் இல்லை.

வண்டி ஓடிக் கொண்டே இருந்தது.

# நண்பர்கள்

தெற்கு வடக்காக அகன்று நீண்டு கிடந்த மேலப் தெருவின் கிளைபோல் கிழக்கு நோக்கி ஒடுங்கலாகத் பிரிந்து சென்ற நடுத்தெருவில் திரும்பி அடியெடுத்து வைத்த ஆண்டியாபிள்ளையின் நடையில் தனியொரு வேகம் சேர்ந்தது. கைலாசம்பிள்ளையை சந்திக்கப் போகிறோம் என்ற துடிப்பு, அவர் கால் செருப்பின் 'டப்-டிப்' ஓசையிலேயே உயிரொலி கொடுப்பது போல் தோன்றியது.

"அண்ணாச்சியை பார்த்து ஒரு வருசத்துக்கு மேலே ஆகுதே. இவ்வளவு நீண்ட நாள் நான் இந்தப் பக்கம் வராம இருந்ததே இல்லை. ரெண்டு மாசத்துக்கு ஒருக்க, மூணு மாசத்துக்கு ஒரு தடவை நான் இந்த ஊருக்கு வந்துக்கிட்டுத்தானே இருந்தேன்? அந்த ஜவுளிக்கடை வேலையை விட்டுப்போட்டு இன்னொரு கடையிலே சேர்ந்த பிறகு எங்கேயும் போக முடியாமலே ஆயிட்டுது."

ஆண்டியாபிள்ளைக்கு பெருமூச்சு எழுந்தது. வேகம் வேகமாக நடப்பதனால் மட்டுமே வாங்கிய மேல்மூச்சு அல்ல அது...

மேலத்தெருவில் நடந்தபோதே, அதுக்கும் முந்தி பஸ்ஸில் வந்து கொண்டிருந்தபோதே, அவர் நினைப் பெல்லாம் கைலாசம் பிள்ளையைத்தான் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. இரண்டு பேருக்கும் நீண்டகாலப் பழக்கம். சுற்றி வளைத்து ஏதோ ஒருவகையில் சொந்தம்

கொண்டாடுகிற உறவு என்றாலும், அதைவிட அழுத்த மான நட்பு உணர்வு இரண்டு பேருக்கிடையிலும் நெருக்கமான பிணைப்பை ஏற்படுத்தியிருந்தது.

ஆண்டியாபிள்ளை அந்த ஊருக்கு வரும்போ தெல்லாம், 'அண்ணாச்சி யோவ்!' என்று கூவிக் கொண்டு கைலாசம்பிள்ளை வீட்டை எட்டிப் பார்க் காமல் போவதில்லை. அண்ணாச்சியும் அவரைக் கண்டதும் அகமும் முகமும் மலர, 'வாரும் வேய்!' என அன்புடன் அழைத்து, 'என்ன சவுக்கியம் எல்லாம் எப்படி?' என்று விசாரிக்கத் தவறியதுமில்லை.

அதிலிருந்து பேச்சு கிளைவிட்டு, கொடிகள் பரப்பி, எப்படி எப்படியோ தழைத்து எது எதையோ தொட்டு, சகல விஷயங்களையும் பற்றிப் படரும். உள்ளூர் சமாச் சாரங்களை அண்ணாச்சி சொல்ல, அயலூர் அக்கப் போர், தெரிந்தவர்கள் பற்றிய வம்புகள், ரசமான கிசு கிசுப்புகள், மற்றும் பத்திரிகைச் செய்திகள் என்று ஆண்டியாப்பிள்ளை கூற, பேச்சு மணிக்கணக்கில் வளரும்.

இரண்டு பேரும் சுவாரஸ்யமாகப் பேசி மகிழ் வார்கள். காப்பி போட்டுக் கொண்டு வரும்படி அண்ணாச்சி உத்தரவிடுவார்.

காப்பி வரும். எந்த நேரமானாலும் 'கடுங்காப்பி' தான் – பால் சேர்க்கப் படாத கறுப்புக் காப்பி. அது ஒரு தனிச்சுவை கொண்டிருக்கும். மதினி கருப்பட்டியை தூக்கலாகவே போட்டிருப்பாள். ரொம்ப இனிச்சிருக்கும் பானகம் அது என்றாலும் ஆண்டியாபிள்ளை ருசித்துப் பருகுவார். சுவை பெரிதல்ல. அதில் அருவமாகக் கலந்திருக்கிற அன்புதான் முக்கியம். இது தம்பியா பிள்ளைக்குத் தெரியம்.

"தரித்திரம் புடிச்ச இந்த ஊரிலே பால்கிடைக்கிறதே இல்லை. தயிரு, மோரு எதுவுமே கிடைப்பதில்லை.

அதனாலேதான் கடுங்காப்பி'' என்று அண்ணாச்சி சொல்லுவார் — ஒவ்வொரு தடவையும் சொல்லுவார்.

''அதனாலென்ன, கடுங்காப்பிதான் டேஸ்ட்... நல்லதும்கூட!'' என்று ஆண்டியாபிள்ளை கூறுவார்.

கிராமத்தில் உள்ள கறவைமாடுகளின் பால் எல்லாம் பண்ணையில் கறக்கப்பட்டு பக்கத்து டவுன்களுக்குப் போய்விடுவதால், ஊரிலே பாலுக்குத் தட்டுப்பாடு என்கிற உண்மையும் ஒவ்வொரு முறையும் அவர்களது பேச்சில் அடிபடும்.

இருந்தாலும், ஊரில் பால் தாராளமாகவே கிடைக்கிற நிலை இருந்தால்கூட, அண்ணாச்சியின் நிரந்தரமான பற்றாக்குறை பட்ஜெட் காப்பிக்குப் பால் வாங்குவதை அனுமதிப்பதில்லை. அதனால் என்ன?

இந்த உண்மையை ஆண்டியாபிள்ளையின் மனக் குறளி தானாகவே கூறிக் கொள்ளும். உரத்த சிந்தனை யாக அல்ல...

கைலாசம்பிள்ளை தீனிப்பிரியர். சாப்பாட்டைவிட, நொறுக்குத் தீனி அவருக்கு அத்தியாவசியமானது. முறுக்கு, சீடை, தேன்குழல் என்று ஏதாவது எப்பவும் ஸ்டாக் இருந்து கொண்டேயிருக்கும். அது போக திடீரென்று நினைத்துக் கொண்டு, 'ஆமைவடை பண்ணு', 'வாழைக்காய் பஜ்ஜி', செய் 'உருளைக்கிழங்கு போண்டா செய் என்று விருப்பம் தெரிவித்துக் கொண்டேயிருப்பார். அவர் வீட்டு மதினியும் அலுக்காமல் சலிக்காமல் அவருடைய ஆசைகளை நிறைவேற்றி வருவாள். அவள் கைக்கு ஒரு தனி ராசி. அவள் எதைச் செய்தாலும் அது தனி ருசியும் மணமும் பெற்றிருக்கும்.

இவை தவிர, வேர்க்கடலை என்றால் — சிறிய கடை வைத்து உள்ளூரின் சின்னச் சின்னத் தேவைகளைப்

பூர்த்தி செய்வதன் மூலம் சிறிதளவு லாபம் பெறமுடியும் என்பதை அனுபவ பூர்வமாக நிரூபித்துக் கொண்டிருந்த பிச்சையாப்பிள்ளை சொன்னது போல— 'கைலாசம்பிள்ளைக்கு உசிரு!'—அதுவும் எப்பவும் வீட்டில் இருக்கும்.

ஆண்டியாபிள்ளையும் – அண்ணாச்சியும் பேசி மகிழ்கிற வேளையில், வீட்டில் இருக்கிற தீனி தினுசுகள் தாராளமாக வந்து சேரும். வேர்க்கடலைக்குப் 'பக்கமேளமாக'க் கருப்புக் கட்டித்துண்டு.

நேரம் போவதே தெரியாது. சில சமயம் ஆண்டியாபிள்ளை, துண்டை விரித்துப் படுத்துப் பேசுகிறவர் அப்படியே தூங்கிப் போவதும் உண்டு. தூங்குகிறவரை அண்ணாச்சி தட்டி எழுப்பமாட்டார்.

''பாவம், அலுப்பு! நல்லாத் தூங்கட்டும்'' என்று விட்டு விடுவார். ஆண்டியாபிள்ளை தானாக விழிப்பு வந்து எழுந்து உட்கார்ந்து, 'அசந்து தூங்கிட்டேன் போலிருக்கே! இன்னமேதான் சாப்பிடணும்' என்பார்.

அண்ணாச்சி எவ்வளவு உபசரித்தாலும் ஆண்டியாபிள்ளை அங்கே சாப்பிட மாட்டார். 'சொந்தக்காரங்க' வீட்டுக்கே போய்விடுவார்.

இந்த நட்பு பலப்பல வருடங்களாகத் தொடர்ந்து வளர்வது. கைலாசம்பிள்ளை வீட்டைவிட்டு வெளியே போவது கிடையாது. அதிலும் அவருக்கு ஆஸ்துமா கடுமையாகிவிட்ட பிறகு வீட்டின் தெரு வாசல்படியைத் தாண்டியது இல்லை. ஆகவே, உறவினர் வீட்டுக் கல்யாணம், சாவு, ஏதேனும் விசேஷம் என்று அக்கம் பக்கத்து ஊர்களுக்குப் போய் வருவதும் நின்றுவிட்டது.

ஆண்டியாபிள்ளை மாதிரி வீடு தேடி வருகிறவர்கள்தான் சூரிய வெளிச்சமும், புதிய காற்றும்போல,

அவரது சாதாரண நாட்களுக்கு விசேஷ உயிர்ப்பு தந்து கொண்டிருந்தார்கள். அனைவரிலும் ஆண்டி யாபிள்ளைக்கு அண்ணாச்சியிடம் தனிப்பிடிப்பு: ஒரு தீவிரமான பற்றுதல். தனித்துச் சொல்லும்படியான காரணம் எதுவும் கிடையாது. உள்ளத்தில், உணர்வில், இயல்பாகத் தோன்றி வலுப்பெற்றுவிட்ட அன்பின் பிணைப்பு.

அதனால் அண்ணாச்சியை நீண்ட காலம் பாராமல் இருந்து விட்டது— அவருடன் பேச்சுப் பரிமாற்றம் செய்து ஊர் விஷயங்களைத் தெரிந்து கொள்ளாமல் போனது— பெரும் குறைவாகவே பட்டது அவருக்கு. இது அவர் உள்ளத்தில் உறுத்திக் கொண்டேயிருந்தது.

"அந்த உணர்வுதான் அவரை பஸ்ஸிலிருந்து இறங்கியதும் நேராக கைலாசம்பிள்ளை வீட்டு உந்தித் தள்ளியது.

தெருவாசல்படியில் கால் வைக்கும் போதே, "அண்ணாச்சியோவ்!" என்று குரல் கொடுத்தார் ஆண்டியாபிள்ளை.

திண்ணையில் இருந்த தம்பி சோமசுந்தரம், "வாங்க!" என்று அவரை வரவேற்றான். "உட்கா ருங்க!" என்றான். அவரை ஒருமாதிரியாகப் பார்த்தான்.

தோளில் கிடந்த துண்டை எடுத்து, திண்ணைப் பட்டியக்கல்லில் தூசிதட்டிவிட்டு, துண்டை மடித்த வாறே போட்டு அதன்மீது உட்கார்ந்தார் ஆண்டியா பிள்ளை. "பெரியவாள் வீட்டுக்குள்ளே என்ன செய் றாக? வெளியே காணோமே?" என்று கேட்டார்.

"உங்களுக்குத் தெரியாது? அண்ணாச்சி இல்லை. இறந்து போயிட்டாக..."

ஆண்டியாபிள்ளையின் முகத்தில் ஓங்கி அறைந்தது போல இருந்திருக்க வேண்டும். திடுமென நெஞ்சில் குத்துவிட்ட மாதிரி...

அவருக்கு மூச்சே நின்றுவிடும் போல் தோன்றியது. அதிர்ச்சி அவர் முகத்தில் வெளிச்சமாயிற்று. நம்ப முடியாதவர்போல் கேட்டார்.

"ஆங்... என்னது?"

"அண்ணாச்சி இறந்து எட்டு மாதங்கள் ஆச்சு..."

ஆண்டியாபிள்ளை திகைப்புடன், "என்ன செய்தது...?" என்றார்.

"ஆஸ்துமாதான். ரொம்பவும் கஷ்டப்படுத்தி விட்டது..."

"சே, எனக்குத் தெரியாதே!" என்று முணுமுணுத்தார் பிள்ளை. "அவர்களை பார்க்க வராமலே போயிட்டேனே!"

குறுகுறு என்று உட்கார்ந்திருந்தார். வேறு எதுவும் சொல்லாமலே தரைமீது படுத்தார். கண்களை மூடிக் கொண்டார்.

சோமு அவரையே கவனித்தபடி இருந்தான். அவர் முகம் ஏதோ வேதனையைக் காட்டுவதாக அவனுக்குத் தோன்றியது. இந்தச் செய்தி அவருக்கு அதிர்ச்சி தந்து விட்டது என்று எண்ணினான்.

நேரம் ஊர்ந்து கொண்டிருந்தது. அவரை குரல் கொடுத்து உலுக்கலாமா என்று அவன் தயங்கினான்.

சட்டென்று அவரே நிமிர்ந்து உட்கார்ந்தார். "எனக்கு என்னமோ ஒரு மாதிரி வருது..." என்று

மென் குரலில் சொன்னார். ''நீத்தண்ணி இருக்குமா? ஒரு டம்ளர் கொடேன்'' என்றார்.

சோமு வீட்டினுள் போய், பழஞ்சோற்றுப் பானையில் உள்ள தண்ணீரை ஒரு சிறுசெம்பில் எடுத்து வந்து அவரிடம் தந்தான். உப்பு சேர்க்கப்பட்டிருந்த அந்த 'நீராகார'த்தை அவர் குடித்தார். செம்பை கீழே வைத்து விட்டு, மவுனமாக அமர்ந்திருந்தார்.

பிறகு எழுந்து, துண்டை உதறித் தோள்மீது போட்டுக் கொண்டு, ''வாறேன்'' என்று முனகியபடி நடந்தார். வந்தபோது இருந்த மிடுக்கு இப்போது இல்லை அவர் நடையில். நடப்பதே சிரமமான வேலையாக அமைந்து விட்டதுபோல் தோன்றியது.

சோமு அவருக்காக அனுதாபப்பட்டான். 'பாவம்!' என்று கூறிக் கொண்டான்.

அன்று பிற்பகலில் 'ஆண்டியாபிள்ளை செத்துப் போனார்' என்ற செய்தி அவனுக்கு அதிர்ச்சியூட்டும் தகவலாகத்தான் இருந்தது. ●

☆ 'இதயம் பேசுகிறது'-15-12-85

# தர்ம சங்கடம்

தர்மசங்கடமான நிலைமை என்று சொல்வார்களே அப்படிப்பட்ட ஒரு நெருக்கடி நாவலாசிரியர் சுந்தரமூர்த்திக்கு ஏற்பட்டுவிட்டது. அவர் மனம் அமைதியை இழந்து தவித்தது.

அன்று அவருக்கு ஒரு முக்கியமான நாள். பல நாட்களாகவே அவர் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த விசேஷ தினம், அவருடைய எதிர்பார்ப்பை விட மிக அதிகமான எதிர்பார்த்தலுடன் அவருடைய நண்பர்களும் ரசிகர்களும் அந்த நாளின் வருகைக்காகக் காத்திருந்தார்கள் என்பதை அவர் அறிவார்.

திருநகர் தமிழ் மன்றம் தனது இரண்டாவது ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடத் திட்டமிட்டிருந்தது. சகஜமான நிகழ்ச்சிகளோடு வித்தியாசமாகவும் விசேஷமாகவும் ஏதேனும் செய்ய வேண்டும் என்று திருநகர் இலக்கிய ரசிகர்கள் ஆசைப்பட்டார்கள்.

''நாவலாசிரியர் சுந்தரமூர்த்தி பக்கத்து கிராமத்தில் இருக்கிறார். அவருடைய நாவல் ஒன்று புதுசாக வெளி வந்திருக்கிறது. அந்த நாவலின் அறிமுக விழாவாகவும், நாவலாசிரியரை பாராட்டி கவுரவிக்கும் விழா ஆகவும் நமது மன்ற ஆண்டு விழாவை நடத்தலாம். நமக்கும் பெருமை. நாவலாசிரியருக்கும் பெருமையாக இருக்கும். மன்ற விழாவில் புதுமை சேர்த்ததாகவும் அமையும்.''

இப்படி மன்றத்தின் துணைத்தலைவர் சதானந்தம் சொல்லவும், மற்ற அனைவரும் ஆரவாரமாக அக்

கருத்தை ஏற்றுக் கொண்டார்கள். ஆசிரியரிடம் அறிவித்து அவருடைய சம்மதத்தைப் பெறுவதற்காக உடனடியாகவே மூன்று பேர் சுந்தரமூர்த்தி வசித்த கிராமத்துக்குப் பயணமானார்கள்.

ஆசிரியர் வீட்டில்தான் இருந்தார். அவர்களை அன்போடு வரவேற்றார். வந்தவர்கள் தங்களை அறிமுகம் செய்து கொண்டு, திருநகர் தமிழ் மன்றம் பற்றியும், அதன் ஆண்டு விழா குறித்தும் விரிவாகச் சொன்னார்கள். தங்கள் விருப்பத்தையும் தெரிவித்தார்கள். சுந்தரமூர்த்தியின் புதிய நாவலை வெகுவாகப் பாராட்டி மகிழ்ந்தார்கள். இதர நாவல்கள் பற்றியும், அவருடைய சிறுகதைகள் பற்றியும் ரசித்துப் பேசினார்கள். பல இலக்கிய விஷயங்கள் குறித்து அவரது கருத்துக்களைக் கேட்டார்கள். பலப்பல புத்தகங்கள் பற்றி தங்களுடைய எண்ணங்களை வெளிப்படையாகப் பேசினார்கள்.

இதெல்லாம் சுந்தரமூர்த்திக்கு மிகுந்த மன நிறைவைத் தந்தது. மன்றம் என்றும், சங்கம் என்றும், இலக்கிய வட்டம் என்றும் கூறிக் கொண்டு அவ்வப் போது அவரைக் காண வருகிறவர்களில் பெரும்பாலோர் இலக்கிய ரசனை அதிகம் இல்லாதவர்களாகவே இருந்தார்கள். புதிய புத்தகங்களை அறிந்து கொள்ளாதவர்களாகவும், தாங்கள் படித்த புத்தகங்கள் பற்றி சொந்தமாக அபிப்ராயம் கொள்ளவும் அதைத் தெளிவாக எடுத்துச் சொல்லவும் சக்தி அற்றவர்களாகவுமே மிகப் பலர் இருந்தார்கள். இவர்களோ முற்றிலும் மாறுபட்டவர்கள் நல்ல ரசனையும் இலக்கிய ஈடுபாடும் பெற்றிருப்பவர்கள். அது அவர்களுடைய பேச்சில் நன்கு புலனாயிற்று.

எனவே, அவர்கள் நடத்தி வருகிற தமிழ் மன்றம் என்ற அமைப்பின்மீது சுந்தரமூர்த்திக்கு நல்லெண்ணம் ஏற்பட்டது. அவர்கள் மத்தியில் தனது எண்ணங்

களை எடுத்துச் சொல்வது பயனுள்ள காரியமாகவே இருக்கும் என்று அவர் கருதினார். ஆண்டு விழாவில் கலந்து கொண்டு சிறப்புரை நிகழ்த்தக் கட்டாயம் வருவதாக இசைவு தெரிவித்தார்.

அதன்பிறகு முறைப்படி செயல்கள் தொடர்ந்தன. மன்றத் தலைவர் வேண்டுதல் விடுத்தது; அவர் சம்மதம் தெரிவித்து எழுதியது! அழைப்பும் நிகழ்ச்சி நிரலும் அச்சிட்டு அனைவருக்கும் அனுப்பியதோடு அவருக்கும் சில பிரதிகள் அனுப்பியது எல்லாம்தான். மன்றத்தைச் சேர்ந்தவர்களும் மற்றும் பலரும் ஆண்டு விழா நாளை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

அந்த நன்னாள் அன்றைக்குத்தான்.

அதற்காக சுந்தரமூர்த்தி திருநகர் போகவேண்டும். அவர் வசித்த கிராமத்துக்கும் நகருக்கும் எட்டு மைல் தூரம் இருந்தது. போய் வருவது, முன்னைக் காலத்தைப் போல, பெரும் பிரச்னை இல்லை, அடிக்கடி 'டவுன்பஸ்' போய் வந்து கொண்டிருந்தது.

சீக்கிரமே வந்து விடும்படி ரசிக நண்பர்கள் கேட்டிருந்தார்கள். நிகழ்ச்சிகள் மாலை ஆறு மணிக்குத் தொடங்கும். எனினும் நாவலாசிரியர் சுந்தரமூர்த்தி நான்கு மணிக்கே வந்து சேர்வது நல்லது என்று அவர்கள் விருப்பம் தெரிவித்திருந்தார்கள். அவரை கவுரவிக்கும் முறையில் ஒரு சிற்றுண்டி விருந்தும் ஏற்பாடு செய்யலாம் என்பது அவர்கள் நினைப்பு.

இரண்டு மணி பஸ்ஸில் போகலாம் என்று அவர் திட்டமிட்டிருந்தார். மூன்று மணிக்குக் கிளம்பினால் கூடப் போதும்தான். ஆனால், சீக்கிரமே போனால், டவுனில் அங்கே இங்கே நின்று, அதையும் இதையும் பார்த்துப் பொழுது போக்குவதற்கு வசதியாக இருக்கும்.

சுந்தரமூர்த்திக்குப் பிடித்த விஷயங்களில் இப்படிப் பொழுது போக்குவதும் ஒன்று ஆகும்.

அவ்விதம் திருநகர் செல்வதற்கு சிரமமோ தடங்கலோ எதுவும் இராது என்றுதான் அவர் நினைத்திருந்தார். ஆனால் அவர் எதிர்பாராத தடங்கல் ஒன்று வந்து சேர்ந்தது.

தனியராக வாழ்ந்த சுந்தரமூர்த்தியின் சாப்பாட்டுத் தேவைகளை கவனித்துப் பூர்த்தி செய்யவும் வீட்டு அலுவல்களைச் செய்து முடிக்கவும் பெரிய அம்மா ஒருத்தி வீட்டோடு இருந்தாள். பார்வதி ஆச்சி என்ற அந்த அம்மாவின் மகள் தனது எட்டு வயது மகனுடன முந்தியதினம் வந்து சேர்ந்தாள். ஆச்சியும் மகளும் இன்னொரு ஊரிலிருந்த உறவினர் வீட்டுக்கு, அங்கே நிகழ்ந்திருந்த இழவு விசாரிப்பதற்காகப் புறப்பட்டார்கள். துக்க வீட்டுக்கு சின்னப் பையனையும் கூட்டிப் போக அவர்கள் விரும்பவில்லை. போகவர அதிகப்படியான செலவு வீண் என்ற எண்ணமும் அவர்களுக்கு இருந்தது. அதனால் பையனை வீட்டோடு விட்டுச் செல்லத் தீர்மானித்தார்கள். காலை வேளைக்கும் ராத்திரிக்கும் போதுமான அளவு இட்டிலி, மத்தியானத்துக்குச் சாப்பாடு எல்லாம் தயாரித்து வைத்துவிட்டுக் கிளம்பினார்கள்.

“பையன் இங்கேயே இருப்பான். உங்களுக்கு தொந்தரவு எதுவும் தரமாட்டான். வெளியே போய் விளையாடிவிட்டு, பசிக்கிற நேரத்துக்கு வந்து சாப்பாடு கேட்பான். காலை இட்டிலி நாங்களே கொடுத்துவிட்டுப் போயிடுவோம். மத்தியானம் சாப்பாடு கொடுங்க, ராத்திரி நாங்க வருவதுக்கு முன்னெப் பின்னே ஆகும். ராத்திரியும் அவனுக்கு இட்டிலி கொடுங்க. அவனை வேறே எங்கேயும் விட்டுட்டுப் போக முடியலே. கூட்டிக்கிட்டுப் போகவும் வசதிப்படலே. தயவு செய்து அவனை கொஞ்சம்

கவனிச்சுக்கிடுங்க. நாங்க எந்த ராத்திரியானாலும் வந்திடுவோம்' என்று ஆச்சியும் மகளும் திரும்பத் திரும்பச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

வீட்டோடு இருந்து உழைத்து, தனது தேவைகளைக் கவனித்துப் பணிவிடை புரியும் பெரிய அம்மாவின் இந்தச் சின்னக் கோரிக்கையை, தட்டிக்கழித்து, என்னாலே முடியாது என்று அடித்துச் சொல்வதற்கு சுந்தரமூர்த்திக்கு மனம் வரவில்லை.

அவர்கள் போய்விட்டார்கள். அதிலிருந்து சுந்தரமூர்த்தியின் மன உளைச்சலும் ஆரம்பமாயிற்று.

திருநகர் தமிழ்மன்றம் ஆண்டு விழாவுக்குப் போவதா, வேண்டாமா என்று மனம் அரிக்கலாயிற்று. பையனுக்கு மத்தியான உணவு கொடுத்துவிட்டு, மூன்று மணி பஸ்சுக்குப் புறப்பட்டுப் போனால் சரிப்படுமா? அங்கே நிகழ்ச்சி முடிவதற்கு 9 அல்லது 9-30 ஆகிவிடலாம். அதுக்கு மேலேயும் நேரம் பிடிக்கலாம். கடைசி பஸ் இரவு 10 மணிக்கு. அதைப் பிடித்தால் வீடு திரும்ப 11 மணி ஆகிவிடும். அங்கே நண்பர்களுடன் பொழுது கழிந்து, ராத்திரி பஸ் கிடைக்காமல் போனால், ஊருக்குத் திரும்பமுடியாது. பையன் பசியோடு இருக்க நேரிடும். அவனுடைய அம்மாவும் ஆச்சியும் 'எந்த ராத்திரியும் வீடு வந்து சேர்ந்து விடுவோம்' என்று சொல்லிப் போயிருந்தாலும், அப்படி அவர்கள் திரும்பி விடுவார்கள் என்பது நிச்சயமில்லை. அநேகமாக மறுநாள் காலையில் பத்துமணி சுமாருக்குத்தான் வருவார்கள். பையன் ராத்திரி தனியாக எங்கே தங்குவான்? எங்கு படுத்துத் தூங்குவான்? இப்படிப் பல குழப்பங்கள் அவர் மனசை அலைக்கழித்தன.

தன்னை நம்பி, பொறுப்பாக ஒப்படைத்துச் சென்றுள்ள சிறுவனை வெளியே நிறுத்திவிட்டு கதவைப் பூட்டிக்கொண்டு தன்பாட்டுக்கு திருநகர் போவது

என்பது அவருக்குக் கஷ்டமான காரியமாகப்பட்டது. அதேசமயம்—

அங்கே திருநகரில் அநேகம் பேர் அவரை எதிர் பார்த்து ஆவலோடு காத்திருப்பார்கள். அவர்கள் அனைவருக்கும் ஏமாற்றம் அளிப்பதா? வருவேன்—நிச்சயமாக வருவேன் என்று நேரிலும், கடிதம் மூலமும் உறுதி அளித்துவிட்டு இப்போது போகாமல் இருப்பது சரியான செயல் ஆகுமா? இப்படியும் அவர் மனசில் ஒரு குரல் குறுகுறுத்துக் கொண்டிருந்தது.

நாலு மணிக்குப் போய், நிகழ்ச்சியில் கலந்து கொண்டு நிலைமையை சொல்லி சீக்கிரமே புறப்பட்டு வர முயலலாமே? இதுவும் அதே மனக் குரல்தான்.

எண்ணுவது எளிது. அப்படி நடக்கும் என்று சொல்வதற்கில்லை; அங்கே போனால் நேரம் ஆகி விடத்தான் செய்யும்; ராத்திரியே ஊர் திரும்ப முடியா மலே ஆகிவிடலாம் என்ற நினைப்பும் எழுந்து நின்றது.

—நானும் இல்லாமல், அவனோட பாட்டியும் அம்மாவும் இல்லாமல், ராத்திரி நேரத்தில் பையன் என்ன செய்வான்? பகல் வேளையிலாவது தெருப் பையன்களோடு சேர்ந்து குதித்துக் கும்மாளமிட்டு தன்னை மறந்திருப்பான். தான் தனியாக விடப்பட்டிருப் பதை அப்பிஞ்சு மனம் உணராமல் இருக்கக்கூடும். ராத்திரியில் தனிமை அவனை அச்சுறுத்தும் அல்லவா? பசி வேளைக்கு உணவு கிடைக்காமல் போனால் அவன் மேலும் அதிகமாக வேதனைப்படுவானே!...

பிறர் உணர்வுகளைப் புரிந்து கொள்வதில் அக்கறை காட்டும் ஆசிரியர் சின்னப் பையனைப் பற்றி அதிக மாகவே கவலைப்பட்டார்.

எதிர்பார்த்துக் காத்திருக்கும் இலக்கிய ரசிகர்களைப் பற்றிய எண்ணமும், அவர்களுக்கு ஏற்படக்கூடிய

ஏமாற்றம் பற்றிய நினைப்பும் அவர் மனசை சங்கடப் படுத்தாமல் இல்லை.

என்ன செய்வது?...என்னதான் செய்வது? குழம்பித் தவித்தார் நாவலாசிரியர்.

நேரம் ஓடிக் கொண்டிருந்தது.

பையன் வந்து மத்தியானச் சாப்பாடு சாப்பிட்டு விட்டு, மீண்டும் தெருவுக்கு ஓடிப் போனான்.

இப்ப வீட்டை பூட்டிக் கொண்டு, பஸ்சுக்குப் புறப்படலாமா?... இரவு ஒன்பது மணிக்குள் திரும்பிவிட முயலலாம்...

—வர முடியாமல் போனால்? ராத்திரி திருநகரி லேயே தங்கும்படி ஆகிவிட்டால்? பையன் நிலைமை என்ன?

அவர் மனம் சங்கடப்பட்டுக் கொண்டேயிருந்தது.

மணி மூன்றும் ஆயிற்று. அவர் ஒரு முடிவுக்கு வந்தார்.

இலக்கிய ரசிகர்கள் விவரம் தெரிந்தவர்கள். நாவல் அறிமுகமும் என்னைப் பாராட்டிப் பேசுகிற காரியமும் நான் இல்லாமலே நடைபெற முடியும். நன்றாகவே நடந்துவிடும். ஆனால் என்னை நம்பி எனது பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டிருக்கிற சின்னப் பையன், ஆச்சியும் அம்மாவும் இல்லாத போது, நானும் இல்லாமல் போய்விட்டால் திண்டாடிப் போவான். வயிற் றுக்கு உணவும், படுத்துத் தூங்கப் பாதுகாப்பான இடமும் இன்றித் தவிப்பான் பாவம்!

நாவலாசிரியர் சுந்தரமூர்த்தி திருநகர் தமிழ் மன்றம் ஆண்டு விழா நிகழ்ச்சிக்குப் போகாமலே இருந்து விட்டார். தனது நிலைமையை விளக்கி இலக்கிய நண்பர் களுக்குக் கடிதம் எழுதுவதில் ஈடுபட்டார்.

☆ 'தாமரை'—ஜனவரி 1986

# ரத்தக்காட்டேரி

'பெரிய முதலாளி' பிறவிப் பெருமாள் கண்விழிக்கும்போது வெயில் 'சுள்ளென்று' அடித்துக் கொண்டிருந்தது. வயல்களிலும் தோட்டங்களிலும் வேலை செய்த உழைப்பாளிகளின் முதுகு மீதுதான்.

தனியாக அமைக்கப்பட்டிருந்த பங்களாவில், குளு குளு என்றிருந்த ஒரு அறையில், கட்டில் மீது மெத்தையிலே சுகநித்திரை பயின்று கொண்டிருந்த பெரிய முதலாளிக்கு வெயிலைப் பற்றிய கவலை கிடையாது. மழை, புயல், இடி, மின்னல் எதைப் பற்றியும் கவலை கிடையாது. அவருடைய கவலை எல்லாம் பணத்தோடு பணம் – சொத்தோடு சொத்து சேர்ப்பது எப்படி என்பதேயாகும்.

பிறவிப் பெருமாள் பிறக்கும் பொழுதே பெரிய ஆளாகத்தான் பிறந்தார். சுயமுயற்சியால் முன்னுக்கு வந்து, சமூகத்தில் தனக்கென்று ஒரு தனி மதிப்பும் செல்வாக்கும் சம்பாதித்துக் கொண்டே வடமலையப்பரின் திருமகன் ராசாப் பிள்ளையின் புத்திரபாக்கியமாக அவதரித்தார் அவர். இந்தத் 'தற்செயல் நிகழ்ச்சி' அவரை 'குட்டி முதலாளி' என்ற கௌரவத்துக்கு உரியவராக ஆக்கிவிட்டது. எல்லோரும் அவரை சின்ன எசமான்' என்றும் 'குட்டி முதலாளி' எனவும்

பெரிய வீட்டுச் சின்ன ஐயா' என்றுமே குறிப்பிட்டு, அவரிடம் பணிவும் மரியாதையும் காட்டி வந்தார்கள்.

உயிர்கள் பிறவி எடுப்பதே 'தற்செயல் நிகழ்ச்சி'—'ஆக்ஸிடென்ட்' தானே? முதலாளி மகன் முதலாளியாகப் பிறந்துவிட்டால், அந்த உயிர் சகல சுகபோகங்களையும் அனுபவித்து வாழ்ந்து வளர முடிகிறது. ஏழை எளியவர்கள் வீடுகளில் பிறக்கின்ற குழந்தைகள் வயிற்றுக்குப் போதுமான உணவுகூடக் கிடைக்க வழி இல்லாமல் அவதியுறுகின்றன.

பெரிய வீட்டாரின் அருளுக்குப் பாத்திரமான உழைப்பாளிகள் வீட்டுப் பிள்ளைகள் கட்டுவதற்குக் கோவணத் துணிகூட இல்லாமல், பரட்டைத் தலையும் புழுதி நிறைந்த உடலுமாய் திரிந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அப்பன்மாரும் தாய்மார்களும் 'வியாழன் உறங்கி வெள்ளி எழும்போது' முதல் உழைக்கத் தொடங்கி, 'இருட்டி வெகு நாழிகை ஆன பிறகு' திரும்பி வந்தார்கள். அப்படியும் அவர்களுக்குக் கிடைத்தது 'தண்ணியும் பருக்கையும்' தான்.

அதே காலத்தில் வீட்டோடு இருந்து, வேளா வேளைக்கு உண்டு களைப்பால் உறங்கியும், உறங்கியதால் எழுந்த பசியை அடக்கத் தின்பண்டங்கள் தின்றும் நாள் கழித்து வந்த ராசாப்பிள்ளை வீட்டுக் 'குட்டி முதலாளி' தங்க நகைகளைச் சுமக்கும் 'ஸ்டாண்டு' ஆக மாற முடிந்தது.

பிறவிப் பெருமாளின் இடுப்பிலே தங்க அரைஞாண். கிண்கிணி கோத்த இடுப்புச் சலங்கை. 'திருஷ்டி தோஷம்' முதலியவற்றிலிருந்து பாதுகாப்பதற்காக நாய் பொறித்த தங்கக் காசு, சிறு சாவி வகையறா. காதுகளில் வெள்ளைக் கல் குச்சு; கால்களில் பாதசரம். அவற்றைக் கூடத் தங்கத்தால் செய்து போட்டு அழகு

பார்க்க வேண்டும் என்று அம்மாக்காரி ஆசைப் பட்டாள். 'பெரிய ஐயா' தான் மறுத்து விட்டார். பையனைச் சுமந்து திரிய ஆள் மாற்றி ஆள். இவை எல்லாம் சிறப்புக் குறையாமல் இருந்தபோது, பாலுக் கும் பழத்துக்கும் பஞ்சமா ஏற்பட்டு விடும்? பட்டு பட்டாடைகளும் அளவுக்கு அதிகமாகவே குவிந்து கிடந்தன.

இப்படி 'ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு' என்று வளர்ந்து, வீட்டார் பலராலும் செல்லம் கொடுக் கப் பெற்று, தான் பிடித்த மூப்பாக அகம்பாவம், கர்வம், பிடிவாதம் முதலிய குணங்களோடு பெரியவனான பிறவிப் பெருமாள் உரிய காலத்தில் 'முதலாளி' என்ற அந்தஸ்தையும் பெற முடிந்தது. 'நம்ம பையன் படிச்சுப் பாஸ்பண்ணி தாசில் வேலைக்கா போகப் போறான்? ஏதோ நாலு எழுத்து தெரிஞ்சால் போதும்' என்று பெரியவர்கள், கருதினார்கள். அதனால், முதலாளி மகன் முதலாளிக்கு படிப்பு போன்ற விசேஷத் தகுதி எதுவும் கிடையாது.

அவர் எங்கும் வேலைக்குப் போக வேண்டிய அவசியம் எதுவுமில்லை. உலக விவகாரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமே என்ற கவலையோடு பத்திரிகைகளைத் தேடும் ஆர்வமும் அவருக்கு இல்லை. ஆகவே, அவராக மனசு வைத்து எழுந்தால் தான் அவருக்குப் பொழுது விடிந்ததாக அர்த்தம்.

பிறவிப் பெருமாளின் தாத்தா அதிகாலையிலேயே விழித்தெழுந்து, வயல் வேலைகளுக்குப் போவார்; உச்சிப்பொழுதுவரை பல் விளக்காமலே பாடுபடுவார்; இவ்வாறு 'வாயைக்கட்டி வயிற்றைக்கட்டி' உழைத்தத னால்தான் அவர் சொத்து சேர்க்க முடிந்தது என்று ஊரில் பேச்சு வழங்கியது. அவ்வாறு உழைத்துப் பிழைக்க வேண்டிய நிலையில் பிறந்துவிட்ட பலரின்

வயிற்றில் அடித்தும், உழைப்புக்கு உரிய பலனைச் சுரண்டியும், என்னென்னவோ பண்ணியும் சொத்தோடு சொத்து சேர்த்து, 'பெரிய முதலாளி' ஆக முடிந்தது என்பதை யாரும் எடுத்துச் சொல்லவில்லை. வடமலையப்பரின் மகன் ராசாப்பிள்ளை சர்க்கார் நமூனாக்களிலும், பத்திரங்களிலும் 'தொழில்' என்கிற கலத்தில் 'சுகஜீவனம்' என்று எழுதி, கௌரவம் பெறவும் முடிந்தது. சோம்பேறி வாழ்க்கைக்கு 'சுகஜீவனம்' என்று பெயர். அதுவும் ஒரு தொழில் என மதிக்கப்பட்டது சமுதாயத்தின் நோக்கிலே!

"துப்பாக்கி வயிற்றில் பீரங்கி பிறக்கும்" என்பார்கள். முதலாளிக்குப் பிறந்த 'குட்டி முதலாளி' மட்டும் சுறுசுறுப்பனாகவா இருந்து விடுவான்? சோம்பேறி மகன் சோம்பேறியாக விளங்குவதுதான் சமூக நியதி; குலதர்மம். பிறவிப் பெருமாளும் விதிவிலக்கு அல்ல. அவருடைய சொந்த வேலைகளைக் கூட அவரே செய்வதில்லை. செய்ய முடிவதில்லை. அவற்றைக் கவனித்து முடிக்க தனித்தனி ஆட்கள். எல்லாம், அவரிடம் பணம் இருந்தது என்கிற ஒரே காரணத்தினால்தான். அந்தப் பணத்தைச் சேர்க்க அவர் என்ன பாடுபட்டார், தனது உழைப்பினால் கிடைக்காத பணத்தை அவர் இஷ்டம்போல் செலவு செய்ய அவருக்கு என்ன உரிமை இருந்தது? அதைக் கேட்கும் குரல் எழவேயில்லை. அவர் முதலாளி மகன் முதலாளி; அதனால் அவர் எப்படியும் வாழ முடியும் வாழலாம் என்ற நம்பிக்கை நிலைத்திருக்கிறது சமூகத்திலே. மனிதரின் பக்திக்கும், பணிவுக்கும், பயந்த சுபாவத்துக்கும் 'பூர்வ புண்ணியம்... தலைவிதி— கொடுத்து வைத்தவர்' என்பன போன்ற இருண்ட எண்ணங்களும் துணை சேர்கின்றன.

ஆகவே, உழைக்க வேண்டியவர்கள் அவரவர்களுக்கு ஒதுக்கிவிடப் பெற்றிருந்த அலுவல்களில் ஈடு

பட்டிருந்த வேளையிலும், பிறவிப் பெருமாள் சோம்பேறித் தனமாகப் படுக்கையில் கிடந்து சுகம் அனுபவித்துக் கொண்டிருந்தார். அவசரம் இல்லாமல் எழுந்தார். திண்ணையில் சிறிது நேரம் உட்கார்ந்திருந் தார். பல் துலக்குவதற்காக நந்தவனம் பக்கம் சென்றார்.

நந்தவனம் குளுமையான இடம். பூச்செடிகள், கனிமரங்கள் எல்லாம் எழில் குலுக்கி நின்றன. பசும் கரம்பை பதிக்கப்பட்டு, மணல் பரப்பப் பெற்ற ஒரு மேடும் இருந்தது. அதில் கால் மேல் கால் போட்டு அமர்ந்து பல் துலக்குவது முதலாளியின் நித்திய அனுஷ்டானங்களில் ஒன்று ஆகும். 'தந்த சுத்தி' எனும் பெயரில் அரை மணிக்கு அதிகமாகவே அவர் போக்கடிப் பதில் வேறு ஒரு லாபமும் உண்டு. நந்தவனத்துக் கிணறு 'நல்ல தண்ணீர்க் கிணறு' என்ற சிறப்புப் பெற்றிருந்தபடியால், அக்கம் பக்கத்துப் பெண்கள் அங்கு தண்ணீர் எடுத்துச் செல்ல வருவார்கள். முதலாளியின் கண்களுக்கு நல்ல விருந்து கிடைக்கும். தோட்ட வேலை பார்க்கும் பெண்களின் கட்டான உடலின் சில பகுதிகளைப் பார்க்கும் பாக்கியமும் கிட்டும். அப்போது அருமையான 'ஸ்ட்ராங் காப்பி' பருகிய உற்சாகமும் தெம்பும் பிறவிப் பெருமாளுக்கு ஏற்படும்.

இன்றும் அவருக்காகக் கண் விருந்து காத்திருந்தது, இருளம்மை உருவிலே.

தோட்டத்தில் வழக்கமாக வேலை செய்பவள் இருளம்மை. அவள் புருஷனும் பண்ணையில் உழைப்பவன்தான். அவள் தன் சிறு பெண்ணையும் உடன் இட்டு வந்திருந்தாள். அது அழுததே என்று 'கொய்யாப் பழம் ஒன்றைப் பறித்து அதனிடம் கொடுத் திருந்தாள். கையில் வைத்துக் கடித்துக் கொண்டிருந்

தது போக, இரண்டு காய்களும் சிறுமியின் முன் கிடந்தன.

இருளம்மையைப் பார்த்து மகிழ்ந்த கண்கள் பறிக்கப் பட்ட பழங்களையும் கண்டன. மகிழ்ச்சியுடன் அல்ல. 'ஏய், இந்தப் பழங்களை யாரு பறிச்சுது?'' என்று உறுமி னார் முதலாளி.

''புள்ளே அழுதுது. நான்தான் பறிச்சுக் குடுத் தேன்'' என்று பணிவுடன் தெரிவித்தாள் அவள்.

'ஓவ்!' என்று குரைத்தார் அவர். 'உன் மடியிலே என்னது? கனமாத் தெரியுதே?' அவரது கழுகுப் பார்வை கண்டுவிட்டதற்குக் கேள்விகள் விளக்கம் தேடின.

''ஒண்ணுமில்லே சாமி'' என்று இழுத்தாள் அவள்.

''என்ன முழுங்குறே? அதுவும கொய்யாப் பழங்கள் தானா? 'பெரிய ஐயா'வின் தொணியில் அதிகாரச் சூடு ஏறிக்கொண்டிருந்தது. 'உண்மையைச் சொல்றியா; அல்லது ஆளை விட்டு...'

இருளம்மையின் முகம் வாடிக் கருகியது. அவள் கைகள் நாலைந்து எலுமிச்சம் பழங்களை வெளியே எடுத்து வைத்தன.

''திருட்டுக் கழுதை! என்ன இருந்தாலும், எவ்வளவுதான் கொடுத்தாலும் உங்க திருட்டுப் புத்தி போகவே போகாது. திருட்டுக் கை நீளாமல் நிற்கவும் செய்யாது.'' கீதாசாரியனின் பேரன் போல் பேசினார் முதலாளி மகன் முதலாளி.

''இதுக்காக பத்துநாள் சம்பளத்தைப் புடிச்சு விடுவேன், ஒகோ. இவ்வளவுக்கு ஆயிட்டதா? உங்க வீட்டுத் தோட்டம் மாதிரி இஷ்டம் போலே எல்லாவற்

றையும் பறிக்கிறது! என்ன திமிரு பார்மேன். இதை இப்படியே விட்டு விட்டால், ஆட்டைக் கடிச்சு— மாட்டைக் கடிச்சு மனுசனையும் கடிக்க ஆரம்பிச்ச கதையாக மாறிவிடுமா, சும்மாவா?" என்று பொரிந்து தள்ளினார் அவர்.

உழையாமலே அனுபவிக்கும் உரிமை கொண்டாடுவது பெரிய திருட்டு; பிறர் உழைப்பைச் சுரண்டி, அதன் மூலம் கொழுத்து வாழ்வது கொடிய திருட்டு என்பது அந்த மகா உபதேசியாரின் அறிவில் மின் வெட்டவில்லை.

பிறவிப் பெருமாள் காலைக் கடன்களை முடித்து, நீராடி, ஒரு கப் காப்பியையும் உள்ளே தள்ளி விட்டு, பூஜை அறைக்குள் புகுந்தார். ஒவ்வொரு நாளும் அவரும் அவரைப் போன்ற முதலாளிகளும் செய்கிற மாபெரும் காரியம் மணிக்கணக்கில் பூஜை பண்ணுவது தான். இரண்டு மணி நேரத்துக்குக் குறையாது பூஜை நேரம். பக்தி முற்றி விட்டால் பூஜை மூன்று— மூன்றரை மணி நேரம் வரைகூட வளர்ந்துவிடும். முதலாளி ஐயா கண்ணை மூடிக் கொண்டு கடவுளோடு உறவாடுகிற நேரத்தில், என்ன நேர்ந்தாலும்— 'எந்த ராஜா எந்தப் பட்டணத்தில் புகுந்து கொள்ளையடித்தாலும்— கண் திறந்து பார்க்கமாட்டார்; காது கொடுத்துக் கேட்க மாட்டார்.

இந்த உண்மை எல்லோருக்கும் தெரியும். இருந்தாலும் நெருக்கடிகளும் விபத்துக்களும் முன்னறிவிப்பும் தடபுடல் விளம்பரமும் செய்து கொண்டா வருகின்றன? இல்லையே?

வண்டிக்காரன் மாணிக்கம் நிதானமாகத்தான் வண்டி ஓட்டிச் சென்றான். மோசமான இடம், பாதை 'பெரிய நொடி', மிரளும் புது மாடுகள், எதிரே வந்த

லாரியின் அலறலும் ஊளையும், ஓரமாக வந்த சைக்கிள் காரனின் வேலைத் தனங்கள் எல்லாமாய் கூடி விபத்துக்குக் களம் அமைத்து விட்டன. வண்டி 'குடை வண்டி போட்டு' விட்டது. மாணிக்கத்தின் வலது தொடை மீது சக்கரம் ஏறியது.

சிலர் ஓடி வந்தார்கள். அம்மாவிடம் விஷயத்தைச் சொன்னார்கள். மாணிக்கத்தை சீக்கிரம் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லவேண்டும். அதற்கு வண்டியும் பண உதவியும் ஐயாவின் அனுமதியும் வேண்டும். ஆனால் எஜமான் பூஜையில் அல்லவா ஈடுபட்டிருக்கிறார்? ஜீவராசிகளின் துயரங்களை எல்லாம் காண மறுத்துக் கல்லாகிவிட்ட கடவுளோடு உறவாடுவதற்காக, மனித உணர்வுகளுக்குச் சமாதி கட்டிவிட்ட பணக்காரர் கண்களை மூடிக்கொண்டு பக்திப் பாடல்களை முணமுணத்தபடி இருக்கிறாரே; அவர் காதுகளில் மனிதனின் வேதனைக் குரல் படுமா?

விண்ணகத்தின் எதிர்கால ஸீட் ரிசர்வேஷனுக்காக நிகழ் காலத்தின் பெரும்பகுதியை வீணே செலவு செய்வதில் ஈடுபட்டிருந்த முதலாளியின் மனக்கதவும் திறக்கவில்லை.

நஷ்டமும் கஷ்டமும் வண்டிக்காரனுக்குத்தானே? இச்சில்லறை விவகாரங்களைப் பற்றி எல்லாம் பெரிய வீட்டு ஐயா கவலைப்பட முடியுமா என்ன? அவரைப் பொறுத்த வரையில் ஒரு ஆள் போனால் இன்னொரு ஆள்! துட்டை வீசினால் நீ... நான் என்று எத்தனையோ பேரு ஓடி வருவாங்க. பணத்துக்குத்தான் பஞ்சம். ஆள்களுக்குமா பஞ்சம் இந்த உலகத்திலே!'

பூஜையை முடித்த பிறகு, இட்டிலி தோசைகளுக்கு அருள் புரிந்து தீர்த்த பின்னர் பிறவிப் பெருமாள் களத்து மேட்டுக்குப் போனார். பொதுவாக அவர்

வயல்— காடு என்று அலைவது கிடையாது. அவற்றை எல்லாம் கவனிக்க கணக்குப் பிள்ளையும் வேறு ஆட்களும் இருந்தார்கள். எனினும் எப்பவாவது எண்ணிக் கொண்டு அவர் வயல்களின் பக்கம் போய் வருவார்.

இன்று அறுவடை தினம். முதலாளி ஐயா தலையைக் காட்டாவிட்டால், வேலை வேகமாக நடைபெறாது. கதிர்க் கட்டுகளைக் கடத்தினாலும் கடத்தி விடுவார்கள். கூலிக்கு வேலை செய்கிறவர்களுக்கு நன்றி விசுவாசம் ஏது? எப்போடா முதலாளி கண்ணை மூடுவான்; அசந்து மறந்து இருப்பான்; நாம் அகப்பட்டதைச் சுருட்டிப் போகலாம் என்றுதான் காத்திருப்பாங்க இது முதலாளியின் திடமான அப்பிராயம்.

முதலாளி வந்து சேர்ந்த சமயத்தில், வயலிலிருந்து கட்டுகளைக் களத்தில் கொண்டுவந்து போட்டவர்களில் சிலர் சிறிது காலாற உட்கார்ந்து 'வெற்றிலை சுவைப்பதில்' ஈடுபட்டிருந்தார்கள். பிறவிப் பெருமாளுக்கு அது ஆத்திரம் புகுத்தியது

''ஏண்டா சோம்பேறிக் கழுதைகளா, ஏன் வீண் பொழுது போக்குறீங்க? இப்படி நேரத்தை ஓட்டி அடைச்சால், வேலை எப்படி நடக்கும்?'' என்று அதட்டினார் அவர். 'இது மாதிரி வேலை செய்யாமல் எத்துறவங்களுக்கு கூலியைப் புடிச்சால்தான் புத்தி வரும்' என்றும் முனங்கினார்.

உழைப்பவர்களுக்கு கொடுக்கப்படுகிற கூலி மிகக் குறைவானதாக இருக்கலாம். இருந்தாலும், அதிலும் கொஞ்சம் கொஞ்சமாகக் கைவைத்தாலும், உழைப்பவர்களிடம் அதிகமாக வேலை வாங்கினாலும் முதலாளிக்கு லாபம் தானே? முதலாளியின் நோக்கம் பணம் பண்ணுவது. சிறுசிறு துளிகளாகச் சேர்ந்து பெருவெள்ளமாக்கி விடுவது இயற்கையில்லையா? பிறவிப் பெருமாள் மேற்

பார்வை பார்த்துவிட்டுத் வீடு திரும்பினார். உரிய நேரத்தில், வயிறு புடைக்கத் தின்றார். அருமையான அரிசிச் சாதம், காய்கறி, பருப்பு, நெய், தயிர் எதற்கும் குறைவில்லை. 'உண்ட களைப்பு தொண்டருக்கும் உண்டு' என்கிறார்களே; முதலாளிக்கு இல்லாமல் போகுமா? ஓய்வு பெறுவதற்காகச் சாய்ந்தார் அவர்.

சுட்டெரிக்கும் வெயிலில் காய்ந்தபடி உழைத்தவர்கள் உரிய நேரத்தில் கஞ்சி குடித்தார்கள். துணைக்கு வெறும் உப்பும், கடித்துக் கொள்ள' இரண்டு மிளகாயும் இருந்தன. சிறிது பொழுது நிழலில் இருந்து விட்டு, மீண்டும் உழைக்கலானார்கள்.

அவர்களுடைய உழைப்பின் அளவுபோல் களத்தில் நெல் அம்பாரமாகக் குவிந்தது. எவ்வளவு குவிந்தால் தான் என்ன? முதலாளி வீட்டுக் களஞ்சியம் நிறையுமே தவிர, உழைத்தவர்களின் வயிறா நிரம்பப் போகிறது? அதனால் அவர்களுடைய மனம் மகிழ்வால் நிறையவில்லை.

நெல்லை அளந்து சாக்குகளில் கொட்டும் வேளையில் முதலாளி வந்து சேர்ந்தார். 'கோயில் மான்யம்! 'காவல் சுதந்திரம்' அது— இது என்று சிறிது பங்கு செலவு செய்யப்பட்டது. 'வீட்டிலே சாப்பாட்டுக்கு எதுவும் இல்லை. இரண்டு மூட்டை நெல் கொடுங்க சாமி' என்று குடியானவன் ஒருவன் கெஞ்சினான். அழமாட்டாத குறையாகக் கெஞ்சினான். 'உழைத்துக் கழித்து விடுகிறேன், எசமான். ஆபத்துச் சமயத்துக்கு உதவுங்க! என்று கும்பிட்டான்.

ஊகும் முதலாளியின் மனம் இளகிவிடுமா என்ன? 'இந்தப் பயல்களே இப்படித்தான். காலை, கையைப் பிடிப்பானுக. ஐயோ பாவமின்னு இரக்கம் காட்டி விட்டோமோ; அவ்வளவுதான். அப்புறம் நம்ம

தலைமேலே ஏறி உட்காரப் பார்ப்பானுக' என்று கணக்குப்பிள்ளையிடம் திருவாய் மலர்ந்து அருளினார் அவர்.

பிறவிப் பெருமாளின் கழுகுக் கண்கள் பசிப் பார்வையோடு வட்டமிட்டன; ஒரு இடத்தில் பதிந்து நின்றன. 'ஏய்; சங்கரலிங்கத்தின் வண்டியை மறிங்கடா உம், சீக்கிரம் ஓடுங்க. இதோ நானும் வர்றேன்' என்று குரைத்து, சில ஆட்களை விரட்டினார்.

சங்கரலிங்கம் என்கிற சிறு விவசாயி தனது வயலின் கண்டு முதலை வண்டியில் ஏற்றிக் கொண்டிருந்தான். பல மாதங்களாகப் பாடுபட்டதன் பலனை ஓரளவு பெற்றிருந்தான். மழை இல்லாமல் கெட்டுப் போனது, தேவையில்லாதபோது அநாவசியமாக மழை பெய்து கெடுத்து பூச்சி விழுந்து பாழ்பட்டது. தக்க தருணத்தில் ரசாயன உரம் பிரயோகிக்க முடியாமல் போனது போன்ற பல தொல்லைகளையும் தாண்டி, ஒரு தினுசாக விளைந்து, அறுவடையான தானியத்தை அவன் வீட்டுக்குக் கொண்டு போக வேண்டும். 'பெரிய வீட்டு ஐயா' மாதிரி அறைக்குள் பூட்டி வைத்து, விலை மிகவும் உயர்ந்து வருகிற சமயத்தை எதிர்நோக்கி காத்திருப்பதற்காக அல்ல. சாப்பாட்டுக்கு, விதைக்கு, கடனைத் தீர்க்க, குடும்பச் செலவுக்காக— இப்படி எத்தனையோ இனங்களுக்கு அதை ஒதுக்கியாக வேண்டும். மிச்சம் பிடிக்கவோ, சேர்த்து வைக்கவோ அவனுக்கு வசதி ஏது?

"ஏ சங்கரலிங்கம்! என்னதான் உன் நினைப்பு!" என்று சீறியபடி சூறாவளி போல் பாய்ந்தார் பிறவிப் பெருமாள். 'என் கடனை நீ எப்போ தீர்க்கப் போகிறே? அடுத்த பூவிலே தீர்த்துவிடுகிறேன், அடுத்த பூவிலே தாறேன்னு சொல்லி இரண்டு வருசமாக ஏமாத்திக்கிட்டு இருக்கிறே...' என்று கர்ஜித்தார்.

சங்கரலிங்கம் கூனிக் குறுகினான். தலையைச் சொறிந்தான், கைளைத் தேய்த்தான். 'காலம் சரி

யில்லை, ஐயா, எவ்வளவு பாடுபட்டும் பலன் சரியாகக் கிடைக்கலே. எமாத்தனும் என்கிற எண்ணம் எனக்கு இல்லை. குடும்பக் கஷ்டம் ' என்று இழுத்தான்.

''அந்தக் கதை எல்லாம் எனக்கு வேண்டாம்! நானும் எவ்வளவோ காலமாகப் பொறுத்துப் பார்த் தாச்சு, இனியும் பொறுக்க முடியாது. இந்த வண்டி நெல்லை நம்ம வீட்டுக்கு அனுப்பிவிடு. இது கூடக் கடனை அடைக்கப் பத்தாது என்றே தோணுது' என்று சொன்னார் பெரிய வீட்டுக்காரர்.

''ஐயா ஐயா, நீங்க அப்படிச் சொல்லப்படாது. என் பிள்ளைகள் கதி என்னாவது? நாங்க எல்லோரும் சாப்பாட்டுக்கு என்ன செய்வோம்...?''

அடிவயிற்றிலிருந்து பொங்கிய வேதனையோடு, ஏக்கத்தோடு, உணர்ச்சித் துடிப்போடு அவன் அலறி னான். கையெடுத்துக் கும்பிட்டான். அவர் காலில் விழுந்து புலம்பினான்.

அருகில் நின்றவர்களில் சிலர் கண்களில் நீர் கசிந்தது. ஆனால், பிறவிப் பெருமாள் கல்சிலை மாதிரி தான் நின்றார். அவர் இதயத்தில் ஈரம் கசியவுமில்லை.

''ஊம். என்ன யோசனை? வண்டியை நம்ம களஞ்சியத்துக்கு ஓட்டு. நெல்லை களஞ்சியத்தில் கொட்டி விட்டு, வெத்துச் சாக்குகளோடு வண்டியை இவன் வீட்டுக்கு அனுப்பு'' என்று வறண்ட குரலில் உத்தரவிட்டார் பெருமாள்.

இதற்குள் விஷயத்தைக் கேள்வியுற்று, சங்கர லிங்கத்தின் மனைவி பார்வதியும், பிள்ளைகளும் அழுது கொண்டு வந்து சேர்ந்தார்கள். பார்வதி வாயிலும் வயிற் றிலும் அடித்துக் கொண்டு புலம்பினாள்; பிச்சை கேட்பது போல் கெஞ்சினாள்.

முதலாளி ஐயாவின் உள்ளத்தில் மனிதத் தன்மை இருந்தால்தானே? அவர் பூஜிக்கிற பணத்தின் ஆத்மா தானே அவருடைய ஆன்மாவும்? ஆகவே, அவர் விறைப்பாக வண்டியின் பின்னாலேயே நடந்தார். உழைத்துச் செத்தவர்களின் உரிமை உணர்வற்ற இதயங்களை நசுக்கிச் செல்வது போல் வண்டியின் சக்கரங்கள் கடகடத்து உருண்டன.

“ஏ பழிகாரா! நீ விளங்குவாயா? உன் பெண்டாட்டி பிள்ளைகள் நாசமாய்ப் போக!” என்ற வயிற்றெரிச்சலோடு ஏசியபடி, மண்ணை வாரி இறைத்துக் கொண்டிருந்தாள் பார்வதி. அந்த மண் அவள் மீதும், அவள் குழந்தைகள் தலையிலும்தான் விழுந்தது.

அன்றைய நாளைப் பொன்னாளாக மாற்றிவிட்ட பெருமையோடு, மிடுக்கோடு, பணம் தந்த பலத்தோடு‘ நிமிர்ந்து நடந்தார் பிறவிப் பெருமாள். பிறரைப் பற்றிய கவலை அவருக்கு என்றுமே கிடையாதே! ●

☆ **தாமரை**

# ஓர் இரவு

அமைதி நிறைந்தது என்று கருதப்படும் அந்த இடத்தில், அமைதி மிகுந்த நேரம் என நம்பப்படும் இரவிலே, கவிந்து கிடந்த அமைதியினூடாக எவ்வளவோ ஒலிகள் குழம்பி அச்சம் தருவதை ராமலிங்கம் உணர்ந்தான்.

உயரமான மலைமுடி அது. அடிவாரத்தில் இருந்து, அதற்கென அமைந்த கரடுமுரடான பாதை வழியே ஐந்து மைல் தூரம் நடந்து வர வேண்டும் அந்த இடத்துக்கு. அங்கே ஒரு கோயில் இருந்தது. சிறு கல் கட்டிடம். மலைநம்பி என்ற பெயர் பெற்ற தெய்வம் யாரால் எந்தக் காலத்தில் அங்கு ஸ்தாபிக்கப்பட்டதோ தெரியாது. ஆனால் அதற்கு தினசரி பூஜை உண்டு. அதற்கென ஒரு பூசாரியும் உண்டு.

பூசாரி நாலைந்து நாட்களுக்கு ஒரு தடவை கீழே போய், மலை அடிவாரக் கிராமத்திலிருந்து தனது சாப்பாட்டுக்கும் தெய்வ பூஜைக்கும் இதர தேவைகளுக்கும் அவசியமான பொருள்களை எடுத்துக் கொண்டு உயரே வருவார். கோவில் அருகிலேயே ஒரு மடம் இருந்தது அதில் அவர் தங்கியிருப்பார். சமையல் எல்லாம் அங்கேதான். குளிப்பதற்கும் குடிப்பதற்கும் வசதியாக மிக அருகிலேயே சிற்றாறு ஒன்று சலசலத்து ஓடிக் கொண்டிருந்தது.

கண்ணாடி மாதிரி தண்ணீர்; அடியில் கிடக்கும் கல் மண் எல்லாம் நன்கு பளிச்சிடும்படி மிகவும் தெளிவான நீர். எப்போதும் பனிக்கட்டி மாதிரிக் குளிர்ந்து கிடக்கும்.

உச்சி வேளையில் கூட அந்தக் காட்டாற்று நீர் ஜில் லென்றுதான் இருக்கும்.

அந்த ஆற்றின் ஓட்டமும், சற்று தள்ளி இன்னொரு பள்ளத்தில் நீர் விழுகிற ஒலியும், அதற்கும் அப்பால் காடுகளினூடே நெளிந்து சென்று அது ஒரு மலைமுடியிலிருந்து மற்றொரு பகுதிக்கு அருவியாக இறங்கும் தடதட ஓசையும் பகலில் எப்போதும ஏதோ ஒரு பின்னணி சங்கீதம் போல் கேட்டுக் கொண்டே இருக்கும்.

இப்போது, நள்ளிரவில் இவ்வோசைகள் எல்லாம் கனத்து, தனித்தனி சத்தங்களாகவும், ஒன்றோடொன்று குழம்பியும் ராமலிங்கத்தை அச்சுறுத்தின. இனம் புரிந்த கொள்ள முடியா வண்டுகளின் ரீங்காரமும், இரவுப் பறவைகளின் கூச்சலும் சதா கேட்டுக் கொண்டே இருந்தன. காற்றின் கூப்பாடு வேறு.

தன்னந் தனியாக, மலைநம்பி கோயிலுக்குள், இரும்புக் கம்பிகளாலான கதவின் பின்னே, குறு குறு வென்று உட்கார்ந்திருந்த ராமலிங்கம், உண்மையான பயம் எப்படி இருக்கும் என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்து கொண்டிருந்தான்.

அவனுக்குத் துணையாக மலைநம்பி சிலையைத் தவிர, அரிக்கன் லாந்தர் ஒன்றும் இருந்தது. மிகவும் சிறிதாக ஒளி சிந்தும் வகையில் அதன் திரி உள்ளுக்கு இறக்கி வைக்கப்பட்டிருந்தது.

“இப்படி ஒரு ஏற்பாட்டுக்கு நாம் ஒப்புக் கொண்டது மடத்தனம்” என்று ராமலிங்கம் எண்ண லானான் துணிச்சலான காரியம் என்றும், புதுமையான சோதனை என்றும் முதலில் அவன் நினைத்தது அசட்டுத்தனமேயாகும் என்று இப்போது அவனுக்குப் பட்டது.

நிலைமை இவ்வளவு பயங்கரமாக இருக்கும் என்று அவன் கற்பனைகூடச் செய்ததில்லை. இந்த விதமாக இருக்கும் என்று உண்மையில் ஒரு சிறு துணுக்குத் தெரிந்திருந்தால் கூட, அவன் விபரீதமான இந்த விளையாட்டுக்கு, வேடிக்கை பேச்சாக ஆரம்பித்து வினையாக மாறிவிட்ட பந்தயத்துக்கு இணங்கியிருக்கவே மாட்டான். அறியாத்தனமாக மாட்டிக் கொண்டாயிற்று. இனி என்ன செய்வது? இரவு பூராவும் அந்த இடத்தில் இருக்க வேண்டியதுதான். வேறு வழி கிடைடாது.

விளையாட்டாக ஆரம்பித்த விவகாரம்தான் அது. ராமலிங்கமும், அவனைப் போன்று கவலையில்லாத வாலிப முறுக்கேறிய- இளவட்டங்கள் சிலரும் மலை அடிவாரக் கிராமத்துக்கு வந்தார்கள். மலைமீது உல்லாசமாக ஏறினார்கள். கரடு முரடான பாதையும், ஒருபுறம் அதலபாதாளமாய் காட்சி அளித்த மலைப்பள்ளங்களும், மறுபுறம் நெடிதுயர்ந்த கற்சுவர் என ஓங்கி நின்ற பகுதிகளும், மரங்களும், இனிய ஒலி எழுப்பியவாறே ஓடும் தண்ணீர்ச் சங்கிலிகளும் மொத்தமான இயற்கையின் ஆரவாரமற்ற கம்பீரமான எழிற் கொலுவே- அவர்களுக்கு மிகுந்த உற்சாகம் தந்தன.

சுற்றி நெளிந்து வளைந்து சென்ற பாதை வழியாக மேலே மேலே ஏறிச் செல்வது சிரமமாக இருந்தாலும் கூட, அருமையான வேடிக்கையாகவே அமைந்தது. மலை உச்சியில் நம்பிகோயிலும், ஆறும், இயற்கை வனப்பும் அவர்களுக்கு உளக் கிளர்ச்சி தந்தன.

நாகரிக உலகத்தின் அர்த்தமற்ற அவசர வேகமும் ஆழமற்ற பரபரப்பும் இல்லாத சூழ்நிலை அவர்களுக்கு இனியதாய், அற்புதமாய், சுகம்தருகிற நயமாய்த் தோன்றியது. எப்போதும் இங்கேயே இருந்துவிட முடியுமானால்!... இப்படி ஒரு நினைப்பு சிலரது உள்ளத்தில் சலனமிட்டது.

ராமலிங்கம் அந்த ஆசையை வாய்விட்டுச் சொன்னான்.

அந்தவிதமாக, தன்னந்தனியே, பகலையும் இரவையும் நாலைந்து நாட்கள் ஓட்டிவிட்டு, பிறகு கீழிறங்கி ஊருக்குள் வருகிற பூசாரி இந்தச் சூழ்நிலை வாழ்க்கையைப் பெரிதுபடுத்தவில்லையே! வயிறு என்ற ஒன்று மனிதனுக்கு இருப்பதாலும், அதன் தொல்லையைச் சகித்துக் கொள்ள முடியாமல் அதனுடைய தீய்க்கு அடிக்கடி ஏதாவது கொட்டிக் கொண்டே இருக்க வேண்டிய அவசியம் நீடிப்பதனாலும், ஏதேனும் ஒரு தொழிலைப் பிழைக்கும் வழியாகக் கொள்ள வேண்டும் என்ற தூண்டுதலினால் பூசைப் பணியை மேற்கொண்டிருந்த நபர் அந்தப் பூசாரி. அந்த ஆள் இயற்கையின் சன்னதியிலே மனம் லயித்து, இன்பமாக ஆனந்த அனுபவம் பெறமுடியாததுதான்! இவ்வாறு ராமலிங்கம் சொன்னான்.

மலைமீது, காட்டு வெளியில் தன்னந் தனியாக, இரவு நேரத்தைக் கழிப்பதற்கு மிகுந்த துணிச்சலும் பொறுமையும் தைரியமும் வேண்டும் என்று அவர்கள் பேசிக் கொண்டார்கள். அப்படி ஒரு இரவைக் கழிப்பது கூட விசேஷமான அனுபவமாக அமையுமே! இவ்விதம் வளர்ந்த பேச்சு, பந்தயத்தில் வந்து நின்றது.

சவாலை ஏற்றுக் கொண்டு செயல் புரிய யாரும் தயாராக இல்லை. முடிவில், ராமலிங்கம் இதற்கு இசைந்தான். பூசாரி இல்லாமல் தங்கியிருக்க ஒப்புக் கொண்டான். அன்று அந்த நாளாக வந்து வாய்த்தது.

இரவு நெருங்குவதற்கு முன்னரே, பூசாரியும் மற்றவர்களோடு சேர்ந்து கீழே இறங்கிவிட்டார். சில தினங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் பூசைச் சாமான்களையும் மலை அடிவாரத்தின் சிற்றூரில்

சேகரம் செய்து கொண்டு, மறுநாள் பகல் பன்னிரண்டு மணி சுமாருக்குத்தான் அவர் மீண்டும் வந்து சேருவார். நண்பர்கள் ராமலிங்கத்துக்காக சிற்றூரில் காத்திருப்ப தாகச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

கடைசி நேரத்தில் கூட, "வேண்டாம் பிரதர்! ஏன் இந்தப் பயங்கரமான சோதனை? ஒன்றில்லாவிட்டால் ஒன்று விபரீதமாக நேர்ந்துவிட்டால், என்ன செய்ய முடியும்? நீயும் எங்களோடு வந்து விடு" என்று சிலர் சொன்னார்கள்.

"அவர்களோடு போனோமில்லையே!" என்று, இரவில், தனியாக, கோயிலினுள் உட்கார்ந்த ராமலிங்கம் எண்ணினான். ஆனால் சாயங்கால வேளையில், அவன் முரட்டுப் பிடிவாதமாக, 'இதில் என்ன விபரீதம் வந்து விடப் போகிறது. பூசாரி தினசரி இந்த இடத்தில் இருக்கவில்லையா? நான் ஓர் இரவு தங்கியிருந்தால், செத்தா போவேன்!' என்று சொல்லி அவர்களை அனுப்பி விட்டான்.

"தின்ற கொழுப்பும் தீபாவளி மப்பும்" என்பார் களே, அது மாதிரியான கொழுப்பும் அறிவு மந்தமும், அகம்பாவமும்தான் என்னை அப்படிப் பேசத் தூண்டி யிருக்கும் என்று ராமலிங்கம் நினைத்தான். இப்போது மணி என்ன இருக்குமோ தெரியவில்லை. விடிவதற்கு இன்னும் எவ்வளவு நேரம் காத்திருக்க வேண்டுமோ' என்று அவன் மனம் குறுகுறுத்தது.

கைக் கடிகாரம் அவசியமான தேவைகளுள் ஒன்று என அவன் எண்ணியதில்லை. பலரைப் போல தாமும் கட்டிக் கொள்வதுதான் நாகரிகமாக இருக்கும் என்று அவன் ஆசைப்பட்டதுமில்லை. ஆனால், இப்போது நேரம் அசையாது கனத்த சுமை போல் தலைக்கு மேல் அழுத்துவது போன்ற உணர்வு வளர்கையில், தனியாக இருட்டினுள் இருக்கையில், 'சே, நேரமே போகமாட்

டேன் என்கிறதே!' என்ற எண்ணம் கம்பளிப் பூச்சியாய் அரிக்கையில், நாமும் ஒரு வாட்ச் வாங்கினோ மில்லையே! இந்தச் சமயத்தில் ஒரு கடியாரம் இருந் தால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும்! என்று நினைப்பு மீண்டும் மீண்டும் அவனுள் குமிழியிட்டது.

அது முன்னிலவுக் காலம். அகத்திப் பூ' போலவும், உருவமற்ற ஒரு முகத்தின் பெரும் சிரிப்பு போலவும், வானவெளியிலே தொங்கிக் கிடந்த அம்புலி மறைந்து விட்டது. நிலவொளியில் மலை முடிகளும் மரங்களும் மேடு பள்ளங்களும் ஒருவாறு பார்வைக்குப் புலனாகிக் கொண்டிருந்தன.

மேற்குத் தொடர்ச்சி மலை என்ற நீண்ட பெரிய மலைப்பகுதியின் தெற்கு கடைசிப் பகுதியில், ஒரு புறத்தில் அமைந்திருந்தது மலைநம்பி கோயில். பெருமலைத் தொடரின் வளமும் மிடுக்கும் காம்பீரிய மும் குறைந்து குறுகி நின்ற பகுதி அது. ஆயினும் அது கூட பெரியதாய், வியப்பு எழுப்புவதாய், அச்சம் தரக் கூடியதாய், உயர்ந்த முடிகளையும் கிடுகிடு பள்ளங் களையும் பூதாகாரத் தோற்றங்களையும் இருண்ட காடு களையும் பெற்றிருந்தது. மலையருவி சதா தடதடத்தும் காட்டாறு ஓயாமல் சலசலத்தும் இயற்கைமய ஓசை பாடிக் கொண்டிருந்தது.

நிலவு மறைந்த பிறகு எல்லாம் இருள் மொத்தை யாய் கண்ணை உறுத்தின. வான் மண்டலம் எல்லை யிலாப் பூக்காடு போல் நட்சத்திரங்களாய் ஒளி பெற்று விளங்கியது. மலை முடியின் சிலசில புதர்கள், நட்சத் திரங்கள் போல் மினுக்கிய மின்மினிகளை அடுக்கடுக் காகச் சுமந்து, தனிச் சிறப்புடன் திகழ்ந்தன.

''இரவு அமைதி நிறைந்தது இல்லை. இரவு நேரத்து மலைமுடியும் பூரணமாக அமைதி பெற்றிருக்கவில்லை. எத்தனையோ சத்தங்கள்! இனம் புரியாத பூச்சி

வகைகள் எழுப்புகிற ரகம் ரகமான ஒலிகள் எவ்வளவு!' என்று ராமலிங்கம் எண்ணினான்.

அந் நேரத்தில் கூட மெய்சிலிர்க்க வைக்கும்படியான கோர ஒலி ஒன்று காற்றில் மிதந்து வந்தது. மரங்களின் இலைப் பாதுகாப்பினுள் பதுங்கியிருந்த பறவைகள் பயந்து கதறின. குரங்குகள் கூச்சலிட்டன. இருட்டின் ஆழத்திலிருந்து பல ரகமான அலறல்கள் சிதறி வெடித்துப் பரவுவது போல் ஒலிக் குழப்பம் காற்றில் மிதந்து வந்தது.

காற்றும் வலுப்பெற்றுக் கொண்டிருந்தது.

வெளவால்கள் சிறகடித்து 'விஷ் விஷ்' என ஓசையிட்டவாறு மலைநம்பி கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன.

குளிரும் கொசுக்கடியும் அவனைப் பாதித்தன. நேரம் நகர்ந்தபோதிலும் அவனுக்குத் தூக்கம் வரவில்லை.

மலையின் வேறொரு பகுதியில், காற்றினால் மோதி உராய்ந்துகொண்டிருந்த மூங்கில் மரங்களில் நெருப்பு பற்றிக் கொண்டிருக்க வேண்டும். காற்று அதை மேலும் விசிறி, பெருந்தீயாக வளர்த்துக் கொண்டிருக்கும். அதனால் எழுந்த ஜுவாலை உயர்ந்த மரங்களின்மீது வெளிச்சம் பூசியது. அதை ராமலிங்கம் உணர முடிந்தது. அவன் அடிக்கடி மலைத்தீ பற்றிக் கேள்விப் பட்டதுண்டு.

'இதனால்தான் பறவைகளும் மிருகங்களும் வெறி பிடித்தவை போல் கத்துகின்றன போலும்!' என்று அவன் எண்ணினான்.

ராமலிங்கம் கண்களை மூடியவாறு உட்கார்ந்திருந்தான். அவன் கைகள் கதவுக் கம்பிகளை அழுத்தமாகப்

பற்றியிருந்தன. அவன் மனம் வீணான எண்ணங்களில் சஞ்சரித்தது.

''முன்பு, ஜம்புலிங்கம் இந்த மலைக் காடுகளில் வசித்து வந்தான்; எப்பவாவது கீழே போய் ஊர்களில் கொள்ளை அடித்துவிட்டு, மறுபடியும் இங்கே வந்து விடுவான். மேற்கு மலைக்காடுகள் அவனுக்கு வீடு மாதிரி!'' என்று சிலர் சொல்லக் கேள்வியுற்றிருந்தான். ஒரு வைத்தியர் மூலிகைகளைத் தேடி மலைமீது அலைவார். கரடி, கடுவாய் போன்ற மிருகங்களை அவர் கண்டிருக்கிறார்; பெரிய பாம்புகளையும் பார்த்திருக் கிறார். அவர் மூலம் அவன் கதை கதையாய்க் கேட்ப துண்டு.

அவர்கள் எல்லாம் பயம் கொள்ளாமல் எப்படித் தான் பொழுது போக்கினார்களோ? இதை நினைக்கவும் அவனுக்கு அவனது பலவீனத்தின்மீது அவன் மீதே-வெறுப்பும் வருத்தமும் ஏற்பட்டது. இப்படியா பயந்து நடுங்கிக் கொண்டிருப்பான் மனுஷன்? இவ்வளவுக்கும் நான் வெட்ட வெளியில் இருக்கவில்லையே. பாதுகாப் பான ஒரு கட்டிடத்துக்குள்தானே இருக்கிறேன்!'' என்று நினைக்கவும் அவனுக்கு அவனுடைய கோழைத்தனம் பற்றி வெட்கமும் தன்மீது ஒரு பரிதாப உணர்வும் எழுந்தன.

''கட்டிடம் என்றால்தான் என்ன? பெரிய பாம்பு ஒன்று இங்கே வந்துவிட்டால், நான் என்ன செய்ய முடியும்?'' இந்த எண்ணம் எழவும் அவன் உடல் சிலிர்த்தது. அவன் திடுக்கிட்டுக் கண்களைத் திறந் தான்.

அப்போது மெய்யாகவே அவனை நடுங்க வைக்கும் ஒரு காட்சி பார்வையைக் கவர்ந்தது.

ஒரு பாதைமீதிருந்த நெருப்புப் பந்து ஒன்று ஒரு பள்ளத்தில் பாய்ந்தது. அங்கே குதித்தவாறு, ஓடி-

வந்தது. அது என்னவாக இருக்கும் என்று புரிந்து கொள்ள முடியாதவனாய் அவன் கொள்ளிவாய்ப் பிசாசு என்பது இதுவாகத்தான் இருக்குமோ?'' என்று திகைத்தான் அதையே நோக்கியவாறு இருந்தான்.

நெருப்புப் பந்து சிறிது நேரம் பார்வையில் படா திருந்து, பிறகு அவன் இருந்த கோயிலின் பக்கமாகவே ஓடி வந்தது. நெருப்புத் தூண் போல் பட்டது. காற்றினா லும், ஓடி வரும் வேகத்தாலும் தீ திகுதிகுவென எரிந் தது. அது என்ன?

இராமலிங்கத்தின் உள்ளம் பதைபதைப்புற்றது. பயம் அவனைக் கவ்வி உலுக்கி உதறியது.

அவனது பீதியை அதிகரிக்கும் விதத்திலே, நகர்ந்து வந்த தீக்கோளத்திலிருந்து அமானுஷ்யமான, மிகவும் கோரமான, வேதனை மிகுந்த கதறல் தொடர்ந்து எழுந்து கொண்டிருந்தது. துயரத்தினால் அலறும் கத்தல்போலும், சகிக்கமுடியாத வேதனை தூண்டி விட்ட மிருக அலறல் போலும், தெளிவற்ற ஊமைக் குரலாக எழுந்த அக்கூப்பாடு மலைமீது படிந்து தொங்கிய அமைதியைக் குத்திக் குதறிக் கோரமாய் நீண்டு எதிரொலி கிளப்பியது. அந்தக் கூச்சலும் பயங்கரமான தீப் பிழம்பும் கோவிலை நோக்கியே வந்தன.

ராமலிங்கத்தின் உடல் வெடவெடத்தது. அவன் பயந்து நடுங்கினான். அவனுடைய அச்சம் தெளிவற்ற ஓலமாய் பீறிட்டது. அவன் கத்தியவாறு கண்களை மூட முயன்றான். ஆயினும் நெருப்புப் பந்தம் என்ன செய் கிறது என்று பார்க்க வேண்டும் என்று உந்துதலினால் அடிக்கடி கண்கள் திறந்து விழித்தன.

அப்போது, அந்தத் தீயின் மத்தியிலே ஒரு முகம் தோன்றியது. மிருக முகம் போல் தெரிந்தது. அதன்

கண்களில் வேதனையும் துயரமும் கலந்திருப்பதாகத் தோன்றிற்று.

பயம், எலியைப் பூனை உலுக்குவது போல அவனை உதறிக் குதறியது. அவன் செயல் திறமற்ற சிறு குழந்தை போல் கத்தினான். அவன் முகம் விகாரமாயிற்று. அவன் கைகளும் கால்களும், வலிப்பு நோய் கண்டவை போல இழுப்புண்டன. அவன் அச்சம் நிரம்பிய ஓலத்தைப் பரப்பியவாறே தரையில் புரண்டான்.

தீயில் எரிந்து கருகிக் கொண்டிருந்த மிருகமும் பயங்கரமாகக் கத்தியது.

ராமலிங்கம் சுய உணர்வு இழந்து விட்டான்.

விடிந்து சில மணி நேரம் சென்ற பிறகு பூசாரியும், இன்னும் இரண்டு பேரும் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்காக அங்கே காத்துக் கிடந்தவை-

கோயிலினுள் கட்டையாய்க் கிடந்த ராமலிங்கமும், வெளியே தீயில் கருகிக் கிடந்த ஒரு மிருகத்தின் எலும்புக்கூடும்தான்.

மிருகத்தின் எலும்புக்கூட்டை நன்கு கவனித்த கிராமவாசிகள், "ஒரு கரடி எப்படியோ மூங்கில் காட்டுத் தீயில் அகப்பட்டு எரிந்து, இங்கே ஓடிவந்து கருகிச் செத்துக் கிடக்கிறது. ஐயோ பாவம்!" என்று முடிவு கட்டினார்கள்.

மலைநம்பி சிலையருகே உணர்வற்று உயிரற்றுக் கிடந்த ராமலிங்கத்தைப் பார்த்துப் பெருச்சிசெறிந்தார் பூசாரி. 'பாவம் பயத்துக்கு பலியாகி விட்டான்' என்று தெரிவித்தார்.

☆ தினமணிக்கதிர்— 10-7-66.

# கொடுத்து வைக்காதவர்

சிலரைப் பற்றிக் குறிப்பிடுகிறபோது, 'அவனுக்கென்ன கொடுத்து வைத்தவன்!' என்று சொல்லுவார்கள். திருவாளர் நமசிவாயம் அவர்கள் அவ்வாறு குறிப்பிடப்பட வேண்டிய அதிர்ஷ்டசாலிகளுள் ஒருவர் அல்லர்.

''பாவம், கொடுத்து வைக்காதவர்!' என்றுதான் அவரை அறிந்தவர்கள் கூறுவார்கள்.

திருவாளர் நமசிவாயம் தமாஷாகச் சொல்லுவார்—

'நம்ம ஜாதக விசேஷம் அப்படி. ஐயாவாள் ஒரு நிமிஷம் முந்திப் பிறந்திருந்தால் பெரிய சீமான் பேரனாக விளங்கியிருப்பேன். சொத்தும் சுகமும் சகல பாக்கியங்களும் பிறக்கும் போதே எனக்குக் கிடைத்திருக்கும். ஆனால் எங்க ஊரிலேயே அப்படிப் பட்டவன்-கொடுத்து வைத்தவன் ஒருவன் இருக்கிறான். நான் பிறந்த அதே நாளில், ஆனால் நான் பிறந்த நேரத்துக்கு இரண்டு நிமிஷம் முன்னாலே பிறந்தவன் அவன். அதுதான் தொலையட்டும். நான் இரண்டு நிமிடம் தாமதித்துப் பிறந்திருக்கக் கூடாதோ? அப்படிப் பிறந்திருந்தால், நான் ஒரு சினிமா நட்சத்திரம் ஆகியிருப்பேன். புகழும், பணமும், பகட்டான வாழ்வும், எனக்கு வந்து சேர்ந்திருக்கும். அதுக்கும் நான் கொடுத்து வைத்திருக்கவில்லை!''

இதைக் கூறிவிட்டு அவர் அவுட்டுச் சிரிப்பு உதிர்ப்பார். அது விரக்தியும் வேதனையும் கலந்த சிரிப்பா?

வாழ்க்கையின் அர்த்தமற்ற தன்மையையும், மனித நாடகங்களையும், மனித நாடகங்களையும் வேடிக்கை யாகக் கண்டு ரசிக்கக் கற்றுக் கொண்டவனின் நையாண்டிச் சிரிப்பா? அளவிட்டுச் சொல்ல முடியாது தான்.

திருவாளர் நமசிவாயம் பிறப்பில்தான் 'கொடுத்து வைக்காதவர்' ஆகிவிட்டார் என்றால், வளர்ப்பு நிலையிலும் அவர் பிரமாத வாய்ப்புகளைப் பெற்றுவிட வாழ்க்கை உதவவில்லை.

அவர் பிறந்த சில மாதங்களிலேயே அவருடைய தாய் 'மண்டையைப் போட்டுவிட்டாள். அவள் விதி அப்படி. அதற்கு நமசிவாயம் என்ன செய்ய முடியும்? ஆனால், உறவினரும் ஊராரும் குழந்தையைத்தான் பழித்தார்கள். 'ஆக்கங்கெட்டது! பிறந்ததுமே பெத்த வளைத் தூக்கித் தின்னுட்டு நிக்குது' என்றார்கள்.

அவர் தந்தை சுமாரான வாழ்க்கை வசதிகளைப் பெற்றிருந்தார். அவருடைய கஷ்டகாலமும், அவர் செய்த செலவுகளும், வாங்கிய கடன்களும் சேர்ந்து, அவருக்கு இருந்த சொத்துகளை இழக்கச் செய்தன. அதற்கும் பையனின் துரதிர்ஷ்டம்தான் காரணம் என்று பலரும் பேசினார்கள்.

இந்த விதமாக, பல சந்தர்ப்பங்களிலும், பலரும் சொல்லிச் சொல்லி, நமசிவாயத்துக்கே அவருடைய 'அதிர்ஷ்டம் கெட்ட தனத்தில்' ஒரு நம்பிக்கை படிந்து விட்டது. அவர் வாழ்வில் அவ்வப்போது குறுக்கிட்ட நிகழ்ச்சிகளும் அவருடைய எண்ணத்துக்கு வலு வேற்றின.

'பணம் கட்டிப் பரீட்சை' என்றும், 'சர்க்கார் பரீட்சை' என்றும் முன்னோர்கள் சிறப்பாகக் குறிப் பிட்டு வந்த எஸ்.எஸ்.எல்.சி. பரிட்சையில் நிச்சயம்

பாஸ் செய்துவிடுவோம் என்ற நம்பிக்கை நமசிவாயத்துக்கு இருந்தது. எல்லாப் பாடங்களையும் 'ஒரு கை பார்த்து', கேள்விகளுக்கு உரிய பதில்களை 'வெளுத்துக் கட்டி 'ஜமாய்த்திருந்தார் அவர். ஆனாலும் பரீட்சையில் தேறியவர்கள் பட்டியலில் அவர் எண் இல்லாமல் போய்விட்டது.

அதற்காக நமசிவாயம் சிறிதும் வருத்தப்படவில்லை. 'கொடுத்து வைத்தது அவ்வளவுதான்!' என்று அலட்சியமாக ஒதுக்கிவிட்டார். அதிலும் தமாஷ் செய்வதில் உற்சாகம் கண்டார்.

'பரீட்சைகள் மூலம் யாருடைய திறமையையும் எடை போட்டுவிட முடியாது. பரீட்சையில் தேறியவர்கள் எல்லாரும் அற்புதமான புத்திசாலிகள் என்றும், பெயில் ஆகிறவர்கள் சுத்த மண்டூகங்கள் என்றும் எண்ணினால் அது அறியாமைதான். பரீட்சை விடைத்தாள்களைத் திருத்துகிற அண்ணாத்தைகள் எல்லாரும் சரியானபடி எல்லாப் பேப்பர்களையும் வாசித்து, நியாயமான மார்க்குகளைத் தருவதில் ஆர்வமும் அக்கறையும் காட்டுவதில்லை.

எட்டாவது வகுப்பு படித்த போது எனக்கு ஓர் அனுபவம் ஏற்பட்டது. ஒரு பரீட்சையில் நான் மிகச் சரியான விடைகள் எழுதியிருந்தேன். எப்பவும் நான் பிரைட் ஸ்டூடன்ட்தான். ஆனால் எனக்கு இருபத்து மூன்று மார்க்தான் கொடுக்கப்பட்டிருந்தது. தமிழில் மண்டுவான ஒரு பையன், தப்பும் தவறுமான விடைகள் எழுதியிருந்தவன், எழுபது மார்க் வாங்கியிருந்தான். பல மாணவர்களுக்கும் இது அதிசயமாகவே பட்டது. அதனால் சார்வாளிடமே இரண்டு பேப்பர்களையம் காட்டி, இது எப்படி, ஏன் என்று கேட்டார்கள். அவர் என் தாளிலுள்ள பதில்களைப் படித்தார். அடடே, ரொம்பவும் சரியாக இருக்குதே என்றார். பிறகு மறுபடி

கவனித்து மார்க் கொடுத்தார். எனக்கு எண்பத்தைந்து மார்க் வந்தது இன்னொரு பையனுக்கு பதினெட்டு மார்க்தான் கிடைத்தது. அந்த சார் தனது பாலிசியைப் பெருமையாக விவரித்தார். நான் பேப்பர் திருத்துகிற விதமே தனி. விடைத்தாள்களின் கட்டை எடுப்பேன். முதலில் இருக்கிற தாளுக்கு பாஸ் மார்க் கொடுப்பேன். அடுத்தடுத்து பெயில் மார்க்தான். இப்படி மாறி மாறிக் கொடுப்பேன். நமசிவாயம் பேப்பர் பெயரில் மார்க் பெற வேண்டிய இடத்தில் இருந்திருக்குது. அதுதான் விஷயம் என்றார். இந்த லட்சணத்திலேதான் இருக்கும் பலபேருடைய பாலிசி!' என்று நமசிவாயம் கூறினார்.

"பார்க்கப் போனால் கடவுள் கூட அந்த வாத்தியார் மாதிரிதான் நடந்து வருகிறார். நல்லவங்க, திறமை சாலிகள், தகுதி உடையவங்க கஷ்டப்படுகிறார்கள். வாழ்க்கை வசதிகள் அவர்களுக்குக் கிடைப்பதே யில்லை. ஆனால் ஏமாற்றுகிறவர்கள், அயோக்கியர்கள், மனசாட்சி இல்லாது செயல் புரிகிறவர்கள் சகல வசதி களையும் பெற முடிகிறது. இதெல்லாம் கடவுள் சித்தம் என்றால், கடவுளும் கண்மூடித்தனமாக மக்களின் வாழ்க்கையை மதிப்பிட்டு மார்க் கொடுக்கிறார் என்று தானே சொல்ல வேண்டும்?" இப்படியும் பேசுவார் நமசிவாயம்.

பொதுவாக மனிதரின், உயிர்க்குலத்தின், உலகத்தின் வளர்ச்சி வீழ்ச்சிகளையெல்லாம் பாதிக்கிற காலத்தை, கண்காணிக்கும் உபாத்தியாயர் என்று உருவகப் படுத்தினால், அந்த 'வாத்தியார்' திருவாளர் நமசிவாயம் அவர்களின் வாழ்க்கைத் தாளில் தாறுமாறான மதிப் பெண்களையே சிதறி வைத்தார் என்றே சொல்ல வேண்டும்.

நமசிவாயத்துக்குத் திருமணம் செய்து வைப்பதற்கு முன்னரே அவருடைய தந்தை 'கண்ணை மூடிவிட்டார். நமசிவாயம் பிழைப்புக்காக என்னவோ வேலைகள்

பார்த்து, எங்கெங்கோ திரிந்து, எப்படியோ ஒரு தினுசாக நாளோட்டி வந்தார். அவருடைய ஊர்ப் பெரியவர் ஒருவர், நமசிவாயம் பேரில் அனுதாபம் கொண்டோ, அல்லது பெண்ணைப் பெற்று வளர்த்து அவள் பெரியவளாகி நின்றதும் அவளை எவன் கையிலாவது பிடித்துக் கொடுத்துவிட்டுத் தங்கள் பொறுப்பைக் கழிக்கப் பெரிதும் முயன்றும் வெற்றி பெறாது தவித்த பெற்றோர் தந்த கமிஷன் தொகையைப் பெற்றுக் கொண்டதாலோ, லட்சுமி என்கிற கன்னிகையை நமசிவாயத்துக்கு வாழ்க்கைத் துணைவி யாக்கி உதவி புரிந்தார்.

இல்லற வாழ்வின் இனிமைகளைப் பூரணமாக அனுபவிக்கவும் நமசிவாயத்துக்குக் கொடுத்து வைக்க வில்லை. லட்சுமி கொடிய நோயினால் பீடிக்கப்பட் பட்டிருந்தாள். அந்த எலும்புருக்கி நோய்க்கே அவள் சீக்கிரம் பலியாகிப் போனாள்.

அதன் பிறகு நமசிவாயம் கல்யாணத்தை நாட வில்லை. குடும்ப வாழ்வுக்கு ஆசைப்படவுமில்லை. சமூக சேவை, பொதுநலப் பணி, கடும் உழைப்பு என்று பல வழிகளிலும் தன் கவனத்தையும் காலத்தை யும் செலவிடலானார். அதில் அவருக்குப் பணம் கிடைக்கவில்லை. ஓரளவு பெயர் கிடைத்தது. அவருக்கு நிறைய அன்பர்களும் வியப்பர்களும் வந்து சேர்ந் தார்கள்.

“நமசிவாயம் அவர்களின் அன்பு உள்ளத்தை, ஆற்றலை, உழைப்பை, தன்னலமற்ற சேவையை, பொதுவாக அவரது பெருமையையும் மதிப்பையும் நம்மவர்கள் நன்றாக உணரவில்லை. ஊம். அவருக்குக் கொடுத்து வைக்கவில்லை! பாவம்! அவர் மட்டும் அமெரிக்காவில் அல்லது ஐரோப்பிய நாடு எதிலாவது பிறந்திருந்தால் மிகவும் ஏற்றம் பெற்றிருப்பார்; மிகுந்த கௌரவ நிலைக்கு உயர்த்தப்பட்டிருப்பார்” பார் என்று அவர்கள் சொல்வது வழக்கம்.

பிறப்பு, வாழ்வு இவற்றில் அவருக்கு சீரும் சிறப்பும் கொடுக்காத காலம் மரணத்திலாவது பரிகாரம் செய்ததா? அதுவும் இல்லை.

முக்கியமான சமூகத் திருப்பணி ஒன்றின் காரணமாக திருவாளர் நமசிவாயம் தமது மாவட்டத்தை விடுத்து, பட்டணம் போகத் திட்டமிட்டார். இன்று போகலாம் நாளை போகலாம் என்று காலத்தை ஏலத்தில் விட்டு நாளோட்டிய பிறகு ஒருநாள் துணிந்து ரயிலேறினார்.

அங்கும் காலம் சதி செய்து விட்டது. நேற்றே கிளம்பியிருக்கணும். போக முடியல்லே. நாளைக்கு என்று இன்னும் ஒத்திப்போடுவது சரியல்ல. இன்றே போய்விட வேண்டியதுதான் என்று சொல்லி யாத்திரை கிளம்பினார் நமசிவாயம். அவர் தமாஷ் செய்து களித்த 'ஜாதக விசேஷம்' இப்பொழுது விஷமத்தனமாக விளையாடியது.

ஒருநாள் முன்னாலோ, ஒருநாள் தாமதித்தோ நேராது, அன்றைய தினம் பார்த்து கோர விபத்து ரயில் பாலத்தில் விளையாடி; ரயில் வண்டிகளைக் கவிழ்த்து, பலரைச் சாகடித்தது. செத்தவர்களில் நமசிவாயமும் ஒருவர்.

அவர் உடல் நசுங்கிச் சிதைந்து, ஆள் அடையாளம் தெரியாதபடி மாறிப் போயிருந்தது.

"பாவம், நல்ல மனிதருக்கு நல்ல சாவு கொடுத்து வைக்கலியே!" என்று அவரை அறிந்த அனைவரும் அனுதாபப்பட்டார்கள்.

திருவாளர் நமசிவாயம் வளர்ந்து, வாழ்த்து பணிபல புரிந்துவந்த நகரில் அவருக்காக- அவர் நினைவை கௌரவிப்பதற்காக- அவருடைய நண்பர்கள் இரங்கல் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அநேக பிரசங்கிகள் பங்கு கொள்வதாக இருந்தது. அதற்கான விளம்பரங்கள் முன்னேற்பாடுகள் எல்லாம் ஆர்வத்தோடு செய்யப்பட்டன.

அன்று மாலைதான் இரங்கல் கூட்டம். அதற்கு முன்னதாக மௌன ஊர்வலம்.

அது பற்றியும், பேச்சாளர்கள் நிகழ்த்தக்கூடிய நமசிவாயப் புகழுரைகள் பற்றியும், அவரது வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கத்தையும் பத்திரிகைகளில் வெளியிடு வதற்கு சிலர் தீவிர மு ற்சிகள் செய்தார்கள்.

மனிதர்கள் தீவிரமாகத் திட்டம் தீட்டுகிறார்கள். ஆனால், காலம் குறும்புத்தனமாக, அல்லது குரூரமாக, அதைச் சிதைத்து விடுகிறது.

நமசிவாயம் விஷயத்திலும் அப்படித்தான் ஆயிற்று.

அன்று காலையில், யாருமே எதிர்பார்த்திராத விதத்தில் பெரும் சோகம் உலகத்தைக் கவிந்து கொணடது. உலகப் புகழ்பெற்ற, நாட்டின் பெருந் தலைவர் ஒருவர் திடீரென்று மரணம் அடைந்தார்.

அதனால் எல்லா நிகழ்ச்சிகளும் தேக்கமுற்றன. பெருந்தலைவர் இறந்த துக்கத்தைக் கொண்டாடும் முறையில், முன்னறிவிப்பு, இல்லாமலே, பல துறை களிலும், சகலவிதமான ஏற்பாடுகளும் ரத்து செய்யப் பட்டன. பிறகு மூன்று நாள்கள் துக்கம் அனுஷ்டிக்கப் பட வேண்டும் என்று அரசு அறிவித்துவிட்டது.

திருவாளர் நமசிவாயம் அவர்களின் நினைவுக்காகத் திட்டமிடப் பெற்ற நிகழ்ச்சி மட்டும் விதிவிலக்கு ஆகி விட இயலுமா என்ன? உலகப் பெரும் நிகழ்ச்சியின் அருகே அது எந்த மூலைக்கு?

"பாவம நமசிவாயம்! அவருக்குக் கொடுத்து வைக்க வில்லை!" என்றுதான் இரக்கப்பட முடிந்தது அவருடைய நண்பர்களால்.

☆ அமுதசுரபி-நவம்பர்-1991

# அவள் ஒரு தனிப்பிறவி

நாவலாசிரியர் கனவுப் பிரியன் தபாலில் வந்த ஒரு கடிதத்தைப் படித்துப் படித்துப் பரவசமுற்றார். ஒரு பெண் எழுதிய கடிதம் அது.

புகழ்பெற்ற நாவலாசிரியரான அவருக்கு எத்தனையோ பேர் எழுதுவது வழக்கம்தான். பெண்களும் எழுதியிருக்கிறார்கள். அவருடைய படைப்புகளை புகழ்ந்து பாராட்டுவார்கள். சிலர் குறை கூறுவார்கள். ஒரு நாவலின் அந்தப் பாத்திரம் இப்படி நடந்து கொள்ளாமல் இன்ன மாதிரி நடந்து கொண்டிருந்தால் ரொம்ப நன்றாக இருக்கும் என்று சில பேர் ஆலோசனைகள் கூறுவார்கள்.

அன்று வந்த கடிதம் வித்தியாசமானது. அதை எழுதியவள் பெயரே வித்தியாசமானதாகத்தான் இருந்தது. சிநேகவல்லி.

"ஆகா, என்ன அழகான பெயர்! இனிமையான பெயர்! புதுமையான பெயர்!" என்று அவர் மனம், சுவை நிறைந்த மிட்டாயை ரசிக்கிற நாக்கு போல், அதை சுவைத்து இன்புற்றது.

ஆரம்பம் வழக்கம் போல்தான் இருந்தது. உங்கள் நாவல்களை ரசித்து மகிழ்ந்தவள் நான் என்று தொடங்கி, அவருடைய நாவல்களின் பெயர்களை அடுக்கி, கதைமாந்தரின் தன்மைகளை வியந்து பாராட்டியிருந்தாள்.

"நீங்கள் என்ன நினைப்பீர்களோ, ஏது கருதுவீர்களோ என்றுதான் இதுவரை எழுதவில்லை. எழுதாமல் இருந்தால் பித்துப் பிடித்துவிடும் என்று தோன்றவே எழுதுகிறேன். நீங்கள் கற்பனை ஞாயிறு. உங்கள் பொன்ஒளிக் கதிர் இந்த எளிய தும்பைப் பூ மீது படாதா என்று ஏங்குகிறேன். உங்கள் விசால இதயத்தின் குளுமையான அன்புப் பனித்துளி என் மேல் படியாதா என்று அண்ணாந்து நிற்கும் அபலைப் புல் நான்" என்று எழுதியிருந்தாள் அந்தப் பெண்.

நாவலாசிரியர் கனவுப் பிரியன், தனது வழக்கத்துக்கு மாறாக, உடனடியாக பதில் எழுதி அனுப்பினார். சிநேகவல்லி என்ற பெயரைப் புகழ்ந்து பாராட்டி மகிழத் தவறவில்லை.

அவள் பண்பு இப்படி அமையும் என முன்பே அறிந்தவர்கள் போல அவருடைய பெற்றோர்கள், அவளுக்குப் பொருத்தமாக சிநேகவல்லி என்று பெயரிட்டிருந்ததை வியந்து பாராட்டினார், மூன்றாவது கடிதத்தில்.

நட்புடன் குழைந்து, பிரியத்தைக் குழைத்து, அன்பாகக் கடிதங்கள் எழுதும் இனிய பெயருள்ள பெண்ணுக்குக் கடிதங்கள்கூடவா எழுதக் கூடாது என்று அவர் மனம் பேசியது. ஆகவே, கனவுப்பிரியன் கடிதங்களில் விளையாடினார். தமாஷ் பண்ணினார். சீண்டினார். சிரிக்க வைத்தார். அவருக்கு சிநேகாமீது காதல் ஏற்பட்டு விட்டதாகவே தோன்றியது.

மகாகவி மண்ணின் மைந்தன் ரசமான பேர்வழி, மண்ணின் மைந்தன் என்பது எப்படி அவரே அவருக்கு வைத்துக் கொண்ட பெயரோ, அதே மாதிரித்தான் 'மகாகவி' என்ற பட்டத்தையும் அவராகவே அவருக்கு சூட்டிக்கொண்டார்.

ஏன் அப்படிச் செய்யக் கூடாது? அவரவருக்கு விருப்பமான பட்டங்களை அவரவரே சூடிக்கொள்கிற காலமாகத்தானே இருக்கிறது இது! இப்படி அவர் வாதாடினார். புது உலகம், புரட்சி, சமூகசீர்திருத்தம், புதுமைப் பெண், புதியமனிதன், புது வாழ்வு என்றெல்லாம் புதுக்கவிதைகளை முழக்கிக் கொண்டிருந்த அவர் காதல் கவிதைகளையும் நிறையவே எழுதி வந்தார்.

அவருக்கும் சிநேகவல்லி கடிதம் எழுதியிருந்தாள். அவரும் அவளுக்கு ரசம் நிறைந்த கவிதைக் கடிதங்கள் எழுதி வந்தார். எழுதுவதுடன் நில்லாது, மற்றவர்களிடம் சொல்லியும் மகிழ்ந்தார்.

ஒரு கருத்தரங்கத்தில் மண்ணின் மைந்தன், கனவுப் பிரியனை சந்திக்க நேர்ந்தது. பேச்சோடு பேச்சாகக் காதல் விஷயமும் தலைகாட்டியது. கவிஞர் சிநேகவல்லிக்கு தான் எழுதும் காதல் கடிதக் கவிதைகளை மிகுந்த ஈடுபாட்டோடு எடுத்துச் சொன்னார்.

''யாரு, சிநேகவல்லியா?'' என்று பதறினார் கனவுப் பிரியன்.

''ஏன், அவளை உங்களுக்குத் தெரியுமா?'' என்று சகஜமாக விசாரித்தார் 'மண்'.

''எனக்கும் அவள் கடிதங்கள் எழுதுகிறாள் என்றார், கனவு''.

''ஆகவே நீங்களும் அவளுக்கு எழுதுகிறீர்கள் காதல் கடிதங்கள்! அப்படித்தானே? ஹெஹ்!'' என்று மூன்றாவது குரல் வெடித்தது அங்கே.

மர்மக்கதை மன்னன் இந்திரநாத் புன்முறுவல் பூத்தபடி அருகில் வந்து நின்றார்.

மற்ற இருவரும் அவரை ஒரு தினுசாகப் பார்த்தார்கள்.

மர்மம் சிரித்தது. "சிநேகவல்லி என்ற பெயர் கேட்டது. அருகில் வந்தேன். அதுக்கு முந்திய பேச்சையும் கேட்டேன்..."

"சிநேகவல்லி என்ற பெயர் உம்மை காந்தமாகக் கவர்வானேன்? என்று கேட்டார் கவிஞர்.

"அத்தப் பெயருள்ள ஒருத்தி எனக்கும் கடிதங்கள் எழுதுகிறாள். நானும் பதில் எழுதுகிறேன். அதில் காதலும் கலந்திருக்கும்" என்றார் இந்திரநாத்.

"ஆங், அப்படியா?" என்று அதிசயப்பட்டார் நாவலாசிரியர்.

மூன்று பெரிய புள்ளிகள் சேர்ந்து நிற்கிறார்களே என்று நாலாவது நபராக வந்து நின்றார் எழுத்தாளர் ஏ.ஏ.ஏ.

ஏரியூர் ஏகநாத ஏகாம்பரம் என்பது அவர் பெயர். முதல் மூன்று எழுத்துக்களை மட்டுமே அவர் உபயோகித்து வந்தார். மற்றவர்கள் கிண்டலாக 'ஏ. ஏ. ஏய்' என்று அழைக்கவும் அது உதவியது.

"ஐயா, நீர் பெரிய எழுத்தாளராச்சுதே. உமக்கு காதல் கடிதங்கள் வருமே? வந்திருக்குதா?" என்று மர்மம் துப்புத்துலக்க முற்பட்டார்.

'ஹே!' என்று விசித்திர ஒலி எழுப்பினார் ஏ.ஏ.ஏ. "எனக்கு யாரு அப்படி எல்லாம் எழுதப் போறா! சர்குலேசன் அதிகம் உள்ள பத்திரிகைகளில் அடிக்கடி எழுதுகிற உங்களைப் போன்ற ஸ்டார் எழுத்தாளர்களுக்கு நிறையக் கடிதங்கள் வரும். சிறு பத்திரிகைகளில் சுழன்று கொண்டிருக்கிற எனக்காவது காதலாவது கடிதமாவது பெண்ணாவது எழுதுறதாவது!" என்று இழுத்தார் அவர்.

"சரியான அறுவை" என்று மண்ணின் மைந்தன் முணுமுணுத்தார்.

"அவர் எழுத்தும் அப்படித்தான் இருக்கும்!" என்றார் மர்மக் கதை மன்னன்.

அங்கே புதிதாக வந்த பத்திரிகைத் துணை ஆசிரியர் சாந்தப்பன், 'இங்கே என்ன மாநாடு?' என்றார் இடக்காக.

காதல் மாநாடு' என்று மகாகவி பதில் சொன்னார்.

"காதலி தென்படலையே?" இது சாந்தப்பன்.

'அதுக்குத்தான் சிநேகவல்லியை தேடுகிறோம்' என்று மர்மக்கதை அறிவித்தார்.

"சிநேகமா! அவள் இங்கே எங்கே வந்தாள்?" என்று கேட்டார் சாந்தப்பன்.

"ஏது உங்களுக்கும் அவளுக்கும் உறவு நெருக்கமோ?"- மகாகவி.

"இல்லே இல்லே. சும்மா கடிதத் தொடர்பு" அவ்வளவுதான்.

"உங்களுக்கும் அவள் எழுதுகிறாளா?" என்று அதிர்ந்து போனார் நாவலாசிரியர்.

"ஊம்ங்...யார் யாருக்கெல்லாமோ எழுதுறாள்னு கேள்விப்பட்டேன். ஏன் அப்படிச் செய்கிறாள்னுதான் புரியலே. என்றார், சாந்தப்பன்.

மர்மக்கதை மன்னன் குரல் கொடுத்தார்; "அதை நாம் கண்டுபிடித்தே தீரணும்."

'அதுக்கு ஒரு வழி செய்வோம்' என்றார் மகாகவி.

என்ன, என்ன என்று அவர் முகத்தை நோக்கினார்கள், மற்றவர்கள்.

"எனது கவிதைத் தொகுப்பின் வெளியீட்டு விழா நடக்க இருக்கிறது: நீங்கள்தான் அதை வெளியிட வேண்டும். இல்லாவிட்டால், முதல் பிரதி பெற்று

கவுரவிப்பவராக வரவேண்டும் என்று அவளுக்கு எழுதிக் கேட்கிறேன் பெரிய ஓட்டல் ஒன்றைக் குறிப்பிட்டு தேதி, நேரம் எல்லாம் தெரிவித்து எழுத லாம். அவள் வருவாள். அப்போ பிடித்துக் கொள்ள லாம்'' என்று கவிஞர் திட்டம் தீட்டினார்.

மற்றவர்களும் 'நல்ல ஐடியா!' எனப் பாராட்டி னார்கள்.

அவ்விதமே கவிஞர் சிநேகவல்லிக்கு எழுதினார். அவளும் இசைவு தெரிவித்துக் கடிதம் எழுதினாள்.

குறிப்பிட்ட நாளில் கனவுப் பிரியன், மண்ணின் மைந்தன், மர்மக்கதை மன்னன், துணை ஆசிரியர் சாந்தப்பன், நால்வரும் பிரபல ஓட்டலில் காத்திருந் தார்கள் ஆவலோடு. காலம்தான் ஓடியது. சிநேகவல்லி வரவேயில்லை.

எல்லோருக்கும் ஏமாற்றம்தான்.

நாவலாசிரியர் கனவுப் பிரியன் அவளைக் காண லாம் என எதிர்பார்த்துக் காத்திருந்ததையும், அடைந்த ஏமாற்றத்தையும் விவரித்து அவளுக்குக் கடிதம் எழுதத் தவறவில்லை.

மண்ணின் மைந்தன் உண்மையை அறிந்தே தீர்வது என்ற முடிவுடன் சிரமங்களை பாராட்டாது, சிநேகவல்லியின் ஊருக்கே போய் விட்டார்.

அவரது திடீர் வருகை அவளுக்கு திகைப்பு அளித் தது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, சந்தோஷம் காட்டி வரவேற்றாள்.

அவள் தோற்றம் கவிஞரை திடுக்கிட வைத்தது. நிஜ சிநேகவல்லி அவர்களுடைய கற்பனையை பொய்யாக்கும் விதத்தில் இருந்தாள். அவர்கள் அனை வரும் குளு குளு இளம் பெண் ஒருத்தியைத்தான் நினைத்திருந்தார்கள்.

' இவள் கிழவி மாதிரி அல்லவா இருக்கிறாள்! வயசு முப்பது முப்பத்திரண்டுதான் இருக்கும். அதுக்குள் முதுமை பெற்று, வாட்டத்தோடு காணப்படுகிறாளே'' என்று கவிஞர் மனம் விமர்சித்தது.

அவள் அவருக்குத் தேநீர் உபசாரம் செய்தாள். கவிதை நூல் வெளியீட்டு விழா இனிது நடந்ததா என்று விசாரித்தாள். தான் வர இயலாது போனது பற்றி ஏதேதோ சொன்னாள். தனக்கு ஒரு புத்தகம் கொண்டு வந்திருக்கிறாரா என்று ஆவலுடன் கேட்டாள்.

மண்ணின் மைந்தன் சாரமற்ற பதில்கள் சொன்னார். சாதுர்யமாக, அவள் எழுதும் கடிதங்களுக்குப் பேச்சைத் திருப்பினார்.

''எனக்கு மட்டும்தான் நீங்கள் ஆசையோடு எழுதிக் கொண்டிருப்பதாக நினைத்தேன். நாவலாசிரியர் கனவுப்பிரியனும் அப்படித்தான் நம்பியிருந்தார். மர்மக் கதை மன்னனும், துணை ஆசிரியர் சாந்தப்பனும் உங்கள் அன்புக்கு பாத்திரமானவர்கள் என்பது பிறகு தான் தெரிந்தது. இதெல்லாம் என்ன? இன்னும் எத்தனை பேருக்கு கடிதங்கள் எழுதி மயக்கி காதல் கடிதங்கள் பெற்று வருகிறீர்கள்?''

கவிஞர் சாதாரணக் குரலில்தான் பேசினார். ஆயினும் அதில் குத்தல் மறைந்திருந்தது. வறட்டுத் தனம் கலந்திருந்தது. அவர் எழுதிய கடிதங்களில் நிறைந்திருந்த பிரியமும் நேசமும் அன்பும் தென்படவே யில்லை.

சிநேகவல்லியின் கறுத்து வதங்கிய முகம் மேலும் வாட்டமுற்றது. கலகலப்பாக பேசக்கூடிய இளம் பெண் ஒருத்தியை சந்திக்க நினைத்து வந்த கவிஞர், கண் கலங்கிக் குறுகுறுவென உட்கார்ந்திருக்கும் 'பேரிளம் பெண்'ணைப் பரிதாபத்துடன் பார்க்க வேண்டி யிருந்தது.

“இப்படிப் பலருக்கும், பெயர் பெற்ற அநேகருக்கு, ஆசையாக எழுதி, சமயம் பார்த்து அன்பளிப்புகள், பணம், பொருள் என்று தட்டிப் பறிக்கலாம் என்பது உங்கள் உள்நோக்கமாக இருந்திருக்குமோ?” என்று கேட்டார், கவிஞர்.

“ஐயோ, அவ்வளவு மட்டமாக என்னை நினைக்க வேண்டாம்” என்றாள் அவள். அழத் தொடங்கி விட்டாள்.

இப்போது கவிஞர்பாடு சங்கடமாகிவிட்டது. அவளை எப்படி தேற்றுவது, அவள் அழுகையை எப்படி நிறுத்துவது என்று புரியாமல் தவித்தார்.

சிநேகவல்லி தானே தன்னைத் தேற்றிக் கொண்டு, மெதுமெதுவாகத் தன் கதையை சொன்னாள். வாழ்வின் சோகம்தான். அவளுக்கு கல்யாணமாக வில்லை. சமூகக் கொடுமைகள்தான் காரணம். அவள் எவ்வளவோ ஆசைப்பட்டாள்; கனவுகள் வளர்த்தாள்; இன்பமயமான எதிர்காலம் சித்திக்கும் என்று எதிர் பார்த்தாள். நிகழ்காலம் சுட்டெரிக்கும் கோடையாக நீண்டு கொண்டிருந்தது. ஏமாற்றம் அவளைக் கருக்கி யது. பைத்தியக்காரத்தனமாக — விளையாட்டுப் போக்கில்— அவள் இதில் ஈடுபட்டாள். தனக்கும் காதல் கடிதங்கள் வர வேண்டும், தன் மீது பிரியம் வைத்து இனிக்கும் கடிதங்கள் எழுதுகிறவர்கள் இருக் கிறார்கள் என்ற நிறைவு வேண்டும் என அவள் மனம் ஆசைப்பட்டது. அப்படிப்பட்ட கடிதங்கள் எழுதக் கூடும் என எண்ணித்தான் நாவலாசிரியருக்கும், கவிஞருக்கும், மற்றவர்களுக்கும் அவள் எழுதினாள். இதில் அவள் ஏமாறவில்லை. அவர்கள் சுவை மிகுந்த, இன்பரசம் தோய்ந்த கடிதங்களை அவளுக்கு அனுப்பி னார்கள்.

"காதல் கடிதங்கள் சேகரிப்பது எனக்கு மகிழ்ச்சி தரும் பொழுது போக்கு. வேறே என்ன சந்தோஷம் இருக்கு என் வாழ்க்கையில்?" என்றாள் அவள். பெருமூச்செறிந்தாள். பரிதாபகரமாகச் சிரித்தாள்.

இது ஒரு சைக்கலாஜிக்கல் கேஸ்—உளப்பரி சோதனைக்குரிய நபர் என்று கவிஞர் கருதினார்.

"அது சரி, இப்படி அஞ்சாறு பேருக்கு ஆசைமூட்டி கடிதங்கள் எழுதினீர்களே. அது வளர்ந்து முற்றி சந்திப்பு, கல்யாணம் அப்படி இப்படி என்று வந்து விட்டால்? உங்கள் காதலர்கள் உங்களை முற்றுகை யிட்டால்? அப்ப எப்படிச் சமாளிப்பீர்கள்?" என்று கேட்டார்.

சிநேகவல்லி விரக்தியாகச் சிரித்தாள். "காதலை யார் சார் அப்படி சீரியசா எடுத்துக் கொள்கிறார்கள்! ஏதோ நிகழ் காலத்திலே ஜாலியாகப் பொழுது போக்க வாய்ப்பு கிடைத்தால் சரிதான் என்றுதானே பலரும் நினைக்கிறார்கள்!" என்றாள்.

"இல்லே. நிலைமை முற்றிவிடுகிறது என்று வைத்துக் கொள்வோம்..."

"அதெல்லாம் ஒன்றும் முற்றாது சார். இப்ப நீங் களும்தான் எனக்கு ஆசையாகக் கடிதம் எழுதினீர்கள், என்னைக் கல்யாணம் செய்துக் கொள்ளலாம் என்ற எண்ணம் உங்கள் உள்ளத்தில் ஏற்பட்டது உண்டா? அப்படியே எண்ணம் இருந்தாலும் என்னை நேரில் பார்த்த பிறகும் அது நீடித்திருக்குமா? நெஞ்சிலே கை வைத்துச் சொல்லுங்கள்?" என்று சவால் விடுவது போல் பேசினாள் அவள்.

கவிஞர் மண்ணின்மைந்தன் அசட்டுச் சிரிப்புடன் பேசாமல் இருந்தாரே தவிர, அவளுக்கு நேரடியாக பதில் சொல்ல இயலவில்லை.

☆ "தேவி" 24-4-1985

# சுற்றுலாப் போன சொக்கய்யா

சொக்கய்யா ஒரு மட்டும் ஊரை விட்டுக் கிளம்புவது என்று தீர்மானித்து விட்டார். 'ஸேரி, கொஞ்சம் மாறுதலாத்தான் இருக்கட்டுமே இப்படிப் போயி அஞ்சாறு இடங்களைப் பார்த்திட்டு வரலாமேன்னுதான் என்று அவர் காரணத்தையும் ஒலி பரப்பலானார். சொக்கய்யாவைப் பொறுத்தமட்டில், இது லேசான விஷயம் அல்ல. அவர் எடுத்தது 'மகத்தான முடிவு' ஆகும்.

சொக்கு, சொக்கய்யா என்று சிவபுரத்தினரால் குறிப்பிடப்பட்டு வந்த சொக்கய்யாப் பிள்ளைக்கு சமீபத்தில்தான் ஐம்பது வயது நிரம்பியது. 'ஐம்பதைக் கடந்து ஐம்பத்தொன்றாவது வயசில் காலெடுத்து வைத்த விசேஷத்தைக் கொண்டாடுவதற்காகவும் அவர் உள்ளம் இந்த மாபெரும் தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கக் கூடும்.

அவருக்கு ஐம்பது வயது ஆகிவிட்ட போதிலும், அவர் நாலு இடங்களுக்கும் போய் வந்து அனுபவம் பெற்றவர் அல்லர்! போக வேண்டிய அவசியம் எதுவும் ஏற்பட்டதில்லை என்பதல்ல, 'எதுக்காகங்கேன் வெளியூர் போய் வரணும்?' என்றுதான் அவர் கேட்டுக் கொண்டிருந்தார். வீட்டை விட்டு வெளியே கிளம்புவதே அவருக்குப் பிடிக்காத விஷயம் ஆகும்.

எத்தனையோ பேர் என்னனென்னவோ சொல்லி அவரைப் பரிகசித்துப் பார்த்தார்கள். குற்றாலத்துக்குப் போம்; கன்னியாகுமரியைப் பாரும்! அங்கே போய்

வாருங்கள். இங்கே போனால் என்ன என்று அவ்வப் போது அவரை சீண்டினார்கள்.

அவர் வீட்டுத் திண்ணையில் "வட்டச் சம்மணம் போட்டு' பிள்ளையார் மாதிரி உட்கார்ந்தபடி அலட்சிய மாகச் சிரிப்பார். வாயில் அடக்கி வைத்திருக்கும் வெற்றிலை எச்சிலை சளப்பென்று துப்பிவிட்டு, 'அஹஹ, போறவங்க எங்கே வேணும்னாலும் போய்ப் பாருங்களேன். எனக்கு எந்த இடத்தையும் பார்த்து ஆக வேண்டியது எதுவுமில்லை" என்பார்.

'ஐயா சொக்கு, நீ எங்கே போனாலும் போகா விட்டாலும், மதுரையை போய் பார்த்திட்டு வந்திரு. மதுரை எப்படியாப்பட்ட ஊரு! மதுரை பாராதவன் கழுதையின்னே பெரியவங்க சொல்லி வச்சிருக்காங்க" என்று மீனாச்சி ஆச்சி அவரிடம் அடிக்கடி சொல்வது உண்டு.

'ஆச்சி, மதுரை பெரிய ஊரா, அழகான ஊரா இருக்கலாம். ஆனா அதைவிடப் பெரிய ஊருக இல்லைன்னு சொல்லமுடியாது. அப்படி இருக்கையிலே, மதுரையைப் பார்த்தால்தான் சன்ம சபால்யம் அடை யும்கிற மாதிரிப் பேசுவது சரியில்லை. அதனாலே மதுரை பாராதவன் கழுதை என்பதும் சரியான பேச்சு இல்லை" என்று சொக்கய்யா சொல்வார்.

அத்துடன் பேச்சை விட்டுவிட மாட்டார். "நம்ம வங்களே கருத்துள்ள பல வசனங்களையும் சொல் லடைவுகளையும் அர்த்தம் இல்லாததா ஆக்கிப் போட் டாங்க. அறப்படிச்ச மூஞ்சூறு காடிப் பானையிலே விழும். இப்படி ஒரு பழமொழி சொல்லுவாங்க. மூஞ்சூறுக்கும் படிப்புக்கும் என்ன சம்பந்தம்? அறப் பிடிச்ச முன்சோறு காடிப்பானையில் விழுகிறதுதான் சரியான வசனம் சோறு வடிக்கையிலே இறுகப் பிடிக்கிறபோது முதல் பருக்கை எப்படியும் கஞ்சித்

தண்ணியோடு விழத்தான் செய்யும்; அதைத்தான் இது குறிக்கிறது. அதே கதைதான் இந்த மதுரை பழமொழிக்கும். மறதி பாராதவன் கழுதை என்பதுதான் சரி, எங்கேயாவது புறப்படுகிறபோது, அல்லது ஏதாவது காரியம் செய்யத் திட்டமிடுகிறபோது. எல்லாம் சரியாக இருக்குதா; எதையாவது அசந்து மறந்து விட்டுவிட்டோமா என்று நினைச்சுப் பார்க்கணும். அதுதான் மறதி பார்த்தல். அப்படி நினைச்சுப் பார்க்காமல், எல்லாம் சரியாக இருக்கும்னு தெம்பிலே போயிட்டு, அப்புறம் அது மறந்து போச்சே — இது மறந்து போச்சேயின்னு தலையைச் சொறிஞ்சபடி முழிச்சுக்கிட்டு நிற்பானே அவன் சரியான கழுதை இன்னு இதுக்கு அர்த்தம்'' என்று 'லெக்சர் அடிப்பார்'. அவர் சுபாவம் அது.

ஒரு அம்மாள் அவரிடம் பேச்சோடு பேச்சாகச் சொன்னாள் ''ஒரே ஊரில் இருக்கிறதை விட, கோயில் குளம், புண்ணிய தீர்த்தம் புது இடங்கள்னு போயிட்டு வர்றதுதான் நல்லது. அதுக்காகத்தானே மலை மேலேயும், கடலுக்கிட்டேயும் கோயில்களை அமைச்சிருக்காங்க. நான் எல்லா இடங்களையும் பார்த்தாச்சு. இன்னும் ரெண்டு இடம் பாக்கி இருக்கு. மானூர் கோயிலையும் மருதூர் அணையையும் பார்க்கலே'' அதுகளையும் சாகுறதுக்குள்ளே பாத்திரணும். செத்ததும் கடவுள், மருதூர் அணையும் மானூர் அம்பலமும் கண்டாயான்னு கேட்பாராம்.

சொக்கய்யா அட்டகாசமாகச் சிரித்தார். ''மானூர் அம்பலமும் மருதூர் அணையும்தான் ரொம்ப அற்புதமானவையின்னு கடவுள் நெனச்சுக்கிட்டிருந்தா அவரு ரொம்பப் பத்தாம் பசலிச் சாமியாத்தான் இருப்பாரு. நாட்டிலே உலகத்திலே என்னென்ன அற்புதமான கட்டிட வேலைப்பாடுகள், அணைக்கட்டுகள் எல்லாம் உண்டாகியிருக்கு இப்ப! நீ போயி மானூரையும்

மருதூரையும் பெருசாச் சொல்லுறியே!' என்று பரிகசித்தார்.

''ஒருத்தன் எல்லாவற்றையுமே பார்த்துவிட முடியாது. மேலும் புதுசு புதுசாக் கண்டு மனசை விசாலப் படுத்துறதுக்கு ஊர் ஊரா ஓடிக்கிட்டே இருக்கணும்கிற தையும் நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். பல மரம் கண்ட தச்சன் ஒரு மரமும் வெட்டமாட்டான். உருண்டு உருண்டு கொண்டே இருக்கிற கல்லில் பாசி ஒட்டாது. வெளியூர் எங்கும் போகாமலே, இங்கே உட்கார்ந்து எதிரே இருக்கிற குப்பைத் தொட்டியையும், அங்கே வந்து காலைக் கிளப்பி ஈரப்படுத்திவிட்டு ஓடுகிற நாயையும் பார்த்துக்கிட்டே நான் எத்தனையோ விஷயங்களை உணர முடிகிறது. மேலத் தெருவிலிருந்து கீழத் தெருவுக்கு மெதுவாக நடந்தாலே, ஒரு பிரயாண அனுபவங்களை என்னாலே பெறமுடியுது. பின்னே என்ன?'' என்பார்.

''அகராதி புடிச்ச அண்ணாவி?'' 'தலைக்கனம்' - 'ஹெட் வெயிட்!' என்று மற்றவர்கள் சொக்கய்யாவைப் பற்றிக் குறிப்பிடுவார்கள். 'கிணற்றுத் தவளை' என்றும் சொல்வார்கள்.

பொதுவாகவே, சிவபுரத்தார்கள் ஊர் சுற்றுவதில் அவா உடைய உல்லாசப் பிரியர்களாக வளர்ந்ததில்லை. ரொம்பகாலம் வரை 'மணியாச்சிக்கு வடக்கே' திக்கு திசை தெரியாதவர்களே அவ்வூரில் அதிகமாக இருந்தார்கள். அப்புறம் மதுரை வரை போய் வந்த பெருமை பெற்றோர்கள் அநேக புள்ளிகள். இளந்தலைமுறையினரில் சிலர் சென்னைக்குப் போய் வந்த சிறப்பை அடைந்தார்கள்.

பஸ் போக்குவரத்து அதிகமாகவும் சர்வ சாதாரணமாகவும் ஆகியுள்ள தற்காலத்தில், ஊரில் இருப்பதை

கௌரவக் குறைச்சலாகவும் 'போர் அடிக்கும்' விஷயமாகவும் கருதுகிறவர்கள் சிவபுரத்திலும் அதிகரித்து விட்டார்கள். நினைத்த உடனேயே சட்டையைப் போட்டுக் கொண்டு, பஸ்ஸில் ஏறி டவுனுக்கோ ஜங்ஷனுக்கோ போய்விட வேண்டியதுதான்.

வேலை இருக்கிறதோ இல்லையோ, தினசரி சிவபுரம் கிராமத்திலிருந்து டவுண் அல்லது ஜங்ஷனுக்குப் போய் வருகிறவர்களின் எண்ணிக்கை கணிசமாகவே இருக்கும். "பொழுது போகலே இப்படி டவுனுக்குப் போயி போத்தி ஓட்டலில் காப்பி சாப்பிட்டுட்டு, அங்கே இங்கே நின்று போட்டு வந்தால் தனி உற்சாகம் ஏற்படுது. 'ஜங்ஷன் போனேன். ராஜ் கபேயில் டிபன் பண்ணிட்டு, ஒரு படம் பார்த்தேன்' என்று பெருமை பேசும் 'ஜம்பம் ஜான்கள்' ஒன்றிருவர் அல்லர், நகரங்களை ஒட்டி இருக்கிற கிராமங்களில் சகஜமாகக் காணப்படுகிற இந்த ரகப்பிரகிருதிகள் சிவபுரத்திலும் இருந்ததில் வியப்பு இல்லைதான்.

அவர்கள் மத்தியில் 'எதுக்காகங்கேன் வெளியூர் போகணும்?' என்று கேட்டுக் கொண்டு ஊரை விட்டு அசையாமல் இருந்த சொக்கய்யாதான் காலத்தோடு ஒட்டி வராத அபூர்வ ஆசாமியாகத் தென்பட்டார்.

அவர் உற்றார் உறவினர் வீட்டுக் கல்யாணம், கருமாதி என்று சொல்லியும் சிவபுரத்தை விட்டு வெளியேறுவதில்லை. "எனக்கு வீட்டுச் சவுகரியம் வேறு எங்கேயும் கிடைக்காது. வேறே இடத்திலே ராத் தங்குவது எனக்கு ஒத்துக்கிடாது. அதிகாலையிலே எழுந்து குளித்து விட்டு, பூசை பண்ண வெளி இடங்களில் போதுமான வசதி இருப்பதில்லை. அதனாலேயே நான் வெளியூர் விசேஷங்களுக்குப் போவதில்லை. வே, நான் செத்தால் வெளியூர்காரன் எவனும்

வர வேண்டாம். சிவபுரத்திலே இருக்கிறவங்களே என் கட்டையைத் தூக்கிட்டு ஆத்தங்கரைக்குக் கொண்டு போய் எரிச்சுப் போடுவாங்க. பின்னே என்ன!'' என்பார்.

''இவரு கிட்டே யாரு பேசுவா?'' என்று மற்றவர்களும் சும்மா இருந்துவிட்டார்கள்.

இப்பேர்ப்பட்ட 'கல்யாண குணங்கள்' உடைய சொக்கய்யா திடீரென்று 'நான் இப்படி மதுரை, திருச்சி, மதராஸ் எல்லாம் போய் வரப்போறேன்' என்று அறிவித்தால் அது லேசுப்பட்ட விஷயமா என்ன? சிவபுரம் வீடு தோறும் பேச்சுக்கும் சர்ச்சைக்கும் இலக்காகும் பரபரப்புச் செய்தி இல்லையா!

''என்ன அண்ணாச்சி, வெளியூர் போகப் போறீகளா? என்று விசாரித்த தம்பியா பிள்ளைகளும், 'தாத்தா மெட்ராஸ் பார்க்கப் போறேளா? எனக் கேட்ட பேரப் பிள்ளைகளும், 'மாமா டூர் கிளம்பியாச்சு போலிருக்கு?' என்று பேச்சுக் கொடுத்த மருகன்களும் மருமகள்களும், 'பெரியப்பா, என்னைக்குப் புறப்படுறீங்க?' 'சித்தப்பா, எங்க எல்லாம் போக எண்ணியிருக்கீங்க?' என அக்கறையாக வினவிய மகன்களும் அவ்வூரில் நிறையவே இருந்தார்கள்.'' தங்களது பிரயாண அனுபவங்களையும், மேலான ஆலோசனைகளையும் எத்தனையோ பேர் அவரிடம் சொன்னார்கள்.

இதெல்லாம் சொக்கய்யாவுக்கு சந்தோஷத்தோடு எரிச்சலும் தந்தன. ''சவத்துப் பயலுக, இருக்கிறவனை இருக்கவும் விடமாட்டாங்க, சாகிறவனை சாகவும் விட மாட்டாங்க. எவனும் எக்கேடும் கெடுதானுன்னு விட்டுப் போட்டு அவனவன் வேலையைப் பார்க்கலாமே, என்கிறதே இவனுகளுக்கு இல்லை பாருமேன்'' என்று அவர் முணமுணத்தார்.

அதற்காக மற்றவர்கள் தங்கள் இயல்புகளை விட்டு விடுவார்களா? அவரிடம் வந்து, பஸ்ஸில் போவதன் சௌகரியம் பற்றி வர்ணித்தார்கள் சிலர். 'பஸ்களை நம்பப்படாது; நடுராத்திரியிலே திசை தெரியாத இடத்திலே டயர் வேடிச்சிட்டுதுன்னு சொன்னா, அங்கேயே காத்துக் கிடக்கப் போட்டிருவான், ரயிலுதான் ரொம்ப சௌகரியம். காலை, கையை நீட்ட எழுந்து நிற்க, நடக்க... நினைச்சா, படுத்துக்கிடவும் செய்யலாமே,' என்ற தன்மையில் விவரித்தார்கள் அநேகர்.

அவர்களிடம் எரிந்து விழாமலும் உள்ளக் கடுகடுப்பைக் காட்டிக் கொள்ளாமலும் இருப்பதற்கு அவருக்கு மிகுந்த பொறுமை தேவைப்பட்டது.

ஒரு மாதிரியாக ஒருநாள் சொக்கய்யா ஊரை விட்டுக் கிளம்பிப் போனார். என்று திரும்புவேன் என்று யாரிடமும் சொல்லவில்லை.

"ஆசாமி அவுட்! இன்னும் பத்துப் பதினைஞ்சு நாளைக்கு ஆளை பார்க்க முடியாது" என்று சிவபுரம் வாசிகள் பேசிக்கொண்டார்கள். 'அவருக்கென்ன! சுகவாசி. இரண்டு மூணு வாரம் கேம்ப் போட்டாலும் போட்டிருவாரு' என்றும் சிலர் சொன்னார்கள்.

அவர்கள் சொக்கய்யாவை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை தான். புறப்பட்டுப் போன மூன்றாம் நாளே சொக்கய்யா ஊரில் தமது வீட்டுத் திண்ணை மீது வட்டச் சம்மணம் போட்டு உட்கார்ந்து, வெற்றிலைச் செல்வத்தை பக்கத்தில் திறந்து வைத்து வெற்றிலையை ரசித்துப் போட்டுக் கொண்டிருந்தார். இந்த சகஜமான காட்சி இப்போது பார்த்தவர்களுக்கு ஆச்சரியமாகப்பட்டது.

"என்ன அண்ணாச்சி, எங்கேயும் போகவே இல்லையா? என்று கேட்டார்கள்.

"போகாம என்ன! மதுரை, மெட்ராஸ் எல்லாம் போனேனே" என்றார் அவர்.

"பின்னே அதுக்குள்ளே திரும்பி வந்துட்டீகளே?" என்று மேலும் ஆச்சரியப்பட்டார்கள் அவர்கள்.

"போனேன். வந்தேன்" என்றார் சொக்கய்யா. வெற்றிலைச் சாற்றை உமிழ்ந்துவிட்டு வழக்கமான தொனியில் அறிவித்தார் :

"முதல்லே மதுரக்குத்தான் போனேன். வே, மதுரை முன்னாலே. அழகான ஊரா இருந்திருக்கலாம். இப்போ அங்கே அழகு எதையும் என்னாலே காண முடியலே எங்கு பார்த்தாலும் லாட்ஜுகள், கட்டிடங்கள், கடைகள், ஜன நெருக்கடி ஒரே கூட்டம். நான் முக்கியமான தெருக்களில் எல்லாம் நடந்து பார்த்தேன். ஜனப்பெருக்கமும் அசுத்தமும் போட்டி போட்டு வளர்கிற ஒரு நகரமாகத்தான் அதுவும் இருந்தது. கோயிலுக்கும் போனேன். என் மனசுக்கு எதுவுமே பிடிக்கலே போம். உடனே திருச்சிக்கு ரயிலேறினேன். அவன் தம்பி அங்கதன் என்பார்களே, அதுமாதிரித்தான் இருக்கு இதுவும். மதுரையிலாவது வீதி அமைப்புகளில் ஒரு ஒழுங்கு முறை இருக்கு. திருச்சியிலே ஒரு எழவுமே இல்லை. அங்கேயும் தங்கியிருக்க எனக்கு மனமில்லை. மெட்ராசுக்குப் போனேன். என்ன ஊரு அது! சே! ரொம்பப் பெரிசா இருந்துட்டாப்போதுமா? கட்டிடங்கள் மாடிக்கு மேலே மாடி வச்ச கட்டிடங்கள், அகலம் அகலமான ரோடுகள், ஏகப்பட்ட ஓட்டல்கள் சினிமாத் தியேட்டர்கள், எங்கே பார்த்தாலும் கடைகள் - கடைகள் - கடைகள்னு இருந்துட்டால் போதுமா? எப்ப பார்த்தலும் கூட்டம். எங்கேயும் கும்பல், நெருக்கடி பரபரப்பு, எதுக்காக மனுசங்க இப்படி இடிச்சு நெருக்கிக்கிட்டு, அவசரமும் பரபரப்புமா வாழணுமின்னு எனக்குப் புரியலே. அமைதி

வேண்டாமா? அப்புறம் ஆனந்தம் எங்கேயிருந்து கிட்டும்? பெரிய ஊருதான், நிம்மதியா, சௌகரியமா, குளிக்க வசதி உண்டா? ஏதோ குளிக்கிறோம்னு பேர் பண்றதுக்காக, ஒரு வாளித் தண்ணியிலே உடம்பைக் கழுவிக்கிட்டு... சேச்சே, எனக்கு அது பிடிக்கவே யில்லே. என்னென்னமோ தட புடலாப் பேருகளை வச்சிருக்காங்க. எந்த ஓட்டலிலே போய் தின்னாலும், ரூபாய்தான் பறக்குதே தவிர, வயிறு முட்டச் சாப்பிட முடியலே. சாப்பிட்டோம்கிற திருப்தியும் ஏற்பட மாட்டேன்குது. நம்ம வீட்டிலே பழையச் சோறும், சுண்டல்கறியும் சாப்பிட்டால் ஏற்படுகிற குளுமையும் திருப்தியும் இந்த மூணு நாளிலே எந்தப் பெரிய ஓட்டலி லும் எனக்கு ஏற்படவே இல்லே. அதுதான் பார்த்தேன். நமக்கு, மதுரையும் சரிப்படாது, மதராசும் ஒத்துவராது; நம்ம ஊருக்கே போயிட வேண்டியதுதான்னு உடனேயே ரயில் ஏறி விட்டேன். சே, என்ன கூட்டம், என்ன நெருக்கடி! அர்த்தமில்லாத அவசரம்! செச்சே, எனக்கு எதுவுமே பிடிக்கலே'' என்றார்.

சொக்கய்யா ஆற்றுக்குப் போய் சுகமாகத் தண்ணீரில் குளிரக் குளிர மூழ்கிக் களித்தார். ''ஆ, இந்த சுகத்துக்கு எதுதான் ஈடாகும்? இப்படிக் குளிப்பதே சந்தோஷமா இருக்குதே!'' என்று அந்த இன்பத்தில் லயித்துமிதந்தார். பிறகு அடிக்கடி தனது எண்ணங் களை ஒலிபரப்ப அவர் தயங்கவில்லை.

''ஆற்றுத் தண்ணீரில் ஆனந்தமாகக் குளிப்பது ஒரு சுகம். அமைதி நிறைந்த சூழ்நிலையில்:அவசரம் எதுவும் இல்லாமல் தன் காரியங்களைச் செய்து கொண்டிருப் பதில் ஒரு சந்தோஷம், நிம்மதியாய் தூங்குவது ஒரு சுக அனுபவம். இதுமாதிரி, வாழ்க்கையிலே சந்தோஷங் களுக்குக் குறைச்சலே இல்லை. மனுசங்கதான் இதை உணர்ந்து அனுபவிக்கத் தவறிடுறாங்க.''

சிவபுரம் கிராமத்தில் உள்ளவர்களுக்குக் கூட அவர் பேச்சு பிடிக்கவில்லை. நாகரிக நகரவாசிகள் அவருடைய கருத்துக்களை ஒத்துக்கொள்வார்களா என்ன?

"சுத்தப் பைத்தியக்கார மனுஷன்! ஒவ்வொருத்தன் மெட்ராசுக்குப் போகணும் ஸிட்டியை சுத்திப் பார்க்கணும்னு தவியாய் தவிச்சுக்கிட்டிருக்கான். அங்கேயே வசிக்கணும்னு எத்தனையோ பேரு பறவாப் பறக்கிறாங்க. இவரு என்னடான்னா...ஹஹ!" என்று சிரிப்பிலே பேச்சை முடிப்பது ஊரார்களது வழக்கமாயிற்று. மற்றவர்களின் நற்சான்று பெற வேண்டும் என்று சொக்கய்யா என்றுமே ஆசைப்பட்டவர் இல்லைதான்.

☆ தீபம்—அக்டோபர்-1975

# தேவகியின் மனப் பண்பு!

"ஓ என் ராஜா" என்று குயில்போல் கூவினாள் தேவகி.

இப்படிக் கூவுகிற போதே அவள் மயில் போல் ஆடி அசைந்தாள் என்று தனியாகக் குறிப்பிட வேண்டியது அவசியம் இல்லைதான். கொஞ்சிக் குழைந்து நெருங்கி வரும் இளம் பெண் சிலை மாதிரியா நின்று கொண்டிருப்பாள்... அதிலும், தேவகி ஆடல், பாடல், நடிப்புக் கலைகள் பலவும் கை வந்த பெண் ஆயிற்றே!

அவளுடைய 'ராஜா' ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். அவன் பெயரும் ராஜா என்றே இருக்கட்டுமே! அதில் என்ன கஷ்டம், அல்லது நஷ்டம்!

முகத்தை திருப்பாமலே அவன், "என் மான் குட்டிக்கு இப்ப என்ன வேண்டும்?" என்று கேட்டான்

"ராஜா, ராஜா, ராஜா!" என்று உணர்ச்சி தளும்பும் தேன் குரலை இழைய விட்டாள் அவள். 'உகுங்' என மணிச் சிரிப்பு தெறிக்க வைத்து, அவன் அருகில் ஓடி, வளையல்கள் கலகலக்க தனது கரங்களை அவன் தோள்களில் தவழச் செய்தாள். அவன்மீது துவண்டாள்.

அவனுக்கு அவள் செயல் கசக்கவில்லை. என்றாலும், "ஐய, என்ன இது தேவகி!" என்று சொல்லி வைத்தான். "ஜோரா முன்னேறிக் கொண்டிருந்த கவிதை ஓட்டத்தைத் தடுத்து விட்டாயே!" என்று முணங்கினான்.

தேவகி சிரித்தாள். அவள் விரல்கள் அவன் முகத்தை நிமிர்த்தின. "இனிய கவிதையாக நானே வந்துவிட்ட பிறகு, வறண்ட சொல் ஓட்டம் பற்றி நீ ஏன் கவலைப்பட வேண்டும்?" என்றாள். நாடகங்களிலும், திரைப்படங்களிலும் நடிப்பதற்காக நீண்ட நீண்ட வசனங்களை மனப்பாடம் செய்து பேசிப் பழக்கப் பட்டவள்தானே அவள்! அதனால் அன்றாட வாழ்விலும் தேவகியின் பேச்சில் நாடகத்தனம் கலந்து காணப்படாமல் போவதில்லை.

நாடகங்களிலும் படங்களிலும் அவளுக்குரிய பாடல்களை-சில சமயம் வசனங்களையும்-எழுதிக் கொடுப்பவன் ராஜா. அவனுக்கு அவளும், அவளுக்கும் அவனும் காந்தமாயினர். அவர்களது கூட்டுக் களிப்பினிலே இன்பக் கவிதை நிறைந்து திகழ்ந்தது.

தேவகி மிகுந்த புகழ்பெற்ற நடிகை அல்ல. மிகப் பலரின் கண்களை கூசச் செய்கிற நட்சத்திர அந்தஸ்தை அவள் பெற்றிரா விட்டாலும், அவள் பெயருக்கு ஒரு வசீகரத்தை ஏற்படுத்தும் அளவுக்கு போதுமான புகழ் அவளுக்கு இருந்தது. அவளிடம் பணம் தாராளமாக புரண்டு கொண்டிருந்தது. அவளுக்கு என்று அழகான சிறு கார் ஒன்றும் இருந்தது. சொந்த வீடு கட்டுவது பற்றி திட்டமிட்டு வந்தாள் அவள்.

இவ்வளவு வாழ்க்கை வசதிகளும், மேலும் வளர்ச்சிக்கு உரிய வழிவகைகளும் பெற்றிருந்த தேவகி,

கவிஞர் என்று சொல்லித் திரிந்த ராஜாவை சுற்றி வளையமிட்டு மயங்கிக் கிடந்தது கலை உலகத்தி னருக்கு அதிசயமாகத்தான் தோன்றியது.

ராஜா பணக்காரன் அல்ல. புகழ் மிகப் பெற்றவனும் இல்லை. ஏதோ சுமாராக பணம் வந்து கொண்டிருந்தது அவனுக்கு. எப்படியோ வாழ முயன்ற அப்பாவி அவன். ஆனால், ஆள் அழகாக இருந்தான்.

இந்த கடைசி தகுதிதான் தேவகியை வசீகரித்த காந்த சக்தியாக உதவியது. வெறும் ராஜாவாக-அல்லது அவன் சொல்லிக் கொண்டது போல கவி ஏ. ராஜா என்று-அலைந்த அவனுக்கு கார் சவாரி, காதல் அனுபவம், செலவுக்கு பணம் மற்றும் வாழ்க்கை வசதி கள் எல்லாம் திடீரென்று வந்து சேரவும், அவன் உண்மையிலேயே 'ராஜா மாதிரி' பொழுது போக்க முடிந்தது.

'அவனுக்கு வந்த அதிர்ஷ்டம்' என்றும் 'யோகம்' பாக்கியசாலி-கொடுத்து வைச்சவன்' என்றும் பலரும் பலவாறு பேசி பெருமூச்செறியும்படியாக அவனுடைய வாழ்க்கை மாறி விட்டது. பிறர் அபிப்பிராயங்கள் பற்றி என்றுமே அவன் கவலைப்பட்டதில்லை.

தேவகியும் அப்படித்தான்.

ஆகவே அவள் அவனை தனது ராஜாவாக ஏற்றுக் கொள்ளத் துணிந்தது போலவே, அவன் அவளை தன் ராணியாக வரித்துக் கொண்டான்.

"நாம் இருவரும் கல்யாணம் செய்து கொண்டு வாழலாம். எப்போ திருமணம் வைத்துக் கொள்ளலாம்? நம்ம கல்யாண விழாவை சீக்கிரமே நடத்தி விடலாமே," என்று அவள் அடிக்கடி கூறி வந்தாள்.

தன் வாழ்வில் திடீரென வந்த வசந்தத்தை நிலை யானதாக மாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை

கவி ஏ.ராஜாவுக்கும் இல்லாமல் இல்லை. எனினும், எப்பொழுதும் அவள் கையையே எதிர் பார்த்து காத்துக் கிடக்கும் கணவன் அந்தஸ்து அவனுக்கு மகிழ்வூட்டும் கவர்ச்சியாகத் தோன்றவில்லை. பொருள், புகழ், மதிப்பு முதலிய நிலைகளில் அவளைவிட உயர்ந்த படியை எட்டிப்பிடிக்க முடியாமல் போனாலும் கூட அவளுக்கு சமமான அந்தஸ்தைத் தேடியாக வேண்டும் என்று துடித்தது அவன் உள்ளம்.

தன்னுடைய திறமையும், உழைப்பும், பெரும் புகழைப் பெற்றே ஆகவேண்டும்-பெற்றே தீரும் எனும் உறுதியோடு, நம்பிக்கையோடு, ஆர்வத்தோடு உழைத்தான். "புகழ் வந்த பிறகு பணம் தானாக வரும். அல்லது வராமலே போனாலும் கவலை இல்லை!" என்று அவன் எண்ணுவது வழக்கம்.

தனது எண்ணத்தை அவன் தன் ராணியிடம் சொல்லத் தயங்கியதுமில்லை.

அவன் எழுதிக் கொண்டே இருந்தான். என்னென்னவோ முயற்சிகள் செய்தான். அவளும் அவன் மனசை மாற்ற தன்னாலான வரை முயன்று கொண்டுதான் இருந்தாள்.

அன்றும் அதேதான் நடந்தது.

எழுத்துக்கு தடை போட்டபடி எதிரே வந்து நின்ற இன்பத்தை ஏறெடுத்துப் பார்த்தான் கவிராஜா. மோகன முறுவல் பூத்தான்.

''காலமெல்லாம் வீணாகுதே!'' என்று இழுத்தாள் அவள்.

''இல்லை. பொழுதை பொன்னாக மாற்றும் ரசவாத வித்தையில் ஈடுபட்டிருக்கிறேன்.'' என முணகினான் அவன்.

"கவிக்கும் பொன்னுக்கும் ஒத்துவராது ராஜா, பொழுதை பூவாக, நிலவாக, அமுதமாக, இனிமையாய். சுவையாய், சொர்க்கமாய், ரசமானதாக, ரம்மியமானதாக மாற்றுவோம்," என அடுக்கினாள் அலங்காரி.

முடிவிலே பேச்சு அவர்களின் தீராப் பிரச்னையைத் தொட்டது.

"தேவகி, நீ ஏன் சும்மா கல்யாணம் கல்யாணம் என்று தொண தொணக்கிறே? நான் உன்னை விட்டுப் போய் விடுவேன் என்ற பயமா?" என்று ராஜா தமாசாகக் கேட்டான்.

"நீ பயப்படாமல் இருந்தால் சரிதான்!" என்று கோணல் பார்வை பார்த்து குறும்பாக பேசினாள் தேவகி.

அவன் தன் எண்ணத்தை மறைத்து வாய் நிறைந்த சிரிப்பைக் காட்டினான். பிறகு சொன்னான்: "இன்னும் சிறிது காலம்தான். அதுக்கு பிறகு ஐயாவை பாரேன். கவி ஏ. ராஜா மகாகவி ஏ. ராஜாவாக உயர்ந்திருப்பார். எனது 'மின்னல் மகள்' காவியம் எங்கும் சிறப்புற்று விளங்கும். அப்புறம் சான்சுகள் என்னை தேடி வரும். அது நாடகமாக அரங்கேறப் போகிறது. உடனடியாக படம் ஆகும். பிறகு படத்துக்கு மேல் படங்கள்- ஏகப் பட்ட சான்சுகள்! பாடல்கள்! மகாகவி ஏ. ராஜா... கதை, வசனம், பாடல்- மகாகவி ஏ. ராஜா! ஆகா! ஆகா... புகழ்! பணம்! அந்தஸ்து! உயர்! ஆகா, அடி ராணி, என் ராணிக் கண்ணு! தேவகிக் குட்டி..."

'மகாகவி'யின் கற்பனைக்கும் கைகளுக்குமிடையே கிடந்து- குரங்கு கைப் பூமாலை போல் திணறினாள் தேவகி. அவளுக்கு 'ஆனந்த மென் சொல்வேனே!' என்ற உள்ளக் குதூகலம்தான் ஏற்பட்டிருக்கும்.

கவி ஏ. ராஜாவின் கனவுகள் வெறும் பகற் கனவுகளாகப் புகைந்து போகவில்லை. அவன் தனது உள்ளம், உணர்வு, உழைப்பு மூன்றையும் ஈடுபடுத்தி உருவாக்கிய 'மின்னல் மகள்' காவிய நாடகம் வெற்றிகரமாக அரங்கேறியது. புத்தகமாக வெளி வந்தது. விரைவில் திரைப்படமாயிற்று. அது எங்கும் உரிய பொருள் ஆகிவிட்டது. கவி ஏ. ராஜாவின் பெயர் மீது ஒரு தகத்தகாயம் படரக் காலம் துணை செய்தது.

புகழ் போதை கவியை கிறக்கி, அவனை செயலற்றவனாக மாற்றி விடவில்லை. வெற்றி பெற்று தந்த உற்சாக மிடுக்கோடு அவன் 'பூலோக சுந்தரி' எனும் காவியத்தை அற்புதமாக உருவாக்குவதில் முனைந்தான்.

அவன் எதிர்பார்த்தபடியே கலை உலகப் பண மனிதர்கள் அவனை நாடி வந்தார்கள். அவன் உறுதியாய் தெரிவித்தது போல, நாளுக்கு நாள் அவனுடைய பணம், புகழ், அந்தஸ்து நிலைமை உயர்ந்து கொண்டே இருந்தது.

கவி ஏ. ராஜா, தேவகியிடம் தங்கள் கல்யாணம் பற்றி உற்சாகமாகப் பேசலானான். விரைவிலேயே மண விழாவை மிகச் சிறப்பாக நடத்தி விடலாம் என்று திட்டம் தீட்டி வர்ணித்தான். தேவகி குதூகலித்துக் கும்மாளமிட்டுக் கூத்தாடுவாள் என்று அவன் நம்பினான்.

ஆனால், அவன் எதிர்நோக்கிய விதத்தில் இல்லாது போயிற்று, தேவகி தந்த எதிரொலி. அவள் முன் போல் அதில் ஆர்வம் காட்டவில்லை.

'எல்லாம் சரியாகி விடும்' என்று நம்பிய கவி தனது லட்சிய வேட்டையில் தீவிரமாக முன்னேறிக் கொண்டிருந்தான். பணம் நிறைய வரவும், தனக்கென ஒரு

காரும், பங்களாவும் வாங்கினான். அவனாகவே கல்யாணத்துக்கு ஒரு நல்ல நாள் குறித்துக் கொண்டு, மகிழ்ச்சியோடு தேவகியை சந்திக்கப் போனான்.

அவன் கனவிலும் கருதியிராத- அவனுடைய மகா கவித்தனம் கற்பனை கூட செய்ய முடியாத- வரவேற்பு அவனுக்காக காத்திருந்தது தேவகி வீட்டில்.

"அம்மா வீட்டில் இல்லை. நீங்க யாரு?' என்று கேட்டு, அவனை வாசலிலேயே தடுத்து நிறுத்தினான் புதிய காவலாள் ஒருவன்.

கவியின் முகத்தில் ஓங்கி அறைந்தது மாதிரி இருந்தது அச்செயல். அவனுக்கு கோபம் கொதித்து வந்தது. "ஹெஹ், நான் யாரா? இந்த வீட்டிலே என்னிடமே அப்படிக் கேட்க ஒரு ஆளா? ஹெ ஹ..." என்று உறுமினான் அவன்.

"யாரப்பா அது, வழி தவறி வந்து விட்ட நடிக சிகாமணி?" என்று கிண்டலாகக் கேள்வி எறிந்தபடி தேவகி வெளியே வந்தாள். வாசல்படி ஓரத்தில் ஒய்யார மாக நின்று, அலட்சியமாக அவனைப் பார்த்தாள். "ஓ, மகாகவியா? பேஷ்! ஜீவசத்து அளவுக்கு அதிகமாகி விட்டதோ?" என்று நையாண்டியாக சொல் வீசினாள்.

"மகாகவியை பேட்டி காண இந்த நடிகைக்கு இன்று நேரமில்லை. சென்று வருக கவிஞரே!" என்று சொல்லி, முற்றுப்புள்ளி போல் களுக்கென ஒரு சிரிப்பு சிந்தினாள். மின்னல் மகள் என நடந்து மறைந்தாள் தேவகி.

ராஜாவுக்கு உலகமே தலைகீழாக சுழல்வது போலி ருந்தது. தன் தலையைக் கையினால் பற்றிக் கொண்டு

தள்ளாடும் நடையோடு திரும்பினான். வந்த வழியே போனான்

இந்த அனுபவத்தை அவன் மறக்கவே இல்லை. எப்படி மறக்க முடியும்? தேவகியின் மாறுதலை அவனால் புரிந்து கொள்ள இயலவில்லை. அவளை- அவள் பண்பை- மனநிலையை- எத்தகைய பெரும் பிசகு என்பதை நினைக்கும்பொழுது கவிக்கு மன வேதனை எழுவது உண்டு.

தேவகி, மாதவன் எனும் அழகன் ஒருவனை தனது ராஜாவாக ஏற்றுக் கொண்டிருக்கிறாள் என்ற செய்தி கலை உலகில் வேகமாக பரவியது. அவன் சாதாரண நடிகன்; சுமாரான புகழும்; பண வருவாயும் உடைய வன். எனினும் ஆள் அழகாக இருப்பான் எனும் உண்மைகளை அறிந்தவர்கள் மாதவனின் அதிர்ஷ்டம் என்றார்கள். ராஜா- ஐயோ பாவம்! என அனுதாபம் உதிக்காதவர் எவருமில்லை என்றே சொல்ல வேண்டும்.

கவி ஏ. ராஜா யோசித்தான்- யோசித்துக் கொண்டே இருந்தான். அவனுடைய சிந்தனை மண்டலத்தில் குழப்பம் கவிந்திருந்தது. அது மாறிப் புரண்டு மின்னொளி தெறித்தது. அவனுக்கு தெளிவு ஏற்பட்டது. ஆமாம், சந்தேகமே இல்லை என்று திடமாகக் கூறியது அவனது மனக்குறளி.

தேவகி தன்னைவிட அந்தஸ்தில், புகழில், ஆற்றலில் குறைந்திருப்பவனைத்தான் அவாவுகிறாள். தனது தயவில் வாழ்வதாக அவன் நம்ப வேண்டும். அப்பதான் தனது இஷ்டம்போல் தன் கணவனை ஆட்டி வைக்க முடியும் என்பது அவள் எண்ணம் என்று தெரிகிறது. தேவகியின் கணவன் எனும் தகுதி யில் பிரகாசிக்கக் கூடிய ஒருவனே அவளுக்கு

வேண்டும். அவளுடைய புகழை மங்க வைக்கும் அந்தஸ்து பெற்றுவிடுகிற சுயம்பிரகாசி- அவளுக்கு அடங்கி நடக்க விரும்பாது தன் போக்கில் செயல்புரிகிற ஒருவனின் மனைவி என்ற கவுரவத்தை அவள் விரும்பவில்லை. தேவகி ஆசைப்பட்டு தேடுவது உண்மையான ராஜாவை அல்ல; அழகான ஒரு கூஜாவைத்தான்! இப்படி அறிவுறுத்தியது அவன் சிந்தனை.

“ஆகா! தேவகியின் இந்த மனோபாவம் இதுவரை எனக்குப் புரியாமல் போய் விட்டதே!” என்ற வருத்தம் அவனுக்கு ஏற்படத்தான் செய்தது. இருந்தாலும் ஒரு ஆனந்தத் துடிப்பு அதை அமுக்கியது.

“இந்த அனுபவ ஒளியை எனது பூலோக சுந்தரி காவியத்தில் பதிவு செய்து விடலாம்!” என்ற மகிழ்ச்சியே அது. ●

☆ தினமலர்—தீபாவளிமலர் 1992

# ராஜப்பாவின் வெற்றி

திருநகரின் முக்கியமான புள்ளிகளில் ஒருவர் ராஜப்பா. ஊராரின் கவனிப்புக்கு உரிய, பலரது பேச்சுக்கும் பொருளாகத் திகழ்ந்த, நபர்களில் தனிச் சிறப்பு உடையவர் அவர்.

அப்படி விசேஷச் சிறப்புக்கு உரியவராகத் தன்னைத் தானே ஆக்கிக்கொண்டவர் அவர்.

அவருடைய ஆரம்பகாலப் பெயர் நடராஜன் என்றிருந்தது. அதைக் கூட ஸ்டைலாக நட்ராஜ் என்று அவர் ஆக்கிக் கொண்டிருந்தார். ஆதியிலேயே. அப்புறம் வீட்டாரும் உறவாரும் ஊராரும் அன்பாய், பிரியமாய், சுருக்கமாய் அழைத்து வந்த ராஜா என்பதையே தனது பெயர் எனப் புழக்கத்தில் விட்டிருந்தார், கொஞ்ச காலம்.

அதன் பிறகு, அவரது வியப்புக்கும் அபிமானத்துக்கும் இலக்காகியிருந்த நாடகச் சக்கிரவர்த்திகளும், நாடக கேசரிகளும், அப்பா என முடியும் பெயர்களைக் கொண்டிருந்ததால் கிட்டப்பா, செல்லப்பா, சுந்தரப்பா என்ற மாதிரி— அவரும் தன் பெயரை ராஜப்பா என்று திருத்திக் கொண்டார்.

அதற்கு மேலும் தன்னுடைய பெயரை மாற்றிக் கொள்ள வேண்டும் எனும் ஆசை அவரைப் பிடித்து ஆட்டிவைக்காததால் அவருக்கு அந்தப் பெயரே நிலைத்து விட்டது.

திருநகர் என்கிற சுமாரான அந்த டவுனில் ராஜப்பாவை தெரியாதவரே கிடையாது என்று உறுதியாகச் சொல்லலாம். திருநகரின் தேரோடும் திருவீதிகளில் இருமருங்கிலும் உள்ள வீடுகளில் வசித்தவர்களும், தெருவில் போய் வருகிற வேலை அல்லது பழக்கம் உடையவர்களும், ராஜப்பாவை ரொம்ப நன்றாக அறிவார்கள். பள்ளிக்கூடம், போகிறவர்களும், அலுவலகம் செல்கிறவர்களும், காலையிலும் மாலையிலும், தினசரி அவரைக் கண்டுகளிக்கும் வாய்ப்பைப் பெற்றிருந்தார்கள். அந்தியிலும், இரவிலும் சினிமா பார்ப்பதற்காக தியேட்டர்களின் முன்னே குழுமுகிற வழக்கத்தை உடைய நகர மைந்தரும் மகளிரும் ராஜப்பாவையும் கண்ணாறக் காண வேண்டிய ஒரு காட்சியாகக் கருதினார்கள்.

திருக்கோயிலின் திருவீதித் திருஉலா உற்சவமூர்த்திகள் தினத்துக்கு ஒரு அலங்காரமும், வேளைக்கு ஒரு கோலமும் பூண்டு, விதம் விதமான வாகனங்களின் மீது எழுந்தருளி, பக்தகோடிகளை மகிழ்விப்பது போலவே, ராஜப்பாவும் தினுசு தினுசாகத் தன்னை அலங்கரித்து கொண்டு தெருக்களில் உல்லாச பவனி வந்து திருநகர் மக்களை சந்தோஷப்படுத்தி வாழ்ந்தார்.

அவருக்கு வசதி நிறையவே இருந்தது. தாத்தா திரட்டி வைத்த சொத்து, அப்பா சம்பாத்தியம் பண்ணிச் சேர்த்த நிலபுலன்கள் ரொக்கம் எல்லாம் போக, அவரும் தலைமயிரை தியாகம் பண்ணி சொத்து சேகரிக்க இரண்டு மூன்று தடவைகள் வாய்ப்பு கிட்டியது.

அவருக்கு நெருங்கிய உறவினர் சிலருக்கு 'கொள்ளி வைக்க' புத்திர பாக்கியம் இல்லாமல் போன காரணத்தினாலே, ராஜப்பா கொள்ளி வைத்து மொட்டை போட்டுக் கொண்டார். பணத்தோடு பணமும், சொத்

தோடு சொத்தும், வீடுகளும், பங்களாவும் வந்து சேர்ந்தன.

இது போன்ற வாய்ப்புகளும் வசதிகளும் கிடைக்கப் பெறுகிறவர்கள் 'ஷோக்சுந்தரர்' களாகவும் 'ஜில்ஜில் மைனர்' களாகவும் நாளோட்டுவதில் ஆர்வம் காட்டு வது இயல்பு. இப்படிப்பட்ட 'பிள்ளையாண்டான்' களுக்கு நகைகள் காய்த்துத் தொங்குகிற மரங்கள் போன்ற—சொத்து பத்து உடைய சதை மூட்டைகளான அல்லது நோய் பற்றிய எலும்புக் கூடுகளான—பெரிய இடத்துப் பெண்களில் ஒருத்தி மனைவியாக வந்து சேருவதும் சம்பிரதாயம் தான்.

ராஜப்பாவுக்குப் பெண் கொடுப்பதுக்கென்று பெரிய இடங்கள் பல தேடி வந்தன.

''நமக்கும் கல்யாணத்துக்கும் தோட்டம் தூர!'' என்று சொல்லி அனைவரையும் ஒதுக்கிவிட்டார் அவர். 'வாழ்க்கையிலே சந்தோஷமா இருக்க வேண்டியது தான் முக்கியம். ஐயாவாள் கல்யாணம் இல்லாமலே சந்தோஷமா இருக்க முடியுது. பின்னே என்னத்துக்கு கால்கட்டும், பொறுப்புகளும், பிச்சுப்பிடுங்கல்களும்!' என்று அவர் அடிக்கடி சொல்லலானார். ஆகவே, கல்யாணம் அவரை விட்டு ஒதுங்கிப் போய்விட்டது.

சைக்கிள், மோட்டார்பைக், அருமையான கார் எல்லாம் அவரிடம் இருந்தன. இவை போதாதென்று 'இரட்டைக் குதிரை சாரட்டு' ஒன்றும், ஜோரான ஜட்கா வண்டியும், கம்பீரமும் அழகும் எடுப்பும் மிடுக்கும் நிறைந்த மணியான குதிரைகளும் அவர் வைத்திருந் தார். அவற்றை எல்லாம் மெருகு குலையாது மினுமினு வெனப் பாதுகாத்து வருவதற்காக தனித்தனி ஆட்களும் ஏற்பாடு செய்திருந்தார்.

ஒவ்வொரு நேரத்தில் ஒவ்வொன்றிலே உல்லாசமாக சவாரி செய்து திருநகரின் தெருக்களைச் சுற்றி வருவது ராஜப்பாவின் பொழுதுபோக்கு ஆகவும், வேலையாகவும் இருந்தது. மாலை வேளைகளில் மெதுவாக நடந்தும் ரதவீதிகளைச் சுற்றுவார். அவருடைய சித்தம் எந்த வேளையில் எந்தப் போக்கு போகும் என்று எவராலும்சொல்ல இயலாது.

ஒரு காலத்தில் தலைமுடியை நீள வளர்த்து 'கொண்டை போட்டு'த் திரிந்த ராஜப்பா, பிறகு நாடகக் கலை இளவரசுகளும், நாடக ராஜாக்களும் செய்து வந்தது போல் கழுத்து வரை தொங்கும்படியாக முடியை வெட்டி விட்டிருந்தார். பிறகு, அவரது அன்புக்கும் மதிப்புக்கும் உரிய நாடக உலக அண்ணாச்சி ஒருவர் அழகான கிராப் வைத்துக்கொள்ளவும், இவரும் அவர் காட்டிய பாதையில் முன்னேறினார்.

இதெல்லாம் திருநகர் மக்களுக்கு வேடிக்கையாகவும் பேச்சுக்கு உரிய ரசமான விஷயமாகவும் அமைந்தன. அனைத்தினும் மேலாக, அவருடைய உடை அலங்கரக் கோலாகலங்கள்தான் ரொம்ப ரொம்ப கவனிப்புக்கு உரியனவாக மிளிர்ந்தன.

விதம் விதமான டிரஸ்கள் அணிந்தார் ராஜப்பா. நாடக மேடையில் பிரதான பாத்திரங்கள் எடுப்பாகவும் ஜோராகவும், பகட்டாகவும் பளபளப்பாகவும், ஸ்டைலாகவும் ஆடைகள் அணிந்து மினுக்குவது போல, அவர் வாழ்க்கை நாடகத்தில் உல்லாசமாகத் திகழும் நடிகராக நடந்து கொண்டார். மற்றவர்கள் வேடிக்கை பார்ப்பதையோ, பிரமிப்பதை அல்லது பரிகசிப்பதையோ வியப்பதை அல்லது ரசிப்பதையோ அவர் பொருட்படுத்தவில்லை.

"அந்தக் காலத்து ராஜாக்கள், பிரபுக்கள், ஜமீன்தார்கள் எல்லாம் தங்கள் இஷ்டம் போல், விதம்

விதமாக ஆடை அணிகள் உடுத்து உல்லாசமாக வாழ வில்லையா என்ன? இப்படி எல்லாம் டிரஸ் செய்து கொள்வது எனக்கு சந்தோஷம் தருகிறது. எனக்கு என் சந்தோஷம்தான் முக்கியம்'' என்று அவர் அடித்துச் சொன்னார். அப்புறம் அவரிடம் யார் பேசுவார்கள்?

திருநகரில் எப்போதாவது முகாமிடும் நாடகசபை யின் நித்திய, நிரந்தர ஆதரவாளர் ராஜப்பா. நாடகத்தில் பெயர் பெற்ற நடிகர்கள் பலருக்கும் அவர் நண்பர். தனக்கு வேண்டிய நடிகர்களின் உபயோகத்துக்காக அவர் தனது காரை, சாரட்டை, ஜட்காவை உதவத் தயங்குவதில்லை பெயர் பெற்ற நடிகர்களை வீட்டுக்கு அழைத்து விருந்து கொடுத்து உபசரிப்பவர்களின் முன்னிலையில் அவரும் இருந்தார். அவர்களோடு சேர்ந்து போட்டோ எடுத்துக் கொண்டு, அவற்றைப் பெரிதுபண்ணி, வீட்டுச் சுவர்களில் மாட்டி அகமகிழ்ந் தார் அவர்.

ராஜப்பாவின் செயல்களுக்கு அடிப்படையாக ஒரு லட்சியம் இருந்தது என்பது ஒருநாள் திருநகர் மக்க ளுக்குப் புரிந்தது.

ராஜப்பா சினிமா நடிகர் ஆகிப் புகழ்பெற விரும்பி னார்.

அவருடைய நட்புக்கும், வியப்புக்கும் இலக்கா யிருந்த நாடகக்கலை மன்னர்கள் சினிமா உலகத்தில் புகுந்து, சிறிதாகவோ, பெரிதாகவோ தங்களுக்கு என்று ஒவ்வொரு இடம் பிடித்துக் கொண்டார்கள் என அறிந் தது முதல் ராஜப்பாவின் இந்த ஆசை அதிகரித்து விட்டது.

சினிமாமோகம் அவரையும் பிடித்து ஆட்டியது.

திரைப்படம் தயாரிக்கும் பிரபலமான நிறுவனங் களுக்கெல்லாம் ராஜப்பா கடிதங்கள் எழுதினார்,

வெவ்வேறு போஸ்களில் எடுக்கப்பெற்ற கவர்ச்சிகர மான போட்டோ பிரதிகளையும் இணைத்து அனுப்பி னார். தனக்கு ஒரு சான்ஸ் கொடுத்தால், அவர்கள் தயாரிக்கும் படம் பிரமாத வெற்றி பெறும் என்றும் உறுதி கூறினார்.

ஆயினும், அவருக்கு படத்தில் நடிக்கக் கூடிய சான்ஸ் எதுவும் தேடிவரவில்லை. பல கம்பெனிகள் பதிலே போடவில்லை. அவருக்கு வாய்ப்பு எதுவும் தருவதற்கில்லை என்று சிலர் வருத்தம் தெரிவித்து இருந்தார்கள்.

இதனால் எல்லாம் ராஜப்பா மனம் சோர்ந்து உட்கார்ந்துவிடவில்லை. அவர் வழக்கம் போல் சிங்காரித்துக் கொண்டு வீதிகளைச் சுற்றி வந்தார். கண்ணாடிமுன் நின்று 'ஆக்ஷன் பண்ணி' அகம் மகிழ்ந்தார். 'ஐயாவும் சினிமா ஆக்டராக ஜொலிக்காமலா போகப் போறாரு! எதுக்கும் ஒரு டைம் வரணும்' என்று தனக்குத் தானே 'நம்பிக்கை இன்ஜெக்ஷன்'' கொடுத்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று ராஜப்பா திருநகரை விட்டுக் கிளம்பி விட்டார். சொந்தக் காரில்தான். ''சான்ஸ் நம்மை தேடி வராவிட்டால் நாமே சான்ஸை தேடிப் போக வேண்டி யது தான்!' என்று அவருடைய மனம் குரல் கொடுத்தது தான் காரணம் ஆகும்.

அவருக்குத் தெரிந்த— 'ரொம்பவும் வேண்டிய'— நாடக உலக அண்ணாச்சி ஒருவர் திரைப்படத் தயாரிப்பில் ஈடுபட்டு விட்டார் என்ற சேதி தெரிய வந்தது உடனடிக் காரணமாய் சேர்ந்தது.

மாநகரத்திலும் தனது தனித்துவங்களை விட்டுவிட விரும்பவில்லை ராஜப்பா. அருமையான சூழ்நிலையில் அமைந்திருந்த தனி வீடு ஒன்றை வாடகைக்கு

எடுத்துக் கொண்டார். ஓட்டல் சாப்பாடு ஒத்து வராது என்பதனால், எப்போதும் வீட்டில் சமையல் வேலை செய்து வந்த நளபாக நிபுணர் கொம்பங்குளத்துப் பிள்ளையை (கொம்பங்குளம் என்ற ஊரைச் சேர்ந்த பிள்ளைவாள் அவர்) உடன் அழைத்துச் சென்றார்.

கார் இருந்த போதிலும், அருமையான குதிரையும் ஜோரான வண்டியும் இருந்தால் அதன் மவுசே தனிதான் என்று எண்ணி, குதிரை வண்டியையும் மாநகருக்கு வரவழைத்திருந்தார் அவர்.

மாநகரில் சகவாசம் செய்தவாறே தனது படஉலக முற்றுகையை தீவிரமாக நடத்தி வந்தார் ராஜப்பா. பலரையும் போய் பார்த்தார். முக்கியமானவர்களை 'ஃபிரண்டு புடிச்சு' வீட்டுக்கு அழைத்து விருந்து கொடுத்தார். அவ்வப்போது தனது கோரிக்கையை சம்பந்தப்பட்டவர்களின் காதுகளில் போட்டுக் கொண்டே வந்தார்.

நடிக-படாதிபதியிடமும் அவ்வப்போது தன் ஆசையை அவர் தெரிவித்தார். 'அண்ணாச்சி, உங்க படத்திலேயே நமக்கு ஒரு சான்சு கொடுங்களேன்' என்று நேரடியாகவே கேட்டும் தீர்த்தார்.

அண்ணாச்சி தயங்கி, யோசிப்பது போல் நடித்தார். 'உங்களுக்கு என்ன வேடம் பிரதர் தர்றது? இது ரொம்பவும் சிக்கலான விஷயம்'' என்றார்.

''என்ன வேடம்னாலும் கொடுங்க. எதையும் நான் பிரமாதமாச் செய்வேன்!'' என்று ராஜப்பா உற்சாகமாய் சொன்னார்.

''உங்களுக்கு நடிப்பு அனுபவம் இல்லியே பிரதர். எதுக்கும் முன் அனுபவம் இருக்கணும்?'' என்று உபதேசத்தில் இறங்கினார் அண்ணாச்சி.

'ஹெஹ்ஹெஹ்ஹா!' என்று தனிப் பாணியில் சிரிப்பை உதிர்த்தார் ராஜப்பா. "எனக்கு தொழில் அனுபவம் இல்லாமல் இருக்கலாம் அண்ணாச்சி. ஆனாலும் தினசரி வாழ்க்கையிலே நடிச்சு நடிச்சு... கண்ணாடி முன்னாலே நின்று மணிக்கணக்கிலே டிரெயினிங் எடுத்திருக்கேன். ரோடுகளிலே போகையிலே... அதெல்லாம் சொல்லுவானேன்? சான்சு கொடுத்துப் பாருங்க, அப்புறம் நீங்களே பிரமிச்சுப் போவீங்க நம்ம திறமைப் பார்த்து!' என்றார்.

அண்ணாச்சி சொன்னார்: "வேணாம்னா முதல் படத்திலே இப்படிச் செய்யலாம். கூட்டமா வர்ற காட்சிகளிலே கும்பலோடு கும்பலா நீங்களும் தலையைக் காட்டுங்க. ஒரு காட்சியிலே ஹீரோவை வரவேற்கிற ஊர் பிரமுகர்களிலே ஒருத்தரா வாங்க. கோர்ட்டு சீனிலே சும்மா வந்து உட்கார்ந்திட்டுப் போகிற ஒரு நபராக— வக்கீலாகவோ யாராகவோ... இப்படி சில்லறை வேஷங்களிலே ஏதாவது தரலாம். நீங்க இவ்வளவு தூரம் கேட்கறீங்களேன்னுதான் இது கூட..."

சப்பென்று ஆகிவிட்டது ராஜப்பாவுக்கு. இப்படித்தான் 'சினிமா சான்ஸ்' கிடைக்கும் என்று அவர் கனவில் கூட எண்ணியதில்லை. சினிமாவில் நடிப்பது என்றால் ஒரு ஹீரோவாக— அட, அது கூட வேண்டாமய்யா! அதெல்லாம் ஸ்டார் நடிகர்களுக்கே நிரந்தரக் குத்தகை என்றே இருந்துவிட்டுப் போகட்டும்! அதுக்கு அடுத்தபடி முக்கியமான ரோலில்— படத்தில் பெரும் பகுதி வந்து ஜமாய்க்கிறபடி— பலவிதமான திறமைகளையும் காட்டுகிற மாதிரியிலே— கதாநாயகனுக்கு நெருக்கடி சமயங்களில் துணைபுரிகிறவனாக, குதிரையில் ஜம்மென்று போய் வருவது, குத்துச் சண்டை, கத்தி வீச்சு இதுகளில் ஈடுபடுவது இப்படி, எத்தனையோ வேலைத்தனங்கள் இல்லையா, அதை எல்லாம் செய்து

பெயர் பெறும் சூரப்புலியாகத் திரையில் காட்சிதர வேண்டும். இதுதான் அவருடைய ஐடியா!

அந்த ஐடியா மூஞ்சியில் ஒரு 'கும்மாங் குத்து' விட்டு நிலை குலைய செய்வதாக இருந்தது அண்ணாச்சியின் பேச்சு. அவருடைய மூஞ்சியிலேயே ஒரு அறை விட்டது போல தோன்றியது ராஜப்பாவுக்கு. அண்ணாச்சி— ரொம்ப வேண்டியவர்! அவரா இப்படிப் பேசுவது?

சினிமாவில் நடிப்பது என்றால், பகட்டாக, மிடுக்காக, கம்பீரமாக, முதன்மையாக, அழகாக, அலங்காரமாக—எப்படி எப்படி எல்லாம் தோன்ற முடியும் என்று ராஜப்பா எண்ணியிருந்தார்? ஜம்மென்று டிரஸ் பண்ணிக் கொண்டு, தெருக்களில் பவனி வந்தபோது— குதிரை மீதமர்ந்து டாக்-டாக்-டாக் எனக் குளம்பொலி சிதற அவர் ஜோராகத் திரிந்த போது -என்னென்ன ஆசைக் கோட்டைகள் கட்டி இறுமாந்திருந்தார்! அந்தக் கனவுகளை, நினைப்புகளை, ஆசைகளை எல்லாம் பொக்கெனப் போகும்படி பண்ணிவிட்டாரே பாவி மனுஷன்...!

பெருமூச்செறிந்தார் ராஜப்பா. தனது எண்ணத்தைச் சொன்னார்.

அண்ணாச்சி முறுவல் பூத்தார். ''அப்படி எல்லாம் நடக்கணுமின்னா நீங்களே சொந்தமாப் படம் புரட்யூஸ் பண்ண வேண்டியதுதான்!'' என்றார்.

''அப்படியே புடிச்சாலும் டிஸ்ட்டிரிபியூட்டர்கள் கிடைக்கணுமே? சார்வாளே டிஸ்ட்ரிபியூட் பண்ண வேண்டியதுதானே என்பீர்களோ அண்ணாச்சி? அப்படியே டிஸ்ட்ரிபியூஸ் பண்ணினாலும் அங்கங்கே தியேட்டர்கள் கிடைக்கணுமே? ஊருக்கு ஊர் தியேட்டர்களுக்குப் பணம் கொடுத்து சாரே பிக்சரை ரன்

பண்ணச் செய்ய வேண்டியதுதான்னு ஐடியா கொடுப்பீங்களோ அண்ணாச்சி? என்று 'புரட்டக்ஷன் மானேஜர்' ஆகப் பணிபுரிந்த 'தம்பிச்சி' பேசினார்.

ராஜப்பாவுக்கு ஆத்திரம் பொங்கியது, ஆனாலும், அடக்கிக் கொண்டார்.

சீக்கிரமே அங்கிருந்து நகர்ந்தார்.

"அப்படியே தியேட்டர்களிலே படத்தை காட்டினாலும், இவரே புடிச்ச படத்தைப் பார்க்க ஜனங்க வரணுமே அண்ணாச்சி? ஆளுகளுக்கும் பணம் கொடுத்துப் பார்க்க வைப்பாருன்னு சொல்லுவீகளோன்னு கேட்க நெனச்சேன். ஒரே அடியா மனுசனை டவுன் பண்ணப்படாதுன்னு இருந்துட்டேன் என்று 'தம்பிச்சி' சொன்னது ராஜப்பா காதில் விழத்தான் செய்தது.

அதைத் தொடர்ந்து அண்ணாச்சி வாய்விட்டுச் சிரித்த பலத்த ரசனைச் சிரிப்பு அவருக்கு வயிற்றெரிச்சல் உண்டாக்கியது.

மோசக்காரப் பயலுக. ஏமாத்துக்காரனுக... தங்களைத் தாங்களே பெரிசா, பிரமாதமா நினைச்சுக்கிட்டுத் திரிகிறவங்க... மத்தவங்களை கேவலமா நினைக்கிற வேசக்காரங்க...

இப்படி அவர் மனம் குமுறிக் குமைந்தது.

நமக்குத் தெரிந்தவர், ரொம்ப வேண்டியவர், நெருங்கிய நண்பர் என்கிற நிலையிலே இருக்கிற அண்ணாச்சியே இப்படி அபிப்பிராயப்பட்டால், மற்றவங்க என்னதான் நினைக்கமாட்டாங்க, பேசமாட்டாங்க?

இவ்வாறு கேட்டது அவர் அறிவு.

''சரி. போகுது போ. நடிப்பும் வேண்டாம். பட சான்சும் வேண்டாம்'' என்ற முடிவுக்கு வந்தார் ராஜப்பா.

என்றாலும், அவர் மிடுக்கான குதிரை பூட்டிய வண்டியில் அடிக்கடி ஸ்டுடியோ பக்கம் போய்க் கொண்டுதான் இருந்தார். பட உலக நண்பர்களை அழைத்து 'பார்ட்டிகள்' கொடுத்துக் கொண்டு தானிருந்தார். திடீரென்று தன் போக்குகளை மாற்றிக் கொள்ளக்கூடாது என்ற நினைப்பு அவருக்கு.

ராஜப்பா 'அர்ச்சுன ரசனை' உடையவர் தானா 'கிருஷ்ணலீலைகள்' பண்ணி மகிழும் மனத்தவர்தானா என்பது பற்றி திருநகர்வாசிகள் கருத்து பரிமாறிய தில்லை. அவருடைய இதர குணாதிசயங்கள் அவர்களை பிரமிக்க வைத்திருந்ததனால், அவரது மன்மதத் தனமான நாட்டங்களில் மக்கள் கவனம் செலுத்த வில்லை போலும்.

அந்த விஷயத்திலும் அவர் ரசிகராகத்தான்— அந்தக் கலையின் சுவைஞராகவே— இருந்தார் என்பது அவருடைய நெருங்கிய நண்பர்களுக்குத் தெரியும்.

மாநகரத்தில் ராஜப்பா பழகிய வட்டாரங்களில் அவருடைய அந்த ரசஞானத்துக்கு நல்ல விருந்து கிடைப்பதற்கு நிறையவே வாய்ப்புகள் இருந்தன.

அவருடைய குதிரை வண்டி காம்பீர்யத்தையும், அலங்கார நடவடிக்கைகளையும், பார்த்து, வியந்து, ரசித்து, மகிழ்ந்து போனவர்களில் குமாரி கல்யாணியும் ஒருத்தி. அவரது கவனிப்புக்கும் அபிமானத்துக்கும் வள்ளன்மைக்கும் இலக்கானவளும் கூட.

அவளும் சினிமா மோகத்தினால் ஈர்க்கப்பட்டு, சில ஸ்டார் நடிகையர் போல் தானும் உயர்ந்து, பணமும்

புகழும் படாடோப வாழ்வும் பெற்றுவிட முடியும் என நம்பி, அந்த உலகத்திலுள் பிரவேசித்தவள்தான். ஏமாற்றம் அவளை ஆட்கொண்டது. பிறகு பிழைப்புக்காக அதில் ஒட்டிக் கொண்டிருந்தாள். கும்பலில் வருவாள்; தோழியாய் குதிப்பாள்; நாட்டியக் குழுவில் ஆட்டம் காட்டுவாள். எப்படியோ ஏதாவது சான்ஸ் கிடைத்துக் கொண்டுதானிருந்தது அவளுக்கு.

ராஜப்பா அவள் ஒளியில் இறங்கிய விட்டிலானார். அவர் வீட்டுக்கு கல்யாணி அடிக்கடி வந்து போனாள். பரஸ்பரம் ஒருவர் மனசை ஒருவர் நன்கு புரிந்து கொண்டார்கள்.

“நீ என்னோடு இருந்து விடேன், கல்யாணி. இந்தப் பிழைப்பு உனக்கு என்னத்துக்கு? நாம திருநகருக்குப் போய் விடலாம்’ என்று ராஜப்பா ஒரு நாள் அவளிடம் கூறினார்.

தான் ஒருநாளும் ஸ்டார் ஆகப்போவதில்லை—இரண்டாவது ஹீரோயின் தரத்துக்குக் கூட உயரப் போவதில்லை—என்பதை உறுதியாக உணர்ந்திருந்த ‘எக்ஸ்ட்ரா நடிகை’ கல்யாணி அவரது கோரிக்கைக்கு இணங்கினாள்.

வாழ்க்கையில் ஒரு பற்றுதலும், பாசமும், பிடிப்பும், நிரந்தரமான குடியிருப்பும், குடித்தனப் பாங்கான ஒரு அந்தஸ்தும் தனக்கு சித்திக்குமே என்ற எண்ணம் அவளுக்கு.

திருநகரைப் பிரிந்து மாநகருக்கு வந்து சேர்ந்த ஏழாவது மாதத்தில் தனது லட்சிய நோக்கில் தோல்வி உற்றவராய் தன் ஊருக்கே திரும்பினார் ராஜப்பா. குதிரையையும் வண்டியையும் விற்று விட்டார். காரில் தான் பயணம் செய்தார். கூடவே கல்யாணியும் இருந்தாள்,

அவள் அழகி. இனியவள். சொக்கும் சுகவிருந்து. இன்ப ஊற்று. அன்புத் துணைவி. இதை ஒவ்வொரு நாளும் நன்றாக உணர்ந்தார் அவர்.

"என்னய்யா, உம்ம நோக்கிலே நீர் வெற்றி அடையலே போலிருக்கே?" என்று அவருடைய திருநகர் நண்பர்கள் ராஜப்பாவிடம் 'துக்கம் விசாரித்தார்கள்'.

அவரோ கவலைத் துளிகூட இல்லாதவராய் உள்ளாசமாய் சிரித்தார்.

"ஒரு வகையில் நஷ்டம், இன்னொரு விதத்தில் லாபம் என்று சொல்லலாம். பிசினஸில் பணம் நட்டமானால், அறிவுக் கொள்முதல் லாபம் ஆகும். எனது கலை ஈடுபாட்டில் என்னுடைய நடிப்பு ஆசை தோல்வியில் முடிந்தது. அது சரி, ஆனால் அந்த முயற்சி எனக்கு வேறொரு வகையில் வெற்றியாக முடிந்துள்ளது. ஈடு இணையில்லாத அருமைக் கல்யாணி எனக்கு இனிய தோழியாய், துணையாய் கிடைத்திருக்கிறாளே! அது பெரிய லாபமில்லையா? என்று மிகவும் மகிழ்ந்து போனார் அவர்.

தனிப்பட்ட முறையில் ராஜப்பாவுக்கு இன்னொரு சந்தோஷமும்கூட. குமாரி கல்யாணி முகச் சாயலில், இனிய சிரிப்பில், கன்னம் குழிதலில் அவருக்கு மிகுதியும் பிடித்திருந்த ஸ்டார் நடிகை ஒருத்தியை ஒத்திருந்தாள்.

☆ 'சௌராஷ்டிர மணி' தீபாவளி மலர்-1987

# வேலைக்காரி

"நல்ல ஆளா ஒருத்தி இருந்தால் சொல்லுங்க அண்ணாச்சி. சமையலுக்கும் வீட்டு வேலைக்கும் ஒரு ஆளு வேணும்'' என்றார் சிவராமன், எதிரே வந்த சூரியன் பிள்ளையிடம்.

"ஏன், பஞ்சவர்ணத்தம்மா என்ன ஆனாள்?' என்று கேட்டார் பிள்ளை.

"அவள் தன் சுயவர்ணத்தை காட்டிப் போட்டாள்!'' என்று சொல்லி, சிவராமன் பொருள் பொதிந்த சிரிப்பை உதிர்த்தார்.

"என்ன விஷயமய்யா? இப்ப அவ உங்க வீட்டிலே இல்லை?'' அறிந்து கொள்ள வேண்டும் என்ற அவா சூரியன் பிள்ளையைத் தூண்டியது.

ஆனால், பசி பசி என்று படுத்திய குழந்தைகளுக்காக இட்டிலி வாங்கி வர வேகமாகக் கிளம்பியிருந்த சிவராமனுக்கு நின்று பேச நேரமில்லை. "ராத்திரி வரை இருந்தாள். அப்புறம் ஆள் அவுட்! சொல்லாமலே கம்பி நீட்டி விட்டாள். அது ரொம்ப ரசமான விஷயம். அப்புறம் சொல்றேனே'' என்று, பிள்ளையின் ஆவலைக் கிளறி விட்டு விட்டு அவசரமாய் நடந்தார்.

—நம்ம சிவராமன் சார் வீட்டுக்கு வந்து போகிற வேலைக்காரி ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு டைப்தான்! ஒருத்தியாவது ரொம்ப நாள் நிலைத்திருந்ததில்லை. இந்த பஞ்சவர்ணத்தம்மாள் நீடிச்சு வேலை பார்ப் பாள்னு தோணிச்சு. அவளும் போயிட்டாளா? ஊம்ம்...

சூரியன் பிள்ளைதான் பஞ்சவர்ணத்தம்மாளை சிவராமன் வீட்டில் வேலைக்குச் சேர்த்து விட்டவர். "வாழ்க்கையில் ரொம்பவும் கஷ்டப் பட்டவள். வசதி யான இடம் கிடைத்தால் பிழைப்புக்கு வழி பண்ணி விடுங்க" என்று, அவருக்கு வேண்டியவரும் அந்த அம்மாளுக்குச் சொந்தக்காரருமான ஒருவர், அடிக்கடி தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தார். அந்தச் சந்தர்ப்பத்தில் சிவராமனும் "வீட்டு வேலைக்கு ஒரு ஆள் கிடைத்தால் சொல்லுங்களேன்" என்று பிள்ளை யிடம் கேட்டுக் கொண்டார்.

சிவராமன் சாரையும் அவர் குடும்பத்தையும் நன்கு அறிந்தவர் பிள்ளை. மரியாதைக்காக அவரை இவர் 'சார் போட்டுப்' பேசுவதும் குறிப்பிடுவதும் உண்டே தவிர, சிவராமன் 'ஸார்' (உபாத்தியாயர்) வேலை எதுவும் பார்க்கவில்லை. ஏதோ ஒரு ஆபீசில் நல்ல உத்தியோகத்தில் இருந்தார். குழந்தைகள் சின்னஞ் சிறுசுகள். வீட்டு அம்மாளுக்கு வேலைக்காரி இல்லாமல் தீராது. இயல்பாகவே 'வீக்'. அடிக்கடி ஏதேனும் வியாதி வந்து உறவு கொண்டாடிக் கொண்டே இருக்கும். அதனாலே, சமையல் வேலை, இதர வீட்டு வேலை களை எல்லாம் செய்வதற்கு ஒருத்தி அத்தியாவசியத் தேவை என்ற நிலைமை எப்போதும் உண்டு.

இந்த வேலைக்காரி பிரச்னை சிவராமனுக்கு என்றும் 'ஓயாத தொல்லை' யாகவே இருந்து வந்தது. "அப்பாடா, வேலைக்காரி ஒருத்தி கிடைத்து விட்டாள். இனிமேல் கவலை இல்லை!' என்று அவர் நினைப்பார்.

அப்படி நினைத்த நாலைந்து நாட்களுக்குள்ளேயோ, ஒரு வாரத்திலேயோ, மீண்டும் "ஆள் தேடும் படலம்" ஆரம்பிக்க வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டு விடும். சில சமயம் ஒரு மாதம் வரை நீடித்திருக்கக் கூடும். கவலை இல்லாத காலம், திடீரென்று ஒரு நாள் வேலைக்காரிக்கு "சீட்டுக் கிழிக்க வேண்டிய நெருக்கடி நிலை தலை தூக்கியிருக்கும்.

சூரியன் பிள்ளை பஞ்சவர்ணத்தம்மாளை அழைத்து வந்து அந்த வீட்டில் விடுவதற்கு முந்தி, பாக்கியம் என்றொருத்தி அங்கே வேலை பார்த்துக் கொண்டிருந் தாள். அவள் ஒருத்திதான் இரண்டு மாத காலம் வேலை செய்தவள்.

—இந்தப் பஞ்சவர்ணம் வேலையிலே சேர்ந்து இரண்டு மாசம் ஆகியிருக்குமா... ஊம், இருக்காதுன்னு தான் தோணுது. ஆனா ஒரு மாசத்துக்கு மேலே ஆயிட்டுதுன்னு நினைக்கிறேன்.

பஞ்சவர்ணத்தம்மாள் இந்த வீட்டில் ஒட்டிக் கொள்வாள் என்றுதான் சூரியன் பிள்ளை நினைத் திருந்தார். சாப்பாட்டுக்கே இல்லாது கிரமப்பட்டுக் கொண்டிருந்த பஞ்சவர்ணத்தம்மாள் இருக்கிற வேலை களைச் செய்தவாறு சௌகரியமாக இருக்கலாம். வேலைகளும் அதிகமாகவோ கடுமையாகவோ இரா. மாதக் கடைசியில் சம்பளம் என்று முப்பது ரூபாய் கிடைக்கும். பஞ்ச நிலையிலிருந்த பஞ்சவர்ணத்தம்மா ளுக்கு இது சுகவாசமாக அல்லவா தோன்றும் என்று அவர் எண்ணினார்.

ஆனால் அவள் என்னவோ தன் சுயவர்ணத்தைக் காட்டி விட்டாளாமே?

—அந்த வீட்டின் ராசியோ, அல்லது வந்துசேரும் வேலைக்காரிகளின் ராசிதானோ, ஒருத்தி கூட நிலைத்

திருப்பதில்லையே! வீட்டு அம்மாளுக்கு வேலைக்காரியைப் பிடிக்காமல் போய்விடும். இல்லாவிட்டால், வேலைக்காரிக்கு அந்த இடம் ஒத்து வராமல் போய் விடும்! எப்படியானாலும், சிவராமன் சாருக்குத்தான் வேறு ஆள் தேட வேண்டிய பொறுப்பு ஏற்படுகிறது. இது பெரிய தலைவலிதான்.

ஒவ்வொரு வேலைக்காரியைப் பற்றியும் சிவராமன் சூரியன் பிள்ளையிடம் சொல்லத் தவறியதில்லை. தனது மனக்குறையை யாரிடமாவது சொல்லித் தீர்த்தால் ஏதோ ஆறுதல் ஏற்படுமே! 'சும்மா தெரிந்தவர்' என்ற நிலையிலிருந்து 'சிநேகிதர்' என்ற தகுதிக்கு உயர்ந்திருந்த சூரியன் பிள்ளையிடம் சொல்லாமல் அவர் வேறு யாரிடம் கூறுவார்?

ஆகவே, எல்லா வேலைக்காரிகளைப் பற்றியும் அவருக்குத் தெரிந்துதானிருந்தது.

இரண்டு மாத காலம் வேலை பார்த்து 'ஒரு ரெக்கார்டு' ஏற்படுத்தி விட்ட பாக்கியம் நன்றாகத்தான் நடந்து வந்தாள். அவ்வீட்டிலேயே அதிக நாள் நீடித்து விட்ட தெம்பிலோ என்னவோ, வரவர அவள் அதிக உரிமைகள் எடுத்துக் கொள்ளலானாள். தான் இருந்த இடத்தில் உட்கார்ந்தபடியே, குழந்தைகளை 'அதை எடு; இதைச் செய். தண்ணி கொண்டு வா. உருளைக் கிழங்குத் தோலை உரி' என்ற தன்மையில் சில்லறை அலுவல்களைக் கவனிக்கும்படி ஏவலானாள். குழந்தைகள் செய்ய மறுத்தால், கூப்பாடு போட்டுக் கண்டித்தாள். வசைமாரி பொழிந்தாள். குளிப்பதற்கு, வீட்டு அம்மா தனக்கெனத் தனியாக வைத்திருந்த சோப்பை எடுத்து உபயோகிக்கத் துணிந்தாள். பிறகு, கொடியில் கிடந்த நல்ல சேலையை, அம்மாளிடம் கேட்காமல் தானாகவே எடுத்துக் கட்டிக் கொண்டாள். அம்மா கண்டிக்கவும், அதை அவிழ்த்து அப்படியே போட்டு விட்டாள். அலசிப் பிழிந்து உலர்த்தவில்லை என்று

அம்மாளுக்குக் கோபம். அவள் சத்தம் போட்டாள். அந்த ஆத்திரத்தை பாக்கியம் குழந்தைகள்மீது திருப்பினாள். அன்று சமையலை சுவையில்லாதவாறு கெடுத்து வைத்தாள். அடிக்கடி முணு முணுத்தாள்.

“இனிமேல் நீ சரிப்பட்டு வரமாட்டே!” என்று அம்மா, கணக்குப் பார்த்து ரூபாயைக் கொடுத்து, அவளை அனுப்பி விட்டாள்.

பாக்கியத்துக்கும் முன்னாடி ஒருத்தி வேலை பார்த்தாள். வயது சற்று அதிகமானவள். ‘பெரியம்மா’ என்றே எல்லோரும் அவளை அழைத்தனர். அவள் நன்றாக வேலை செய்வாள் என்றுதான் தோன்றியது. ஆனால், வேலை செய்கிற நேரங்களை விட அதிகமான ஓய்வு வேளைகளை அந்தப் பெரியம்மா விரும்பினாள் என்பது மூன்று நான்கு நாட்களிலேயே புரிந்து விட்டது. காலையில் நேரம் கழித்துத்தான் எழுந்திருப்பாள். மத்தியானச் சாப்பாட்டுக்குப் பிறகு, உண்ட களைப்பால் கண்ணயர்கிறவளை, பெரியம்மா காப்பி போடலியா?” “நேரமாச்சு பெரியம்மா!” என்று தார்க்குச்சி போட்டு”த் தான் எழுப்ப வேண்டும். மேலும், ஒவ்வொரு வேலைக்கும் அதைச் செய், இதைச் செய், என்று தூண்டிக் கொண்டே இருக்க வேண்டும்.

“நான் எப்படி இருக்க வேண்டியவ! என் மகன் மட்டும் சரியாக இருந்தால், நான் இப்படி புழுக்கை வேலை செய்துக்கிட்டு சங்கடப்படணுமா? அவன் ஊரிலே இல்லாத விதமா அதிசயப் பெண்டாட்டி வந்து சேர்ந்து விட்டாள்னு நெனச்சு, அவளை தோள் மேலே தூக்கி வச்சுக்கிட்டுக் கூத்தாடுவானே! அப்புறம் அந்தத் தேவடியா என்னை மதிப்பாளா? எனக்கு அங்கே இருப்புக் கொள்ளலே. எங்காவது வேலை செய்து காலம் கழிக்கலாமன்னு கிளம்பிட்டேன்” என்று ஒரு நாள் அவள் தன் வரலாற்றைப் புலம்பினாள்.

பெரியம்மாளுக்கு "உழைக்கும் உற்சாகம் குறைந்து கொண்டே வந்தது. தலைவலி, மேல் வலி, நெஞ்சு வலி என்று என்னென்னவோ சொன்னாள். வந்த ஏழாவது நாளே, நான் "மகனைப் பார்த்துப் பேசிவிட்டு வாறேன்" என்று பத்து ரூபாய் வாங்கிக் கொண்டு போனாள். போனவள் அப்புறம் வரவேயில்லை.

அவள் இருந்த இடத்துக்கு பாக்கியம் வந்து சேர்ந் தாள். பெரியம்மாதான் விலாசம் சொல்லி அனுப்பி வைத்திருந்தாள். அந்த மட்டுக்கு அவள் பரவாயில்லை!

ஒரு சமயம் அகிலாண்டம் என்றொருத்தி சிவராமன் சார் வீட்டில் வேலை பார்த்தாள். வாயாடி. யாராவது ஒரு பேச்சு சொன்னால், அவள் பதிலுக்கு ஒன்பது பேசு வாள். வேலைகளைக் குறைவின்றிச் செய்தாள். ஆனால், வந்த ஐந்தாம் நாளே அவளுக்கு அலுத்து விட்டது. 'இதென்ன வீடு! அக்கம் பக்கத்திலே வீடு களே இல்லாமல்! பேச்சுத் துணைக்கு இங்கே யாருமே இல்லியே. வேலை செய்து முடிச்சப்புறம் கொட்டு கொட்டுனு முழிச்சுக்கிட்டிருக்க வேண்டியிருக்கு. இல்லைன்னு சொன்னா, சுருண்டு முடங்கிப் படுத்துக் கிடக்கணும். ஒருத்தி எவ்வளவு நேரம்தான் தூங்குவா? பேசக் கொள்ள அண்டை அசலிலே ஆளுக இருந்தால் அல்லவா கெதியா இருக்கும்? இப்ப அட்டுப் புடிச்ச மாதிரி இருக்கும். இப்படி ஒரு மாசம் இருந்தால் எனக் குப் பைத்தியமே புடிச்சிடும்! என்று சொல்லி விட்டுப் போய் சேர்ந்தாள்.

சிவகாமி என்று ஒரு வேலைக்காரி இருந்தாள். சரியான சாப்பாட்டுராமி. முதலில் தனக்கு திருப்தியாய் பார்த்துக் கொள்ளுவாள். அப்புறம்தான் குழந்தை களுக்கும், வீட்டு ஐயாவுக்கும் அம்மாவுக்கும். காப்பி தனக்கென்று 'ஸ்பெஷலா, ஸ்ட்ராங்கா தயார் பண்ணிக் கொள்வாள். அதுவும் அடிக்கடி வேண்டும். தோசை

சாப்பிடும் போது ஒவ்வொரு தோசைக்கும் நிறையவே எண்ணெய் ஊற்றிக் கொள்வாள். நெய்யும் எடுத்துக் கொள்வாள். ஹார்லிக்ஸ், போர்ன்விட்டா போன்ற வற்றை சும்மாவே கரண்டியால் அள்ளி வாயில் போட்டுச் சுவைத்து மகிழ்வாள். நெய்யையும் சீனியை யும் கலந்து தின்பதில் அவளுக்கு விசேஷப் பிரியம் இருந்தது.

அவள் வந்து சேர்ந்து பத்து நாட்கள் கூட ஆக வில்லை. வழக்கம் இல்லாத வழக்கமாக, அவ்வீட்டில் சாமான்கள் ஏகததாறாகக் காலியாகி விட்டன. நெய்யும் எண்ணெ"யும், சீனியும் பிறவும் அதிகம் வாங்க நேரிட்டது. இவளை வைத்துக் கொண்டு வேலை வாங்கினால், நம்ம வருமானத்துக்குள்ளே குடும்பம் நடத்த முடியாது; கடனுக்கு மேல் கடன்தான் வாங்க வேண்டியதாகும் என்று சிவராமன் உணர்ந்தார். சிவகாமி வெளியேற நேர்ந்தது.

சிவகாமிக்கு நேர்முரணான ஒருத்தி ஒரு சமயம் அவ்வீட்டில் வேலை பார்த்தாள். பேரு ராசம்மாளோ என்னவோ. அவள் தன் வயிற்றுக்குச் சரியாகச் சாப்பிட மாட்டாள். தனக்கு உரியதை எடுத்து மூடிவைத்து விடுவாள். அப்படியே மறந்தாலும் மறந்து போவாள். 'ராசம், சாப்பிட்டையா?' 'சாப்பிடலியா ராசம்மா?' 'நேர மாச்சு, சாப்பிடு. வேண்டியதைச் சாப்பிடு!' இப்படி அவளை அடிக்கடி 'தாங்கி' உபசரித்தாலும், அவளுக்கா மனம் இருந்தால்தான் சாப்பிடுவாள். வெற்றிலை புகையிலை மட்டும் அடிக்கொரு தடவை வாயில் திணிக் கப்படும். 'அதனால்தான் பசி மந்திச்சுப் போகுது! சாப்பாடு வேண்டிருக்கலே' என்று சிவராமன் குறிப் பிடுவார்.

அவள் சுத்தமாகவும் இருக்கமாட்டாள். மூக்கைச் சிந்தி, சுவர்மீது விரலைத் துடைப்பாள். கால் கைகளை

நன்றாகக் கழுவமாட்டாள். 'தினசரி குளிக்க வேண்டி யிருக்குதே' என்று ரொம்பவும் சங்கடப்படுவாள்.

அவளுடைய 'அசுத்த மோகம்' வீட்டம்மாளுக்குப் பிடிக்கவில்லை. 'சீக்கிரமே போ அம்மா!' என்று வழி அனுப்பி வைத்தாள்.

ராசம்மாளுக்குப் பிறகு வந்த சுந்தரம் சுத்த மோகியும் 'சிங்காரப் பிரியையுமாக இருந்த காரணத்தினால் வெளி யேற்றப்பட்டாள்! அவளுக்கு முப்பது முப்பத்தைந்து வயது இருக்கும். ஒல்லியாய், கரிக்கட் டயாய், கன்னம் ஒட்டிப் போய்த்தான் இருந்தாள். அவள் மனசில் 'நாம ரொம்ப அழகு' என்ற எண்ணம் இருந்திருக்கும். அடிக்கடி கண்ணாடி முன் நின்று அழகு பார்த்துக் கொள்வது அவளது பொழுது போக்குகளில் ஒன்று அதே மாதிரி தினசரி மூன்று நான்கு தடவைகள் முகம் கழுவி, பவுடரை தாராளமாகப் பூசி, பொட்டிட்டு, தலை யைச் சீவிக் கொள்வதிலும் சிரத்தை காட்டுவாள். காலையில் அடுப்புச் சோலி முடிந்ததும், இப்படிச் சிங்காரித்துக் கொண்டு மார்க்கெட்டுக்குப் போவாள். மத்தியானச் சமையல் ஆனதும், முகம் கழுவிப் புவுடர் தடவிக் கொள்வாள். அதே மாதிரி சாயங்காலமும் காலையிலும் மாலையிலும் குளிப்பாள். வாசனை சோப்பு இல்லாமல் குளிக்க மாட்டாள்.

சிவராமனின் புத்தக அலமாரியை, மேஜையை எல்லாம் கண்ணோட்டம் விட்டாள் சுந்தரம். "என்ன புத்தகம் இதெல்லாம்! மர்மக்கதை, துப்பறியும் நாவல், அது மாதிரி எதுவுமே இல்லையே? சினிமாப் பத்திரிகை ஒன்றுகூட வாங்குவதில்லையா? அழகு அழகாப் படங்கள் போட்ட பத்திரிகைகள் எத்தனையோ வருதே - நீங்க எதுவுமே வாங்குறதில்லையா?" என்று விசாரித்தாள்.

'இந்த மேனாமினுக்கி நம்ம வீட்டுக்கு வேண்டாம்" என்று சிவராமனும் அவர் மனைவியும் ஏகமனதாகத்

தீர்மானித்து, அத் தீர்மானத்தை உடனடியாகச் செயலுக்குக் கொண்டு வந்தார்கள்.

பெரியவர்கள், தெரியாதவர்கள்தான் இப்படி ஏறுமாறாக வந்து வாய்க்கிறார்கள்! நம் ஊரிலிருந்து, சொந்தக்காரங்க வீட்டிலிருந்து ஏழைச் சிறு பெண் ஒருத்தியை அழைத்து வந்தால், திருப்திகரமாக நடந்து கொள்ளக்கூடும் என்று சிவராமன் எண்ணினார். அவ்வாறே, ஒரு பெண்ணைக் கூட்டி வந்தார். பதின்மூன்று வயது இருக்கும். அவளுக்கு சகல வீட்டு வேலைகளையும் செய்து அனுபவப்பட்டவள்தான். குழந்தைகளிடம் பிரியமாக இருந்தாள். குழந்தைகளும் ‘அக்கா, அக்கா’ என்று அவளிடம் ஆசையோடு பழகின.

அவள் அவ்வீட்டுப் பெண் மாதிரியே தானும் நடத்தப்படுவாள் என்று எதிர்பார்த்ததாகத் தோன்றியது. குழந்தைகளுக்குப் புதுசாகச் சட்டைகள் தைக்கும் போது, தனக்கும் பாவாடை, தாவணி சட்டைகள் வாங்க வேண்டும் என்று ஆசைப்பட்டாள். எனக்கு ஒண்ணும் இல்லையா மாமா என்று கேட்கவும் செய்தாள். அடிக்கடி சினிமாவுக்குப் போக வேண்டும் என்று கோரிக்கை விடுத்தாள். குழந்தைகளுக்காக வாங்கப்பட்டுள்ள பவுடர், கண் மை, வாசனைச் சாந்து, ஹேராயில், ரிப்பன் முதலியவற்றை அவள் தாராளமாகப் எடுத்து உபயோகித்தாள். வறுமைச் சூழலில் வாழ்ந்தவள் ஆதலால், இங்கு வளங்களைக் கண்டதும் ‘காய்ந்த மாடு கம்பிலே விழுந்தது போல்’ பேராசையோடு அனைத்தையும் அனுபவிக்கத் துடித்தாள். நெய்யை வெறும் வாயில் தின்றாள். சீனியை வாய் நிறைய அள்ளிப் போட்டுக் கொண்டாள். சிறுகுழந்தைகளுக்காக வாங்கி வைத்திருக்கும் தின்பண்டங்களையும், பிஸ்கட் தினுசுகளையும், தெரிந்தும் தெரியாமலும் அமுக்குவதோடு

நிற்பதில்லை. குழந்தைகள் தின்னும்போது, 'ஏய்—ஏய் அக்காளுக்கு இல்லையா?' 'அக்காளுக்குக் கொடேன்' என்று எத்திப் பிடுங்கி மொக்குவதிலும் கருத்தாக இருந்தாள்.

அந்தப் பெண்ணின் போக்குகளும் இயல்புகளும் வீட்டு அம்மாளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. ஆகவே ஒரு நாள் அவள் வந்தது போல் சொந்த ஊருக்கே போய்ச்சேர வேண்டியதாயிற்று.

அவர்களுக்கெல்லாம் பிறகுதான் பஞ்சவர்ணத் தம்மாளுக்கு அவ் வீட்டில் வேலை கிடைத்தது. அவளும் தனது சுயவர்ணத்தைக் காட்டி விட்டாள் என்றால், அப்படி என்னதான் செய்திருப்பாள்?

சூரியன் பிள்ளையின் ஆர்வம் குறுகுறுத்துக் கொண்டிருந்தது. சிவராமன் சாருக்கு எப்போது வசதிப் படும்; எந்த நேரத்தில் எந்த இடத்தில் அவரை சந்தித்தால், சாவகாசமாகப் பேச முடியும் என்பதெல்லாம் அவருக்கு அத்துப்படி! அவ்விதமே அவரைக் கண்டு உரையாடப் பிள்ளை தவறவில்லை.

பூசி மெழுகாமல் சிவராமனும் விஷயத்தை உள்ள படி சொல்லித் தீர்த்தார்.

பஞ்சவர்ணத்தம்மாளுக்கு, அதிகமாய் போனால், முப்பத்தஞ்சு வயசு இருக்கலாம். வாழ்க்கையை அனுப வித்து வாழவேண்டும் என்ற ஆசை அவளுள் கனன்று கொண்டிருந்தது. ஆனால் வாழ்க்கை அவளை வஞ்சித்து விட்டது. கல்யாணமாகியும் அவள் சுகப்பட வில்லை. புருஷன்காரன் என்ன காரணத்தினாலோ அவளை விலக்கி வைத்துவிட்டான். சாப்பாட்டுக்கே திண்டாடுகிற குடும்ப நிலைமை. எப்படி எப்படியோ காலம் தள்ளவேண்டியிருந்தது. கஷ்ட ஜீவனம்தான்.

பெரியப்பா மகனான அண்ணாச்சி ஒருவர் அவள் மீது இரக்கப்பட்டு, தம்மாலான உதவிகள் செய்து வந்தார். அவர்தான் சூரியன் பிள்ளையிடமும் உதவி கோரி, அவளுக்கு வழிகாட்டும்படி கேட்டுக் கொண்டார்.

சிவராமன் வீட்டுக்கு வந்த பிறகு அவளுக்கு மூன்று வேளையும் வயிறாறச் சாப்பாடு கிடைத்தது. சாயங் காலம் காப்பி, சில வேளைகளில் ஏதேனும் சிற்றுண்டி யும் கிடைத்தது. அதனால் அவளுள் ஒரு தெம்பும், உடலில் ஒரு தெளிவும் சேர்ந்தன. வயிற்றுப் பசிக்கு நிச்சயமான தீர்வு கிட்டியவுடன், அவளிடம் உறங்கிக் கிடந்த இதர பசிகள் விழித்துக் கிளர்வுற்றன போலும்.

தனது புறத் தோற்றத்தில் அவ்வளவாக அக்கறை காட்டாதிருந்த பஞ்சவர்ணத்தம்மாள் இப்போது சிரத்தை கொள்ளலானாள் நன்றாகச் சீவி முடித்து, முகத்துக்குப் பவுடர் பூசிக் கொள்வதில் ஆர்வம் காட்டிய தோடு, தன்னை ஆண்கள் பார்க்க வேண்டும் என்ற விருப்பமும் கொண்டாள். அதனால் வேலை இல் லாமலே தெருவில் அங்குமிங்கும் போனாள். வாசல் படியில் நின்று தன்னையே காட்சிப்படுத்தினாள். போகிற வருகிற ஆண்களைப் பார்ப்பதில் ஒரு சந்தோஷம் கண்டாள்.

பார்ப்பதோடு மட்டும் திருப்தி கண்டுவிடாத மனம் ஆண்களோடு பேசிக்களிக்கத் தூண்டியது. சமையல் காரியான அவள் யாரோடு பேச முடியும்? பால்காரன், காய்கறி விற்பவன், ஐஸ் வாலா, ரோட்டோரத்தில், தள்ளு வண்டியில் குளிர்பானங்கள் விற்கிறவன் — இப்படிப் பட்டவர்களிடம் அவளுக்கு ஒரு ஈடுபாடு ஏற்பட்டது. அவர்களிடம் வியாபாரம் பண்ணுவது போல் சிரித்துப் பேசி அவர்களையும் பேச்சுக்கிழுத்தாள். இவர்களில் ஒன்றிரண்டு பேர் எடுப்பான உடல் தோற்றமும்,

உரையாடிக் களிக்கும் மனமும் திறமையும் பெற்றிருந்தார்கள்.

ஒருநாள் இரவு பஞ்சவர்ணத்தம்மாள் சினிமாவுக்குப் போய் விட்டாள் இரவுக் காட்சிக்கு. அவள் திரும்பி வந்ததும், சிவராமன் கோபித்துக் கொண்டார். "இரவு 10 மணிக்காட்சிக்குத்தானா போக வேண்டும்? மாட்னிக்குப் போகிறதுதானே? இல்லாவிட்டால், கேட்டுக் கொண்டு 6-30 மணிக்காட்சிக்குப் போறது!' என்று உபதேசித்தார்.

அது அவளுக்குப் பிடிக்கவில்லை. 'வேலைகளை முடித்து விட்டுத்தானே போகணும்? சாயங்காலக் காப்பி போடணும், ராத்திரிச் சாப்பாடு தயாரிக்கணும். இரவுக் காட்சிதான் சௌகரியம். வேலைக்கு இடைஞ்சலாக இராது' என்றாள்.

பிறகு, வாரம் தோறும் அவள் அவ்வாறே செய்யலானாள். அவள் ஒரு மாறுதலாக சினிமா பார்க்கத்தான் போகிறாள் என்றே சிவராமன் எண்ணினார். அது தவறு என்பது அவருக்கு விரைவிலேயே புரிந்து விட்டது.

"உங்க வீட்டு வேலைக்காரியை தியேட்டரிலே பார்த்தேன் ஸார். கூல்ட்ரிங்க்ஸ் விற்பானே ஒருத்தன் — தள்ளு வண்டியிலே வச்சு — சிவப்பா, கட்டுகுட்டுனு, சிலிர்த்து நிற்கும் கிராப்பும் சிரிச்ச முகமுமா — அவனுக்கும் அவளுக்கும் சிநேகம் போலிருக்கு! அந்த அம்மா தன்னை மறந்து அவன்கூடப் பேசிச் சிரிச்சுக்கிட்டு நிக்கறதை நான் பார்த்தேன்" என்று அவரது ஆபீசைச் சேர்ந்த ஒருவன் ஒரு நாள் அவரிடம் சொன்னான். அவருக்குத் 'திக்'கென்றது.

அன்றே அவர் பஞ்சவர்ணத்தம்மாளிடம் கண்டிப்பாகச் சொல்லி வைத்தார். இனிமேல் அவள் சினிமா

இரவுக் காட்சிக்குப் போகக் கூடாது; அப்படிப் போய் விட்டு வந்தால் கட்டாயமாகக் கதவைத் திறக்கவே மாட்டேன் என்று.

முந்திய நாள் இரவு பஞ்சவர்ணத்தம்மாள் வீட்டில் இல்லை. 'மனசே சரியில்லை, சினிமாவுக்குப் போறேன் என்று சொல்லி விட்டுப் போனாள்' என்று மனைவி தெரிவித்தாள். உடனே அவரும் தியேட்டர் பக்கம் போனார். தியேட்டருக்குப் போக வேண்டிய தேவையே ஏற்படவில்லை பஸ் ஸ்டாப்பில் வந்து நின்ற ஒரு பஸ்ஸில் அவளும் கூல்ட்ரிங்க்ஸ் விற்பவனும் ஏறுவதும், உள்ளே போய் ஒரே ஸீட்டில் இருவரும் உட்காருவதும் அவர் பார்வையில் பட்டது. இரண்டு பேரும் சந்தோஷமாகக் காட்சி அளித்தார்கள். இருவரும் சேர்ந்து பேசி, திட்டமிட்டுத்தான் கிளம்பியிருக்கிறார்கள் என்பது விளங்கிவிட்டது.

"அப்புறம் என்ன! நமக்கு ஒரு வேலைக்காரி வேண்டும். நல்ல ஆளா உங்களுக்குத் தெரிந்த நபர் யாராவது இருந்தால் சொல்லுங்க" என்றார் சிவராமன்.

# பரிபூரண ஆனந்தர்

பெயரும் குண இயல்புகளும் அதிசயமாக ஒத்துப் போகிற அபூர்வப் பிறவிகளில் பரிபூரணானந்தம் என்பவரும் ஒருவராவார்.

வளர்ந்து பெரியவன் ஆனதும் நம்ம பிள்ளை யாண்டான் இப்படி இப்படி நடந்து கொள்வான் என்பதை முன்கூட்டியே 'தீர்க்க தரிசனம்' ஆக உணர்ந்து, பையனுக்கு அந்தப் பெயரை குடும்பத்தின் பெரியவர்கள் இட்டார்களா? அல்லது, நமக்கு இந்தப் பெயர் இருப்பதால் நாம் பூரணமாக எதையும் செய்ய வேண்டும், எதிலும் பரிபூரணம் காண்பதே நமது வாழ்க்கை தர்மமாக இருக்கவேண்டும் என்று பையனே தீர்மானித்து, அப்படி ஒரு கொள்கையைக் கைக் கொண்டு வளர்ந்தானா? இது தீர்மானிக்க முடியாத ஒரு விஷயம்.

எப்படியோ, சின்ன வயசிலிருந்தே, 'செய்வன திருந்தச் செய்' என்பது மட்டுமல்ல; எதையும் முழுமை யாக 'பெர்பெக்ட்' ஆகச் செய்ய வேண்டும் என்பதில் கருத்தாக இருந்தான் அவன்.

பரிபூரணானந்தன் என்று இலக்கணப்படி எழுதுவது சிரமமாக இருக்கிறது என்று அவன் பரிபூரண ஆனந்தன் என்றே எழுதியும் சொல்லியும் வந்தான். அவரவர் பெயரைச் சுருக்கி வைத்துக் கொள்வது ஒரு நாகரிகமாக- ஸ்டைலாக- பாஷன் ஆகக் கருதப்பட்டு வந்த காலத்திலும் சூழ்நிலையிலும் வசித்துக் கொண்

டிருந்த போதிலும், அவன் பி. ஆனந்தன் என்றோ, பி. ஏ. தன் என்றோ தன்னுடைய பெயரைச் சுருக்கிக் கொள்ள ஆசைப்பட்டானில்லை.

ஆனாலும், மற்றவர்கள் அவனை அவரவர் இஷ்டம் போலவும் சவுகரியம் போலவும் பெயர் சொல்லிக் கூப்பிட்டார்கள். 'பரி' என்று அழைத்தார்கள் பலர். 'பூரணம்' என்றார்கள் சிலர். 'ஆனந்த்' என்றும், 'ஆனந்தன்' என்றும், 'ஆனந்தா' என்றும் கூப்பிட்டார்கள் அநேகர். ஒருவன் மட்டும் 'பரிபூரண ஆனந்தன் என்று வாய் நிறைய உச்சரிப்பது வழக்கம். அவனையே தன் அருமை நண்பனாக மதித்தான் ஆனந்தன்.

படிக்கிற காலத்திலேயே, அவன் அனைத்துக் காரியங்களையும் முழுமையாகச் செய்வதில், சுத்தமாக வும் ஒழுங்காகவும். சரியாகவும் செய்து முடிப்பதில் அதிக அக்கறை காட்டினான். இந்தப் பழக்கம் பிற் காலத்திலும் நிலை பெற்று வளர்ந்தது.

'எடுத்த காரியம் எதுவானாலும், அதை பெர்பெக்ட் ஆகச் செய்து முடிக்கணும், இது என் 'பிரின்சிபிள்' என்று அவன் அடிக்கடி சொல்வது வழக்கம். சொல்கிற படி செய்வது அவனுடைய பழக்கம்.

வேலை பார்க்கிற இடத்தில், பலரும் கடியாரத்தைப் பார்த்தபடி இருப்பார்கள். ஐந்து மணி ஆகி விட்டதா என்று அடிக்கடி உற்று நோக்குவார்கள். ஐந்து ஆவ தற்கு ஐந்து நிமிடங்கள் இருக்கிற போதே, செய்த அலுவல்களை அப்படி அப்படியே போட்டு விட்டு, 'அவசரம் ஒண்ணும் இல்லே. நாளைக்குச் செய்யலாம்'' என்று மேசையின் இழுப்பறைக்குள் தள்ளிப் பூட்டி விட்டு, கிளம்புவதற்கு ரெடி ஆகி விடுவார்கள். டாண் என்று ஐந்துக்கெல்லாம் மிடுக்காக வெளியே நடப் பார்கள்.

ஆனால், பரிபூரண ஆனந்தன் அப்படி எல்லாம் நடந்து கொள்ள மாட்டான். அன்றைய அலுவலைப் பூரணமாக முடித்த பின்னரே புறப்படுவான். ஐந்து அல்லது பத்து நிமிடங்கள் தாமதமானாலும் பரவாயில்லே எடுத்த வேலையை பெர்பெக்ட் ஆகச் செய்து முடிக்க வேணும் என்பான்.

மற்றவர்களும் அவ்விதம் செய்யவேண்டும் என்று அவன் எதிர்பார்த்தான். ஆனால் அவர்களில் யாரும் அப்படிச் செய்ய முன்வரவில்லை; அவனை அப்பாவி, 'பைத்தியாரன்' (பைத்தியக்காரன்) என்றும் கருதினார்கள்.

"இப்ப இப்படித்தான் இருப்பாரு. கல்யாணம் ஆகி விட்டால் இவரும் வழிக்கு வந்து விடுவாரு. இவருடைய சுத்தம் ஒழுங்கு- பூரண- பெர்பெக்ட்தனம் எல்லாம் வீட்டுக்கு வந்து சேருகிற அம்மாவிடம் பலிக்குமா என்ன? பெண்கள் பெரும்பாலும் அவரவர் இஷ்டம் போல் மெத்தனமா, சோம்பேறித்தனமா, பெர்பக்ட் தன்மை எல்லாம் பார்க்காமல்தான் காரியங்கள் பண்றாங்க. பரிபூரண ஆனந்தருக்கு ஒரு பரிபூரண ஆனந்தியா வரப்போறா! பார்ப்போம்!" என்று நண்பர்கள் கிண்டல் செய்வதும் சகஜமாகி விட்டது.

அது அவனை யோசிக்க வைத்தது. கவனிக்கச் செய்தது. பெண்களின் போக்குகளை, இயல்புகளை, பேச்சுகளை ஸ்டடி பண்ணும்படி தூண்டியது. இறுதியாக ஒரு முடிவுக்கு வரும்படி பண்ணி விட்டது.

"நமக்கு ஒத்து வரக் கூடிய பெண் கிடைக்கமாட்டாள். நம்மை அவள் வழிக்கு இழுத்து விடக் கூடியவளாகவே பெண் இருப்பாள். நம்முடைய பிரின்ஸிபிள் கொள்கை, சுபாவம் எல்லாம் எவளோ ஒருத்தியினால், ஒதுக்கப்பட்டு, மிதிக்கப்பட்டு, நம்மிடமிருந்து அகற்றப் பட்டு . சேச்சே..., அது சரிப்படாது. ஆகவே நமக்கு

நமது பூரண ஆனந்த வாழ்க்கைதான் முக்கியமே தவிர, வாழ்க்கைத் துணை முக்கியம் இல்லை. துணைவி இல்லாமலே நம்முடைய வாழ்க்கை பெர்பெக்ட் ஆக இயங்கும்.

அவனுடைய சிந்தனை காட்டிய வழி இது. அதன் படியே நடந்தான் அவன். அதற்காக அவன் வருத்தப் பட நேர்ந்ததும் இல்லை.

அதிகாலையில் நாலரை மணிக்கு எழுந்தான். குளிர்ந்த நீரில் குளித்தான். ஒன்றரை அல்லது இரண்டு மைல் தூரம் உலா போனான். ஒரு அம்மாள் பதிவாகச் சில பேருக்கு சமைத்துப் போட்டு வாழ்க்கை நடத்திய தனிச் சாப்பாட்டு விடுதியில் நேரம் தவறாது சாப்பிட்டான். வேலைகளை ஒழுங்காகக் கவனித்தான். ஓய்வு நேரத்தில் பத்திரிக்கைகள், புத்தகங்கள் படித்தான். சில நாட்களில் நண்பர்களோடு சுற்றுலா போய் வந்தான். சினிமா பார்த்தான். சந்தோஷமாகத்தான் இருந்தான்.

காலம் ஓடியது. பரிபூரண ஆனந்தம் பெரியவராகி, வேலையிலிருந்து ஓய்வு பெற்று, நிம்மதியாக வாழ்ந்து கொண்டிருந்தார்.

தனி உணவு விடுதி நடத்திய அம்மாள் இறந்து விட்ட பிறகு, ஆனந்தர் தனிப்பட்ட 'மெஸ்'களில் சாப் பிடும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார். நாளடை வில் மத்தியானம் ஒரு வேளை மட்டுமே சாப்பாடு என்று பழக்கப்படுத்திக் கொண்டார். அவருடைய உணவுப் பழக்கம் வசதியாக அமைந்து விட்டது.

காலையில் காப்பியும் பிஸ்கட்டுகளும். காப்பியை அவரே தயாரித்துக் கொண்டார். மதிய உணவு ஒரு ஓட்டலில் கும்பல் சாப்பிடுவதற்கு முன்னரே போய் சாப்பிட்டு வந்து விடுவார். மாலையில் காப்பி மட்டும்.

இரவில் பால், ரொட்டி, பழங்கள். ஆரோக்யமாக இருந்தார் அவர்.

இருந்தாலும், மரணம் பற்றிய நினைப்பு ஆனந்தரின் உள்ளத்தில் நிலைத்து நின்றது. தனது மரணத்துக்கும் முன்னேற்பாடுகள் செய்து வைக்க வேண்டும் என்று அவர் எண்ணினார்.

தான் இறந்ததற்குப் பிறகு தனது உடல் முழுமையாக, அப்படியே இருக்க வேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். ஆகவே தன் சடலத்தை சமாதியில் பத்திரமாக அடக்கம் செய்ய வேண்டும் என்று நினைத்தார். அதற்கான ஏற்பாடுகளும் செய்தார்.

தன் வீட்டின் பின்புறத் தோட்டத்தில், நல்ல முறையில் சமாதிக் குழி தோண்டி, சிமிண்டினால் பூசி வைத்தார். உயிரோடு இருக்கிற போதே தனக்கான சமாதிக் குழியையும், சுற்றுப்புறக் கட்டுமான வேலைகளையும் சீராகவும் சுத்தமாகவும் அமைத்து, தானே கண்டு மகிழ முடிந்ததில் ஆனந்தருக்கு ஒரு பூரண திருப்தி ஏற்பட்டது.

இதர செலவுகளுக்குத் தேவைப்படக் கூடிய பணத்தையும் ஒரு பாங்கில் போட்டு வைத்தார் அவர். இறுதிச் சடங்குகள் எப்படி எப்படி நடத்தப்பட வேண்டும் என்று திட்டமிட்டு, விளக்கமாகவும் எழுதி வைத்தார். முக்கியமானவர்களிடம் இவைபற்றிச் சொல்லி ஏற்பாடும் செய்தார்.

தன்னுடைய வாழ்க்கையில் முழுமையான திருப்தியோடு நாட்களைக் கழிக்கலானார் ஆனந்தர்.

வாழ்க்கை விளையாட்டுப் புத்தி உடையது. அல்லது வாழ்க்கையை இயக்குகிற சக்தி விளையாட்டுத்தனம் கொண்டது என்று சொல்லலாம். அது

பல பேரோடு குரூரமாக-ஒரு வக்கிரத் தன்மையோடு-விளையாடி விடுகிறது.

பரிபூரண ஆனந்தர் விஷயத்திலும் அப்படித்தான் அது நடந்து கொண்டது.

அறுபத்து நான்காவது பிறந்த நாளன்று ஆனந்தர் மகிழ்ச்சியோடு காலை உலா போய் கொண்டிருந்தார். நடை மேடை மீதுதான் போனார்.

ஆனாலும், வேகமாக வந்த லாரி ஒன்று தடம் தவறி தாறுமாறாக ஓடி, பிளாட்பாரத்தின் மீது ஏறி ஆனந்தரைத் தாக்கியது. அவரைக் கீழே தள்ளி நசுக்கி, ஒரு மரத்தின்மீது மோதிவிட்டு நின்றது.

உரிய முறைப்படி காரியங்கள் எல்லாம் நடைபெற்றன. ஆனந்தர் உடல் சிதைந்து உருக்குலைந்து போயிருந்தது.

இவர்தான் பரிபூரண ஆனந்தர் என்று அடையாளம் கூடக் காண இயலாத விதத்தில் அவர் முகம் துவையலாகி விட்டது! பாவம்!

☆ 'சௌராஷ்டிர மணி' தீபாவளி மலர்-1986

# அனுபவம் புதுமை!

சிவகுரு-அவரது முழுப்பெயர் சிவகுருநாதன். துணிந்து கிளம்பி விட்டார். எத்தனை நாள்தான் வெறும் நினைப்பிலேயே ஊஞ்சல் ஆடிக்கொண்டிருப்பது? மனம் கட்டுகிற கனவுகளையும், வளர்க்கிற ஆசைகளையும் ஒவ்வொன்றாக செயல்படுத்திப் பார்த்துவிட வேண்டியதுதான் என்று அவர் தீர்மானித்தார்.

மற்றவர்கள் கேள்விப்பட்டால், விசித்திரமான நினைப்புகள் என்றுதான் சொல்வார்கள். பைத்தியக்காரத்தனமான ஆசைகள் என்று பலர் பரிகசிக்கவும் கூடும். வம்பை விலைக்கு வாங்குகிற மாதிரிதான் இதெல்லாம் என்று சிலர் எச்சரிக்கவும் செய்யலாம்.

சிவகுரு மற்றவர்கள் அபிப்பிராயம் பற்றி கவலைப் படுகிறவர் இல்லை. "சொல்லுகிறவர்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லிவிட்டுப் போகட்டும்; அப்படிப் பேசுவது அவர்களுக்கு சந்தோஷம் அளிக்கிறது. நான் என் இஷ்டம்போல் நினைப்புகள் வளர்ப்பதும், அவற்றில் சிலவற்றையாவது செயலாக்க ஆசைப்படுவதும் எனக்கு சந்தோஷம் தருகிறது" என்று அவர் மனம் பேசிக்கொள்ளும்.

அவ்வாறு அவர் என்னதான் விந்தை நினைப்புகளையும், விசித்திரக் கனவுகளையும் வளர்த்து வந்தார் என்று கேட்டாலோ...

சிவகுரு ரயிலில் பயணம் போகிறார். சன்னல் வழியாக வெளிப்புறக் காட்சிகளைப் பார்த்து ரசித்துக்

கொண்டிருக்கிறார். திடீரென்று 'ஆ! ஆகா!' என வியந்து கொள்கிறார்.. நல்ல வெயில் நேரம். தூரத்தில் 'குளு குளு' என்று வேப்ப மரங்கள் நிழல் பரப்பி நிற்கின்றன. ஒரு இடத்தில் ஒற்றையாக ஒரு மரம். அதன் நிழல் குளுமையாகப் பரவிக்கிடக்கிறது. அது அவரை ஈர்க்கிறது. இப்படியே இந்த இடத்தில் இறங்கி விடணும்; அங்கே போய் அந்த மரத்தடி நிழலில், துண்டை விரித்து, ஹாயா'கப் படுத்துக்கிடக்கணும், நேரம் பற்றிய நினைப்பே இல்லாமல், போக வேண்டிய இடம்-பார்க்க வேண்டிய ஆட்கள்-செய்ய வேண்டிய வேலை என்கிற எந்த கவலையுமே இல்லாமல், சுற்றுப் புற அழகில் சொக்கிப்போய் சுகமாக கிடக்கணும். இது அவரது மனதின் நினைப்புகளில் ஒன்று.

நீண்டதூரம் பயணம் போய்க்கொண்டிருக்கிற ரயில் வண்டி அநேக பெரிய ஸ்டேசன்களையும், பல சின்னச் சின்ன ஸ்டேசன்களையும் கடந்து போகிறபோது, இடைவழியில் ஏதோ ஒரு ஸ்டேசனில் இறங்கி, நடந்து போய் புதிய இடத்தில் எதிர்ப்படக் கூடிய அனுபவங் களை சந்திக்க வேண்டும்...

பயணங்களின் போது, ஆங்காங்கே பெரிய பெரிய ஆறுகள் வரும். ஏதாவது ஒரு ஆற்றில் கரையில் இறங்கிவிட வேண்டும். அந்தக் கரை மீதாகவே நடந்து போய், புதுப்புது இடங்களைக் காணவேண்டும். மனசுக்குப் பிடித்த ஊர் எதுவேனும் தென்பட்டால், சிறிதுகாலம் அந்த ஊரிலேயே தங்கிவிட வேண்டும். அந்த ஊரும் அங்கே தங்கியிருப்பதும் அலுத்துப் போனால், மீண்டும் ஆற்றின் கரை வழியே நடந்து போகவேண்டும்...

அவர் செல்லமாய், சீராட்டி வளர்த்த நினைப்பு ஒன்றும் உண்டு.

சிவகுரு பெரிய பஸ் நிலையத்தில் நிற்கிறார். பஸ்கள் வருகின்றன, போகின்றன. ஏகப்பட்ட பஸ்கள். எங்கெங்கோ போகிற பஸ்கள்.

அவை போகிற வழியில் உள்ள ஊர்களின் பெயர்கள் பஸ்சின் ஒரு பக்கத்தில் காணப்படும். முடிவாக போய் சேர்கின்ற ஊரின் பெயர் தலைப்புப் பலகையில் பெரிதாய் பளிச்சிடும்.

அவர் அவற்றையெல்லாம் படித்துப் பார்ப்பார். அவ்விதம் படித்து ரசித்த சமயம் ஒன்றில்தான் சிவகுருவுக்கு அந்த நினைப்பு எழுந்தது.

இந்த பஸ்களில் ஏதாவது ஒன்றில் ஏறவேண்டியது. அது போய் சேருகிற முடிவான இடத்துக்கு டிக்கட் வாங்கவேண்டியது. பயணம் போக வேண்டியதுதான். அங்கே போய் இறங்கி, ஊரைசுற்றிப் பார்க்கவேண்டும். அடுத்த பஸ்சிலோ, அதற்கு அடுத்ததிலோ ஏறி திரும்ப வரவேண்டியது இப்படி ஒவ்வொரு நாள் வெவ்வேறு பஸ்சில் ஏறி, வெவ்வேறு இடங்களுக்கு போய் பார்த்தால் எப்படி இருக்கும்?

புதிய புதிய இடங்கள், விதவிதமான ஊர்கள், கட்டிடங்கள், ஆட்கள் . பார்க்கிற அனுபவம் புதுமையாக இருக்குமே!

இந்த நினைப்பு அவருள் ஊசலிட்டது. அவர் பெரிய பஸ் நிலையத்தில் வந்து நிற்கிற போதெல்லாம், புறப்பட்டுச் செல்கிற எந்த பஸ்சைப் பார்த்தாலும், 'இதில் ஏறிப் போகலாமா இதில் பேரய் பார்க்கலாமா?' என்று! அவர் மனம் குறு குறுக்கும்.

அடுத்த தடவை போய்விட வேண்டியதுதான்... அடுத்த வாரம் இங்கே வருகிறபோது, ஏதாவது ஒரு பஸ்சில் ஏறிவிட வேண்டியதுதான் என்று எண்ணுவார். ஆனாலும், இதுவரை அவர் துணிந்ததில்லை.

அவர் அப்படிச் சுற்றவிட்டு, என்றைக்கு வீடு வந்து சேர்ந்தாலும், 'எங்கே போனே? ஏன் போனே? எதுக்காக இத்தனை நாள் தங்கினே?' என்று அவரை தட்டிக் கேட்கக் கூடியவர்கள் யாருமே கிடையாது. அவரே ராஜா, அவரே மந்திரி, அவரே எல்லாம். பணப் பிரச்னையும் இல்லை சுகவாசி அவர்.

இருப்பினும் அவர் மனம் துணிந்து, எண்ணங்கள்-கனவுகள்- ஆசைகள் வளர்ந்த அளவுக்கு அவரிடம் செயல் துணிச்சல் இருந்ததில்லை.

எப்படியோ எண்ணத்தில் உரு ஏற்றி இன்று செயலாற்ற சிவகுரு துணிந்து விட்டார்.

பெரிய பஸ் நிலையம் அடைந்தார். சுற்றிச் சுற்றி வந்து பற்பல 'ரூட்பஸ்'களையும் பார்த்தார். அவை போகக்கூடிய ஊர்களின் பெயர்களையும் கவனித்தார்.

ஒரு பஸ் அவருக்கு வெகுவாக பிடித்திருந்தது. அதன புது மினுமினுப்பு தேய்ந்து மங்கி அழிந்துபோகவில்லை. பஸ்சின் தோற்றம் எடுப்பாக இருந்தது. அது முடிவாக சேர்கிற இடமும் அவரை வசீகரித்தது. கடலோரச் சிற்றூர் அது என்று அவர் கேள்விப்பட்டிருந்தார்.

ஆகவே, அந்த பஸ்சில் சிவகுரு ஏறி உட்கார்ந்தார். சாப்பாட்டு விஷயம் என்றுமே அவருக்கு ஒரு பெரிய பிரச்னையாகத் தோன்றியதில்லை. வெறும் டீ, வேர்க்கடலை, பிஸ்கட் தினுசுகள் என்று தின்று நாள் கணக்கில் அவரால் கவலையின்றி இருக்க முடியும். அங்கங்கே இருக்கக்கூடிய சாதாரண ஓட்டல், அல்லது 'கிளப்புக் கடை' எதிலும் கிடைக்கக்கூடிய தின்பண்டம் அல்லது சிற்றுண்டி எதையும் கொண்டு அவரால் சமாளிக்க முடியும்.

பஸ் புறப்பட்டது. இந்த 'வழித்தடம்' பஸ்சில் பயணிகள் கூட்டமும் இல்லை. மிக வசதியாக இருந்தது. பஸ் பல மணிநேரம் ஓடிய பிறகே முடிவான ஊரைச் சென்றடையும் என்றும் அவர் தெரிந்து கொண்டார். அது அவருக்கு மன நிறைவு தந்தது.

பயணத்தை சிவகுரு ரசித்தார். பஸ் நின்ற ஊர்களின் பெயர்களை ஆர்வமாக் கவனித்தார். ஏறி இறங்குகிற பயணிகளையும் பார்த்தார்.

பல மணி நேரத்திற்குப் பிறகு பஸ் கடலோர ஊரை சென்றடைந்தது. பஸ்சில் வந்த பலரும் கீழே இறங்கினர். சிவகுருவும் இறங்கினார்.

பஸ் திரும்பி நின்றது. காத்து நின்ற சில பேர் அவசரம் அவசரமாக அதில் ஏறினார்கள். பஸ் உடனே புறப்பட்டு விட்டது.

சிவகுரு சுத்துமுற்றும் பார்த்தார். சாதாரண ஊர் தான். பஸ் நின்று கிளம்பும் இடத்தில் டீக்கடையோ, பீடி- சிகரெட் வகையரா விற்கிற பெட்டிக்கடையோ எதுவும் இல்லை.

தெரு எனத் தோன்றியதில் அவர் நடந்தார். பலதரப்பட்ட வீடுகளின் வரிசை. ஒரு இடத்தில் ஒரு கோயில். பெரிதாகத்தான் இருந்தது.

அவர் சுற்றித் திரிவதற்கு தெருக்கள் பல இல்லை அந்தச் சிற்றூரில். இருந்த சில தெருக்களிலும் கண்டு களிப்பதற்கு விசேஷமாக எதுவும் இல்லை. அவர் கோயிலுக்கு போனார்.

கோயில் பெரிதாக இருந்ததே தவிர, குறிப்பிடத்தக்க சிற்பங்களோ, கலை வேலைப்பாடுகளோ அங்கு இல்லை. சிவகுரு சிறிது நேரம் அங்கே நின்றார். பிறகு, கடலின் பக்கம் போனார்.

கடல் அழகாக, மிடுக்காக தோன்றியது. நெடுகிலும் கட்டு மரக் கட்டைகள், பரப்பி வைக்கப்பட்ட வலைகள், வலைகளை செப்பனிடும் ஆட்கள்.

இங்கு மீனவர்கள் அதிகம் என்று தெரிகிறது என எண்ணியபடி அவர் நடந்தார். நீளத்துக்கு வரிசையாய் சிறுசிறு குடிசைகள். அவற்றில் ஆட்கள் இருப்பதாகத் தான் தோன்றியது.

அங்கே நின்ற ஒருவனை நெருங்கி, ''இங்கே டீ, காபி ஏதாவது கிடைக்குமா? கிளப்புக் கடை எதுவும் இல்லையா?'' என்று கேட்டார்.

''தண்ணிதான் கிடைக்கும். அந்த கடைசி குடிசைகளில் காய்ச்சுறாங்க...'' என்று அவன் சொன்னான். அவன் குறிப்பிட்டது சாராயத்தை என அவர் புரிந்து கொண்டார்.

''எதுக்கும் அதோ அந்த கடையிலே கேட்டுப் பாரும்,'' என்று அந்த ஆள் கை காட்டினான்.

அவன் காட்டிய திக்கில் இருந்த, கடை மாதிரித் தோன்றிய ஒரு இடத்தை நோக்கி அவர் நடந்தார்.

கடைதான். வாழைப்பழம், மிட்டாய் தினுசுகள், முறுக்கு, சர்பத் எல்லாம் கிடைக்கும். அடுப்பும், டீ பாத்திரங்களும் இருந்தன. பால் இல்லை; அதனால் டீயும் இல்லை.

தகவல் அறிந்து கொண்ட சிவகுரு சர்பத் வாங்கிக் குடித்தார். பிறகு கடலோரமாகவே நடந்து இயற்கை வனப்புகளை ரசித்தார். ஒரு இடத்தில் சிறிது நேரம் நின்றார்.

கடல் கண்களுக்கு விருந்து. அலைகளின் நடனம் அலுப்பு தராத இனிய காட்சி. விரிந்து கிடந்த நீலவானம்

ஒரு அற்புதம். இதை எல்லாம் வியந்தபடி நின்றும், நடந்தும் அவர் வெகுதூரம் சென்று விட்டார், கடைசி குடிசைகளையும் கடந்து.

அவர் உள்ளத்தில் அமைதியும், சந்தோஷமும் பரவியது. அவ்வேளையில் குடிசைவாசிகள் இரண்டு பேர் அவரை நோக்கி வந்தார்கள். முரட்டுத் தோற்றம் கொண்டவர்கள்.

"எங்கேருந்து வாறீர்? இங்கே யாரைப் பார்க்க வந்தீர்?" என்று கேட்டான் ஒருவன்.

"சும்மா ஊரையும், கடலையும் பார்க்கத்தான் வந்தேன். இங்கு யாரையும் எனக்குத் தெரியாது," என்றார் சிவகுரு.

"கஞ்சா, அபின் மாதிரியான சரக்கு ஏதாவது கொண்டு வந்திருக்கிறீரா?"

"அது மாதிரி சமாச்சாரங்களே எனக்குத் தெரியாது!"

"ஓ... துப்பு பார்க்க வந்தியா? சாராயம் காய்ச்சறாங் களான்னு பார்க்கிறியா?" என்று மற்றவன் முறைத்தான்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை!" என்று பரிதாப மாக சொன்னார் அவர்.

"பையிலே என்ன வச்சிருக்கே?" என்றவாறு முதல் முரடன் அவர் பையை பிடுங்கினான். அதனுள் கை விட்டு துழாவி ஒவ்வொன்றாக எடுத்தான்.

பர்ஸ் கையில் கிடைத்தது. அதை எடுத்து திறந்து பார்த்தான். பத்து ரூபாய், ஐந்து ரூபாய் நோட்டுகளாக அறுபது ரூபாய் இருந்தது. சில்லறை காசுகளும் இருந்தன.

"உன்னை நம்பமுடியாது... திருட்டுத்தனமா உளவறியத்தான் வந்திருப்பே..."

"பேசாமல் திரும்பிப் போ," என்று உறுமினான் மற்றவன்.

சிவகுருவுக்கு உள்ளூற பயம் பிடித்துக் கொண்டது. வாய் திறவாது நின்றார்.

"இந்தா பையை புடி!" பர்சை மட்டும் வைத்துக் கொண்டு இதர சாமான்களுடன் பையை அவர் கையில் திணித்தான் முரடன்.

"என் பர்ஸ்!" தீனமாக ஒலித்தது சிவகுருவின் குரல்.

"பர்ஸ்.. ஹூவ்.. பர்ஸ்...!" என்று கூறி ஒரு தினுசாக சிரித்தான் தடியன். நோட்டுகளை எடுத்துக் கொண்டு பர்சை அவரிடம் நீட்டினான்.

"பணம்... என் பணம்..." என்று இறைஞ்சினார் சிவகுரு.

"போ... போ... இங்கே நிற்காதே!" என்று மிரட்டினான் முரடன்.

"பஸ்சுக்கு கூட பணம் இல்லியே!" அழுவது போல் சொன்னார் அவர்.

"சரிதாம் போடா," என்று அவரைப் பிடித்து தள்ளினான் தடியன். "சில்லறை காசுகள் இருக்குல்லா! அது போதும்," என்று கூறி சிரித்தான்.

"திரும்பிப் பாராமல் போ... இல்லேன்னா, உதை வாங்குவே!" உறுமல்கள் தொடர்ந்தன.

சிவகுரு பயந்து போய் நடந்தார். வேகமாகவே நடந்தார். ஒரு கவரில் சில ரூபாய் நோட்டுகளை வைத்து, சட்டையின் உள் பையில் பத்திரப்படுத்தி இருந்தார் அவர். ஆகவே, பயணம் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்று தன்னைத்தானே தேற்றிக் கொண்டபடி நடந்தார் சிவகுரு.

☆ தினமலர் தீபாவளி மலர் 1995

# திருப்திகரமான ஏற்பாடு

தொழில் அதிபர் செல்வநாயகத்துக்கு முதல் பார்வையிலேயே அந்த இளைஞனைப் பிடித்து விட்டது. பிறகு சந்திக்க நேர்ந்த ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், அவர் அவனை ஆராயும் கண்களோடு நோக்கினார். அவன் அவர் மனசில் நிலையான ஒரு இடத்தைப் பிடித்துக்கொள்ளும் தகுதிகளை உடையவனாகவே தென்பட்டான்.

"இவனை நம்ம ஆளாக ஆக்கிவிட வேண்டியது தான்" என்று அவர் எண்ணினார். "இது ஒரு பிசினஸ் டீல். வெற்றிகரமாக முடியவேண்டும்' என்று அவர் மனம் ஆசைப்பட்டது. 'முடியாமல் என்ன? ஐயாவாள் நோட் பண்ணி, நடவடிக்கை எடுக்கத் தீர்மானித்து, திட்டமிட்டுச் செயலாற்றிய எதுதான் வெற்றிகரமாக, லாபகரமாக நிறைவேறவில்லை?' என்று அவரது மனசின் இன்னொரு பகுதியே தன்னகங்காரத்தோடு கொக்கரித்துக் கொண்டது.

அவனை தனியாச் சந்தித்துப் பேசவேண்டும் என்று விரும்பி, தகுந்த நேரத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார் அவர்.

அன்று மாலையே உரிய சந்தர்ப்பமும் வாய்த்தது.

நாகரிக நகரத்தின் நவநாகரிகத்துக்கும் ஸ்டைலான பழக்க வழக்கங்களுக்கும் பெயர் பெற்றிருந்த அந்தப் பெரிய ஓட்டலின் விசாலமான புல்வெளியில் அங் கொன்றும் இங்கொன்றுமாகப் போட்டிருந்த மேஜை நாற்காலிகளில் ஒன்றில் அவன் தனியாகக் காணப்

பட்டான். அவனோடு சதா காட்சி அளித்துவந்த, செல்வச் செழிப்பும் பகட்டும் 'ஸொசைட்டித்தனமும்' ஆடை போலவும் அலங்காரம் போலவும் உடம்பில் படிந்திருக்க, ஒய்யாரமாய் திகழ்ந்த மங்கை அவனிடம் விடைபெற்றுப் போய்விட்டாள்

அவள் பெரிய இடத்து அம்மணி. அது தொழில் அதிபர் செல்வநாயகத்துக்குத் தெரியும். அவளுடைய கணவன் பிசினஸ் விஷயமாக வெளிநாடு சென்றிருந்தவன் அன்றைய பிளேனில் அந்நகரில் வந்து இறங்குவதற்கு இருந்தான் என்பதையும் அவர் அறிவார். 'ஆகவே பையனுக்கு இனி இங்கு வேலை இல்லை. நம்ம யோசனையை மகிழ்ச்சியோடு வரவேற்பான்' என்று அவர் மனம் பேசியது.

அவர் தற்செயலாக அந்தப் பக்கமாக நடப்பவர் போல் போய், 'இங்கே உட்காரலாமா?' என்று கேட்டபடி அவனுக்கு எதிரே அமர்ந்தார், மெதுவாகப் பேச்சு கொடுத்தார். 'உங்களை அடிக்கடி இங்கே பார்க்கிறேனே, என்ன வேலையோ?' என்று விசாரித்தார்.

அவருடைய போக்கை 'அநாகரிகமான தலையீடு' என அவன் கருதவில்லை, புன்முறுவலோடு 'பிசினஸ்' என்றான்.

"என்ன பிசினஸோ?"

"தேவைப்படுகிறவர்களுக்கு அவர்கள் தேவையை அனுசரித்து, திருப்திகரமாகப் பணி புரிவது!"

"ஏதாவது கம்பெனியின் பிசினஸ் ரிப்ரசென்டேட்டிவோ? அல்லது ஏஜன்சி ஏதேனும்..."

"அதெல்லாம் இல்லை, இது சொந்தமான, சமூக உறவு ரீதியான, ஒரு பிசினஸ்" என்று சொன்ன இளைஞன், அதற்குமேல் விளக்கம் கூறவில்லை, தேவையில்லை என்று எண்ணினான் போலும்.

அவரும் அதுகுறித்து அதிக அக்கறை காட்ட வில்லை. "கொஞ்ச நேரத்துக்கு முன்னே, இங்கிருந்து போன அம்மாள் உங்களுக்கு உறவோ?" என்று கேட்டார்.

"பிசினஸ் உறவுதான். இந்தப் பெரிய நகரத்தில் அந்த அம்மாளுக்கு என் உதவி தேவைப்பட்டது. தேவைப்பட்ட காலம்வரை நானும் திருப்திகரமாக சேவை செய்தேன். அதற்கு எனக்கு தாராளமான பணமும், போனஸ் என்று கருதப்பட வேண்டிய அள வுக்கு அன்பளிப்புகளும் கிடைத்தன. அத்துடன் இந்த உறவு சரி' என்று கவலை இல்லாமல் கூறினான் அவன்.

"இனிமேல் என்ன செய்வதாக உத்தேசம்?!"

"அடுத்த வாடிக்கையைத் தேடவேண்டியதுதான். என் வாழ்க்கையையே ஒரு பிசினஸ் முறையில்தான் நான் நடத்தி வருகிறேன்."

"நானும் வாழ்க்கையை ஒரு பெரிய பிசினஸாகத் தான் கருதுகிறேன்" என்று செல்வநாயகமும் சொல்ல ஆசைப்பட்டார். அவனுடைய கருத்தை 'காப்பி அடிப்பது' போல் அது ஒலிக்கும் என்று அவர் மனசில் பட்டதனால், அந்த ஆசையை அப்படியே ஒடுக்கி விட்டார்.

அந்த இளைஞனுடைய 'காலத்துக்கு ஏற்ற' நாகரிக ரீதியான, 'சோஸியல் சர்வீஸ்' அடிப்படையில் நடை பெறும் பிசினஸ் என்ன என்பதை அவரும் புரிந்து வைத்திருந்தார். நாகரிக சமுதாயமும், நகர வாழ்க்கை யும், நவயுக கலாசாரங்களும் எத்தனை எத்தனையோ பிழைக்கும் வழிகளுக்கு வகைசெய்து வருகின்றன! எவர் எவரோ, என்ன என்ன எல்லாமோ செய்து, எப்படி எப்படியோ வாழ்க்கை நடத்துகிறார்கள்! இதை நன்கு அறிந்து வைத்திருந்த தொழில் அதிபர் அந்த

இளைஞனின் சாமர்த்தியத்தை வியந்து பாராட்டத் தயாராக இருந்தார்.

ஆனால் அவன் அவரிடமோ அல்லது வேறு எவரிடமிருந்தோ, பாராட்டுரைகளையோ அன்றி நற்சான்றிதழ்களையோ எதிர்பார்த்ததாகத் தெரியவில்லை. அவனது நிலையில் 'அவன் பரிபூரண திருப்தி கொண்டவனாகவே காணப்பட்டான்.

அவனுக்கு முப்பது வயசுக்குள் இருக்கலாம். 'சிரித்த முகமும் சிங்காரத் தோற்றமுமாய், வசீகரனாய், உரையாடல் திறமை மிகுந்த இனியனாய் விளங்கினான். உயரமில்லாது, எனினும் குள்ளம் என்று சொல்லப்பட வேண்டிய அளவிலும் இராது, 'தண்டியும் சதையுமாக' இல்லாமல், ஆயினும் மெலிந்த உடல் என்று கொள்ளப் பட வேண்டிய தன்மையிலும் இராமல், கவலையற்ற-போஷாக்கு நிறைந்த வளப்பமான வாழ்க்கை முறையை விளம்பரப்படுத்துகிற தோற்றம் பெற்றிருந்தான். ஸ்டைல் என்பதை உரக்க எடுத்துச் சொல்லும் புதிய டிசைன்கள், அழுத்தமான வர்ணங்கள், கோணங்கித்தன அமைப்புகள் எதுவும் அவனது ஆடைகளிலோ அலங் கரிப்பிலோ தென்படவில்லை. அவனுக்கு அமைவாகவே எல்லாம் இருந்தன.

இவை எல்லாம்தான் செல்வநாயகத்தை அவன் பால் விருப்பம் கொள்ள வைத்தன. அவன் பெயர் ராஜன் என்பதையும் கேட்டறிந்து கொண்டார். அவன் தனது கோரிக்கையை மனம் உவந்து ஏற்றுக் கொள்வான் என்ற நம்பிக்கை இருந்தது அவருக்கு.

'உங்களுக்கு மிக முக்கியமான அலுவல்கள் எதுவும் இப்போது இல்லை என்று தெரிகிறது. எனக்கும் உதவி தேவைப்படுகிறது. எனது சொந்த விவகாரங்கள் சிலவற்றை நான் ஒழுங்குபடுத்தியாக

வேண்டும். அதற்கு உங்கள் மாதிரி ஆற்றல் உள்ள நபரைத்தான் தேடிக்கொண்டிருக்கிறேன். எனக்கு பெர்சனல் அசிஸ்டன்டாக இருந்து ஆவன செய்ய, நீங்கள் மறுக்கமாட்டீர்கள் என்று நினைக்கிறேன். மாதம் ஐநூறு ரூபாய் தருவேன். தங்கும் இடம், இதர வசதிகள், சலுகைகள், எல்லாம் உரிய முறையில் கவனிக்கப்படும் என்ன சொல்கிறீர்கள்?'' என்று தொழில் அதிபர் 'பிசினஸ் லைக்காக'ப் பேசினார்.

அவன் சிறிது நேரம் யோசனை பண்ணுவதுபோல் இருந்தான். பிறகு, 'சம்மதம்' என்றான்.

''ஆல் ரைட்...... இப்படிக் கொடுங்கள் கையை! என்று உற்சாகத்தோடு அவன் கையைப் பற்றிக் குலுக்கினார் அவர். உங்களுக்கு சௌகரியப்படுகிற போது, என்னோடு புறப்படலாம்'' என்றார்.

அவனுக்கு எப்போதும் சௌகரியம்தான். ஆகவே, அன்றே அவருடன் புறப்பட்டு, அவர் ஊர் போய்ச் சேர்ந்தான் ராஜன்.

தொழில் அதிபர் அவனுக்கு அதிகமான வேலைகள் ஒதுக்கி விடவில்லை. இருந்த வேலைகளை எளிதில், சீக்கிரமே முடித்துவிடும் ஆற்றல் அவனுக்கு இருந்தது. எனவே, வசதிகள் மிகுந்த சூழ்நிலையில் ஓய்வாகப் பொழுது போக்கும் சுகவாசி மாதிரியே அவனும் நாளோட்டினான்.

செல்வநாயகம் பிசினஸ் விஷயமாக அடிக்கடி வெளியூர்களுக்குப் போய்க் கொண்டிருந்தார். சில சமயம் அவனையும் உடன் அழைத்துச் சென்றார். அநேக தடவைகள் அவன் பங்களாவிலேயே தங்கிகிட நேர்ந்தது.

அதற்காக அவன் வருத்தப்படவில்லை. பிறகு, அதுபோன்ற சந்தர்ப்பங்கள் கிடைப்பதற்காக அவன்

ஆனந்தமே கொண்டான். காரணம், திருமதி செல்வ நாயகத்தின் அன்பும் உபசரிப்பும் தனிப்பட்ட கவனிப்பும்தான்.

அதிபர் ராஜனை அழைத்து வந்ததுமே தன் மனைவி வசந்தாவிடம் அறிமுகம் செய்து வைத்தார். அவளும் சமூகப் பிரமுகரின் அந்தஸ்துக்கு ஏற்ற தகுதிகள் பெற்ற துணைவியாகவே விளங்கினாள்.

அவள், வசீகர சக்தியும் திருப்திப்படுத்தும் குண நலன்களும், சிரித்துச் சிரித்து-சிரிக்கச் சிரிக்கப் பேசும் திறமையும் கொண்டிருந்த ராஜனுடன் 'ஃபிரீயாகவே' பழகினாள். சந்தர்ப்பங்களும் சூழ்நிலைகளும் அவ்விருவரும் ரொம்ப ஃபிரியாக'ப் பழகுவதற்கும் இனிமையாகப் பொழுதுபோக்குவதற்கும் துணை செய்தன.

அவன் பெரிய இடத்துப் பெண்மணிகள், சொஸைட்டி 'வண்ணப்பூச்சி'கள் உத்தியோகம் பார்க்கும் நாகரிக நங்கையர்பற்றி எல்லாம் சுவாரஸ்யமான தகவல்களை அவளுக்குத் தந்தான். அவ்வப்போது அவளைப் புகழ்ந்து பேசவும் தவறவில்லை.

அவனுடைய ஆற்றலையும், அனுபவத்தையும் ஒரு சமயம் அவள் வியந்து பேசியபோது அவன் மோகனமாய் சிரித்தான். 'என் பிசினசின் முதலீடே அது தானே! என்றான்.

'பிசினஸா? என்ன பிசினஸ்? என வியப்பால் அகன்ற கண்களோடு அவனைப் பார்த்தாள் வசந்தா.

'வாழ்க்கை பிசினஸ்தான்!''

அப்படியும் ஒண்ணு இருக்குதா?'' என்று கேட்டு, கலகலவெனச் சிரித்தாள் அவள்.

''வாழ்க்கையை ஒவ்வொருவரும் அவரவர் மனப் பண்புக்குத் தக்கபடி மதிப்பிடுவார்கள். அது ஒரு

நாடகம், எக்ஸிபிஷன், ரயில்வே பிரயாணம் மாதிரி, ஜாலி விளையாட்டு இப்படிப் பல நோக்குகள் உண்டு. நான் வாழ்க்கையை ஒரு பிசினஸாக வளர்த்து வரு கிறேன். இன்றைய சமுதாய நிலையில் பலருக்கும் பொதுவான பண வறுமை தவிர வேறு பலவிதமான வறுமைகள். அதன் அடிப்படையில் விதம் விதமான தேவைகள். அன்பு வறுமை, நட்பு வறுமை, உறவு வறுமை, உதவி வறுமை இப்படி அநேகம். இவை வாழ்க்கை வசதிகள் மிகுந்த உயர்மட்டத்தில் அதிகம் நிலவுகின்றன. அவற்றால் தவிக்கும் பெரிய இடத்துப் பெண்களின் குறைகளை நீக்குவதுதான் என் பிசினசின் முக்கிய நோக்கம். அதன்மூலம் பணமும் கிடைக்கும், சுகமும் கிடைக்கும். பண வரவையும் லாபத்தையும் கருத்தில் கொண்டு செயல்படுத்தப்படுவ தால் 'இது பிசினஸ் ஆகிறது...'

அவனுடைய விளக்கமும் பேச்சும் அவளுக்கும் வேடிக்கையாகப்பட்டன. அவள் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள். அந்நிலையில் வசந்தா மிகுதியும் ரசிக்கப்பட வேண்டிய கலையாய், கவிதையாய், இன்பக் கனியாய் தோன்றினாள் அவன் பார்வையில்.

ராஜன் அங்குவந்து ஐந்தாறு மாதங்கள் இருக்கும். "பரவால்லே வாழ்க்கை அருமையாய், இனிமையாய் குளுகுளுன்னு ஓடுது" என்று மகிழ்ந்து கொண்டிருந்த நாளின் ஒரு மனோகர வேளையில் வசந்தா சொன்னாள்—

"நாம் பிரியவேண்டிய காலம் நெருங்கிக் கொண்டி ருக்கிறது."

"ஏன்? என்ன விஷயம்" என்று திகைப்புடன் கேட்டான் அவன்.

"நம் இன்ப உறவின் கனி என்னுள் உருவாகி வளர் கிறது' என அவள் மகிழ்ச்சியோடும் வெட்கத்துடனும் தெரிவித்தாள்.

'என்னது?' அவனுக்கு அதிர்ச்சி அது.

"நான் நான்கு மாசமாக் குளிக்கலே" என்று வெளிப் படையாகச் சொன்னாள் அவள்.

'சே!' என்று கையை உதறினான் ராஜன். 'ஆரம்பம் முதலே தடுப்பு நடவடிக்கைகள் எடுத்திருக்கணும். அல்லது போனமாசமே சொல்லியிருந்தால், ஈசியா அகற்றியிருக்கலாம். இப்ப கொஞ்சம் லேட்டாயிட்டுது. அதனாலே ரிஸ்க் இருந்தாலும் பரவால்லே. மருந்துகள் இருக்கு. பயப்படத் தேவையில்லை. எனக்குத் தெரிந்த டாக்டர் ஒருவர்கிட்டே சொல்லி ஏற்பாடு செய்து போடலாம்."

அவன் பேச்சு அவளுக்குப் பிடிக்கவில்லை. அதை அவள் முகச்சுழிப்பு விளம்பரப்படுத்தியது. அவள் தன்னை சிக்கலில் மாட்டி வைக்கத் திட்டம் போடு கிறாள் போலும் என்று அவனுடைய 'பிசினஸ் மைண்டு' பேசியது. "அவருக்கு விஷயம் தெரியாமலா போகும்? இதை எப்படி மறைக்க முடியும்?" என்று கேட்டான்.

அவனது அப்பாவித்தனத்தைக் கண்டு அவளுக்கு சிரிப்பு வந்தது இப்படிப்பட்ட இக்கட்டான நிலையிலும் இவளால் எப்படிச் சிரிக்க முடிகிறது என்று குழம்பி னான் அவன்.

"இதில் மறைப்பதற்கோ, மறுப்பதற்கோ அவசியம் எதுவும் இல்லை .."

அவளுடைய நிதானமான போக்கும் பேச்சும் அவனுக்கு ஆச்சர்யம் அளித்தன. "உண்மை தெரிந்த தும் அவர் கோபம் கொள்ளமாட்டாரா?" உன்னை அல்லது என்னை அல்லது ரெண்டு பேரையுமே தாக்க வேணும்கிற வெறிகொண்டு...

“உங்களுக்கு உண்மை தெரியாது. இதிலே அவருக்கு ரொம்ப சந்தோஷம். அவருடைய திட்டமும் ஏற்பாடும் வெற்றி பெற்றுள்ளதை அறிந்து பெருமையும் மகிழ்ச்சியும் அடைவதுதான் அவர் சுபாவம்.”

அவள் புதிராகப் பேசுகிறாள் என்று பட்டது அவனுக்கு. விஷயம் புரியாமல் தலையைச் சொறிந்தான். ‘நீ என்னதான் சொல்கிறாய்? தயவு பண்ணி எல்லாவற்றையும் தெளிவாகச் சொல்லு’ என்றான்.

வசந்தா புன்னகை புரிந்தாள். ‘எங்களுக்குக் குழந்தை இல்லை. கல்யாணமாகிப் பல வருஷங்கள் ஆகியும் குழந்தை பிறக்கவில்லை. அவருக்குப் பிள்ளை பிறக்கும் என்கிற நம்பிக்கைக்கிடமில்லை. ஆனாலும் எங்களுக்கும் குழந்தை தேவை. அவருடைய திரண்ட சொத்துக்கு செல்வத்துக்கும் வாரிசு வேண்டும். தேவைப்படுகிறவர்களின் தேவையை அனுசரித்து, திருப்திகரமாக உதவுவதை பிசினசாகக் கொண்டுள்ள உங்கள் உதவியை அவர் நாடினார். நீங்களும் உதவினீர்கள். அவ்வளவுதான் விஷயம்!’ என்றாள்.

“ஓகோ, இதுதான் சொந்த விவகாரங்களை ஒழுங்கு படுத்தும் தொழில் அதிபரின் பிசினஸ் ரீதியான ஏற்பாடோ? ஆதியிலேயே இது எனக்குப் புரியாமல் போய்விட்டதே! நான் என்னவோ இது தனிப்பட்ட காதல் வெற்றி என்று எண்ணி ஏமாந்திருந்தேனே!” என்று அவன் தன் நெஞ்சோடு புலம்பிக் கொண்டான்.

அதற்காக அவன் ரொம்ப நேரம் வருத்தப்படவும் இல்லை. இதில் வருத்தப்படுவதற்கு என்ன இருக்கிறது? பிசினஸ் என்றால் பிசினஸ்தானே!

தொழில் அதிபர் செல்வநாயகம் அன்று மாலை ராஜனை தனியாகச் சந்தித்தார். “மிஸ்டர் ராஜன், நம்ம பிசினஸ் டீல் திருப்திகரமாக நிறைவேறிவிட்டது. இனியும் உங்களுடைய சொந்த பிசினஸ் முயற்சிகளுக்கு

நான் தடையாக இருக்க விரும்பவில்லை. நான் திடீர்னு உங்களை அனுப்பி விடுவதாக நீங்கள் எண்ணக் கூடாது. மூன்று மாத அலவன்சாக ஆயிரத்தைந்நூறு ரூபாய், போனஸாக ஒரு ஐநூறு ஆக இரண்டாயிரம் இந்தாருங்கள். உங்கள் எதிர்காலம் வளமுடையதாக அமையட்டும்'' என்று வாழ்த்துரையும் பணமும் அளித்து, கைகுலுக்கி, விடைகொடுத்து அனுப்பினார்.

''இனிமேல் இவன் இங்கே இருப்பானேன்? அவள் உள்ளத்திலும், அப்புறம் பிள்ளை பிறந்த பிறகும், வீணான உணர்ச்சிக் குழப்பங்களுக்கு வகை செய்வதற்கா? பிசினஸ் ஏற்பாட்டில் சென்டிமெண்டல் நான்சென்சுக்கெல்லாம் இடமே கிடையாது'' என்று பணநாதர் மனத்திருப்தியுடன் எண்ணிக் கொண்டார்.

ராஜன் வசந்தாவிடம் தனிமையில் விடை பெற்றுக் கொண்டான். 'உன் நினைவு என்றும் இருக்கும்!' என்றான்.

''எனக்கும்தான்' என முணுமுணுத்தாள் அவள். இருந்தாலும், என் நினைவாக இது எப்பவும் உங்களிடமே இருக்கட்டும்'' என்று கூறி, தன் கழுத்தில் கிடந்த மெல்லிய தங்கச் சங்கிலி ஒன்றை எடுத்து, அன்பளிப்பாக அவனுக்குத் தந்தாள். தாயாகப் போகும் திருப்தி அவள் முகத்திலும், உடலிலும் தனி ஒளியோடு மினுமினுத்துக் கொண்டிருந்தது.

அந்த அழகைக் கடைசி முறையாகக் கண்டு களித்து விட்டு வெளியேறிய ராஜனின் மனம் ''எல்லாருக்கும் திருப்தி தரும் ஏற்பாடாக இது முடிந்திருக்கிறது. சந்தோஷமான விஷயம் இல்லையா அது? எனக்கு என்ன! வாழ்க்கையே ஒரு பிசினஸ், அதற்கு வெற்றி தரும் பெரிய சந்தை இந்த மனித சமூகம்'' என்று நிறைவோடு முடிவுகட்டியது.

# திடீர் ஹீரோ!

சுயம்புலிங்கத்துக்கு அந்தத் துணிச்சல் எப்படி வந்தது? அவரை அறிந்தவர்களுக்கு அது ஓரே ஆச்சரியமாயிருந்தது. ஏதோ ஒரு வேகத்தில் அவர் அவ்விதம் செயல் புரிந்துவிட்டாரே தவிர பிறகு அதைப்பற்றி எண்ணும்போது அவருக்கே அது பெரும் ஆச்சரியமாகத்தான் பட்டது!

இத்தனைக்கும் சுயம்புலிங்கம் ஒரு சாதாரணப் பேர்வழி. பார்ப்பதற்கு அப்பாவி மாதிரி இருப்பவர். பலரை அண்ணாந்து பார்க்க வைக்கும் உயரம், ஏறெடுத்து நோக்கச் செய்யும் எடுப்பு. திரும்பிக் கவனிக்கத் தூண்டும் மிடுக்கு. பிறரிடம் மரியாதை அல்லது பயம் போன்ற உணர்ச்சியை உண்டாக்கும் ஒரு தோரணை, அல்லது பெரிய மனுஷத் தோற்றம். -இப்படி ஏதேனும் ஒன்று அவரிடம் ஒட்டிக் கொண்டிருக்குமோ என்று ஆராயப் போனால் ஒரு மண்ணும் கிடையாது. பிறவி முதலே நோஞ்சானாக இருந்து, நோஞ்சானாகவே வளர்ந்தவர் அவர்.

தெருவில் சிறு கூட்டம் தென்பட்டாலும் 'நமக்கு ஏன் வீண் வம்பு?' என்று ஒதுங்கிப் போய்விடுவார். கலாட்டா, காலித்தனம், ரகளை, சண்டை சச்சரவு 'வகையரா' அவருக்குப் பிடிக்காத விஷயங்கள். ஆனால் அவற்றின் வளர்ப்புப் பண்ணை என்று கருதப் பட்ட வட்டாரத்தில்தான் அவர் வசித்தார். அவர் போகிற, வருகிற பாதைகளில் அங்கங்கே திடீர் திடீரென்று கலாட்டா, கூச்சல், கும்பல் முதலியன

தலையெடுக்கும்; வெறியாட்டம் போடும். காளிப் பேட்டை என்று சொன்னாலே, "ஓ, அந்த இடமா?" என்கிற எதிரொலியை எழுப்பக் கூடிய சிறப்புப் பெற்றிருந்தது அது.

முன்னொரு காலத்தில் கண்ட கண்ட இடத்திலெல்லாம் கள்ளுக்கடைகள் ஆட்சி புரிந்து கொண்டிருந்த போது காளிப்பேட்டை எவ்வளவு கோரமாக விளங்கியது தெரியுமா? 'நிர்-1, மதுரமான தென்னங்கள்ளு இங்கே கிடைக்கும்' என்று பளிச்சிடும் எழுத்துக்களோடு காளிப்பேட்டையில் மூலைக்கு மூலை கடைகள் இருக்கும். அவற்றின் முன்னே எப்போதும் ஒரு கூட்டம்; ஓயாத கூச்சல்; திடீர்ச் சண்டைகள். எந்தச் சமயத்திலும் அரிவால் ஓங்கப்படும். சதக்!- பனங்காய் சீவுகிற மாதிரி ஆளையே வெட்டி விடுவார்கள்!...

இந்த விதமாக-இன்னும் தினுசு தினுசாக-அந்த ஊர்ப் பெருமைகள் பேசப்படும். சில ஆசாமிகளின் பெயர்கள் பயம் கலந்த மரியாதையோடு உச்சரிக்கப் படும். "அவங்க எல்லாரும் போயிட்டாங்க, கள்ளு சாராயம் வகையராகவும் போயிட்டுது. இருந்தாலும் அவங்க வாரிசுக இல்லாமல் போகல்லே. அவங்களுக்குக் குடிக்கிறதுக்கும் கிடைக்கத்தான் செய்யுது. குடித்துப் போட்டு, ராத்திரி நேரங்களிலே தெருவில் அட்டகாசம் பண்றதுதான் அவங்க வேலை. போலீசு வருதுன்னு சொன்னா, அவங்களுக்கு முன்கூட்டியே தகவல் கிடைச்சிடும் ஆசாமிக எங்கே போவானுக, எப்படிப் பம்முவானுக என்றே தெரியாது. எல்லாரும் ஒரு நிமிஷத்திலே அவுட்! தெரு வெறிச்சோடிக் கிடக்கும்!" என்று சிலர் வியப்போடு அறிவிப்பார்கள்.

சுயம்புலிங்கம் அவற்றையெல்லாம் சட்டை செய்வது கிடையாது. நமது அலுவல்கள், குறிப்பிட்ட

நேரங்களில் வெளியே போவது, வருவது, ஓட்டலில் சாப்பாடு, பொழுது போக்காகப் புத்தகங்கள் படிப்பது- இப்படி அவருடைய உலகம் இயங்கிக் கொண்டே இருந்தது.

இரவு மணி பத்து, பத்தேகால் இருக்கும். சுயம்பு வும் அவர் நண்பர் பாஸ்கரும் சிகரெட்பிடித்து, வம்பளந்து, உற்சாகம் பெற்றுக்கொண்டு இருந்தார்கள்.

பாஸ்கரன் பெரிய இடத்துப் பிள்ளை. பொறுப்பான உத்தியோகம் பார்த்து வந்தார். அதிகாரம், பணம், குலக் கௌரவம், ஆள் மதிப்பு முதலிய அந்தஸ்துகள் காரண மாக அவருக்கு அந்த வட்டாரத்தில் சிறிது செல்வாக் கும் ஏற்பட்டிருந்தது. அதைப் பயன்படுத்திக் கொள்ளும் ஆசையோடு பொன்னுசாமி என்கிற நபர் அங்கே வந்து, "ஐயா, என்னை நீங்கதான் காப்பாத் தணும். காளிப்பேட்டை ஆசாமிங்க என்னை மிரட்டு றானுக. ராவா என் தலை வேறே உடல் வேறே ஆகப் போகுதுன்னு சொல்றானுக. நீங்க வந்து ரெண்டு அதட் டல் போட்டால் போதும். பொன்னுப்பய வெறும் பயல் இல்லே, தட்டிக் கேட்கச் சரியான ஆள் பலம் இருக்கு துன்னு அவங்களுக்குப் படும்" என்று புலம்பினான்.

"நீ ஏதாவது வாலாட்டியிருப்பே; உன் வாலை ஒட்ட நறுக்குவதற்கு மற்றவனுக கத்தி தீட்டுவானுக!" என்றார் பாஸ்கர்.

"இல்லே. நான் தப்புத்தண்டா எதுவும் பண்ணவே இல்லே!" என்று பொன்னு சாதித்தான்.

இந்த விவகாரத்தில் தலையிட பாஸ்கருக்கு மனமும் இல்லை; உற்சாகமும் இல்லை. "இப்போ என்னாலே வர முடியாது. இன்னிக்கு எனக்கு வேலை அதிகம்; ஒரே களைப்பாக இருக்கு. நீ வேணுமின்னா நம்ப ஸாரை அழைத்துப் போ!" என்று சுயம்புலிங்கம் பக்கம் கையைக் காட்டினார் அவர்.

சுயம்புவை அவருக்குத் தெரியாதா? சும்மா தமாஷுக்குத்தான் சொன்னார்.

அவர் கொஞ்சமும் எதிர்பாராத விதமாகச் சுயம்பு லிங்கம் அங்கு வந்து நின்றவனை ஒரு தினுசாகக் கவனித்தார். "சரி, நீ முன்னாடி போ, இதோ நான் வாறேன்" என்றார்.

பொன்னுசாமி பெரிசாக ஒரு கும்பிடு போட்டு விட்டு வெளியேறினான்.

அவன் போனதும் சுயம்பு வேகமாக எழுந்தார். ஒரு துண்டை எடுத்து உடம்பை மூடியிருந்த பனியனுக்கு மேலாகப் போர்த்துக் கொண்டார். மேஜைமீது கிடந்த சிறு கைப்பிரம்பு ஒன்றை எடுத்துக்கொண்டு வேக மாகக் கிளம்பி விட்டார்.

அவரை வேடிக்கை பார்த்தவாறு சோம்பிக் கிடந்த பாஸ்கர், "என்ன மிஸ்டர், அங்கேயா போகப் போறீங்க?" என்று கேட்டார்.

"ஊம்" என்று உறுமினார் சுயம்பு.

"அவங்களுக்கு வேறே வேலை கிடையாது. சோதாப் பசங்கள் மத்தியிலே நீங்க போயி என்ன பண்ணப் போறீங்க?"

"அவனுக எப்படி இருப்பாங்க என்றாவது பார்க்க லாமே!" என்று சொன்ன சுயம்புலிங்கம் தமது சைக்கிளை எடுத்துக் கொண்டு வெளியேறினார்.

"போகட்டும் போகட்டும். ஐயாவுக்குச் சரியான பாடம் கற்பித்து அனுப்புவாங்க. 'செம்தியா' உதை தின்னுட்டு வருவாரு!" என்று சிரித்தது பாஸ்கரின் மனம்.

பொன்னுசாமி குறிப்பிட்ட தெருவை அடைந்ததும் சுயம்புலிங்கம் சைக்கிளை விட்டிறங்கி நின்று நெடுகிலும் தமது பார்வையை எறிந்தார். ஓர் இடத்தில் நாலைந்துபேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

சுயம்பு விறைப்பாக நின்று, "ஏய், இங்கே என்ன கும்பல்? நீங்கதான் கலாட்டா பண்ற ஆளுகளா? தலையைச் சீவிடுவேன். ஆளைக் குளோஸ் பண்ணிடுவேன்னு சொல்ற அளவுக்கு வந்துட்டுதா? எல்லோரையும் ஸ்டேஷனுக்குத் தள்ளிட்டுப் போயி பாடம் கத்துக் கொடுக்கிறேன். நான் யாரு தெரியுமில்லே? உங்களையெல்லாம் தொலைச்சுப் போடுவேன், தொலைச்சு!" என்று இரைந்தார்.

அவ்வளவுதான்; அங்குமிங்கும் உட்கார்ந்திருந்தவர்களும், ஓய்ந்து கிடந்தவர்களும் ஒவ்வொருவராக வந்து ஒதுங்கி நின்றார்கள். பீடி பிடித்துக் கொண்டிருந்த ஒருவன், அதை அவசரம் அவசரமாக மண்ணில் போட்டுக் கால் பெரு விரலால் தேய்த்து நசுக்கினான். ஒன்றிரண்டு பேர் தோளில் கிடந்த துண்டை இறக்கி, கையில் தொங்க விட்டு மரியாதை காட்டினார்கள்.

"அப்படி ஒண்ணும் இல்லீங்களே எசமான்!" என்ற சொற்களை மென்று மென்று வெளிப்படுத்தினான் ஒருவன்.

"பின்னே பொன்னுச்சாமி வந்து ரிப்போர்ட் கொடுத்தானே? அது விளையாட்டா? ஒரு மனுசன் உசிரு என்ன கிள்ளுக் கீரையா? அவன் கத்திரிக்காயா இல்லே கோழிக் குஞ்சா? நீங்க நினைச்ச உடனே அரிந்து தள்ளவும், நறுக்கிக் கொல்லவும்?" என்று கத்தினார் சுயம்பு.

"எசமானுக்கு யாரோ தப்பாத் தகவல் கொடுத்திருக்காங்க!"

“பொன்னுசாமி எங்கே?” என்று அதட்டிக் கேட்டார் அவர்.

“பய எங்கே போனான்?” என்று பலரக முணு முணுப்புகளும், அநேக விதமான பார்வைகளும் சுற்றுப் புறத்தைத் துழாவின.

“இதோ இருக்கேன், எசமான்” என்று பதறி அடித்து முன்னே வந்தான் பொன்னு.

“இங்கே யாரு உன்னை மிரட்டியது”?

பொன்னுசாமி திருதிருவென்று விழித்தான்.

“சொல்லேண்டா, வாயிலே என்ன கொழுக் கட்டையா திணிச்சிருக்கு? அங்கே வந்து ரிப்போர்ட் பண்ணினியே?” என்று எரிந்து விழுந்தார் சுயம்பு.

“முத்துமாலை, காத்தலிங்கம், ஒண்டிப்புலி” என்று முனகினான் பொன்னு.

“ஒண்டிப்புலியா! யாரு?” என்றார் அவர்.

“நான்தான் எசமான்!” என்று முன்னால் வந்து நின்றது வஞ்சனை இல்லாமல் வளர்ந்த உருவம் ஒன்று.

“உன் தொழில் என்ன?” என்று விசாரித்தார் சுயம்பு.

“சுக ஜீவனம்!”

“சாப்பாட்டுக்கு வழி?”

“அம்மா கவனிச்சுக்குறாங்க. அவங்க கடை நடத்துறாங்க! நல்ல வியாபாரம்!” என்று விடை கிடைத்தது.

சுயம்புலிங்கம் பிறகு விசாரித்து அறிந்து கொண்ட விவரம் இது.

ஒண்டிப் புலியின் வேலை சூதாடுவது, ரேசுக்குப் போவது, குடிப்பது, ஏமாந்தவர்களிடம் பணம் பிடுங்கி ஜாலியாகச் செலவு பண்ணுவது; அவனுக்கு இரண்டு மனைவிகள். ஆசைநாயகி ஒருத்தியும் உண்டு.

அப்போது பொன்னுசாமி பேரிலும் அப்படி ஒரு குற்றச்சாட்டைக் கூறினான் ஒண்டிப் புலி.

"நான் இல்லாத சமயத்திலே இந்தப் பொன்னுப் பய வீட்டிலே போயி, பொம்பளை கிட்டே கேலி பேசியிருக்கிறான். அவகிட்டே தகாத முறையிலே நடந்திருக்கிறான். அதனாலே நான் எச்சரிச்சி வச்சேன்" என்றான்.

சுயம்பு, பொன்னுசாமியை முறைத்தார். "ஏமி லேய், திமிரா? நீ ஏண்டா அப்படிச் செய்தே? உன்னையும் ஸ்டேஷன்லே தள்ளி சரியா கவனிக்க வேண்டியதுதான் போலிருக்கு!" என்று கர்ஜித்தார்.

"இல்லை ஏசமான் நான் வந்து..."

"வந்தாவது, போயாவது? ஜாக்கிரதை! உன் மேலேயும் ஏதாவது ரிப்போர்ட் வந்தால், அவ்வளவுதான். முதுகுத்தோலை உரிச்சுப் போடுவேன், ஆமா!" என்று சுயம்பு, "எல்லாருக்கும் இதே வார்த்தைதான். இனி மேல் ரிப்போர்ட் வந்ததோ தொலைச்சுடுவேன் தொலைச்சு! எச்சரிக்கையா நடந்துக்குங்க!" என்று ஒரு போடு போட்டார்!

அங்கே நின்றவர்கள் கலக்கத்துடன் தலையை ஆட்டினார்கள். ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

சுயம்புலிங்கம் விறைப்பாக சைக்கிளில் ஏறி அழுத்தி மிதித்தார். திரும்பிப் பாராமலே வேகமாக முன்னேறினார்.

"சண்டியன், கில்லாடி, ரவுடி! ஹே, சோதாப் பசங்க! என்னை போலீஸ் இன்ஸ்பெக்டர்ன்னு நெனச்சி மிரண்டு போனாங்க. துணிஞ்சு அடிக்கிறவனைக் கண்டா பயப்படறவங்கதான் உலகத்திலே ஜாஸ்தி! அவங்க பிழைப்பும் அப்படித்தான் நடக்குது!"

சுயம்புலிங்கத்தின் சிந்தனையில் ஞான மின்னல் கிறுக்கிச் சிரித்தது.

சிரித்தபடி திரும்பி வந்த சுயம்புவைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தார் பாஸ்கர். அவர் பேச்சைக் கேட்டுத் திகைத்துத் திணறினார்.

"கில்லாடிகளாம்! தண்டச் சோத்துத் தடியன்கள்! அவங்க உடலையும் உரத்த குரலையும் முரட்டுப் போக்கையும் கண்டு பயப்படுகிறவங்க இருக்கிறவரை, அவங்க பிசினசும் வெற்றிகரமா நடக்கும். கொஞ்சம் துணிஞ்சி, தடலடித்தனமாப் பேசி மிரட்டினால் யாரும் சண்டியன் ஆகி விடலாம்னு தெரியுது. மனுஷங்க உள்ளத்திலே அவ்வளவு தூரத்துக்கு பயம் குடியிருக்குது!" என்று சுயம்பு அளந்தார்.

அவருடைய துணிச்சலையும், புதிய போக்கையும் பற்றி என்ன சொல்வது அல்லது என்ன நினைப்பது என்றே புரியவில்லை நண்பருக்கு. ❁

☆ "தினமணிகதிர்"— 7-7-67.

# ஒரே பாடம்

ரகுராமன் 'ஒரு மாதிரியான பேர் வழி' என்றுதான் அவனை அறிந்தவர்கள் சொல்வார்கள். அவன் தன்னைப்பற்றி அவ்விதம் சொல்லிக் கொள்வானா என்ன! அவனுக்கு மற்றவர்கள் எல்லோருமே 'ஒரு மாதிரி' ஆகவும் உலகமே 'என்னமோ ஒரு தினுசாகவும் தான் தோன்றக் கூடும்.

"காதல் தேவதையின் பட்டயம் பெற்ற சீடன்" தானேதான் என்ற எண்ணம் ரகுராமனுக்கு இருக்குமோ என்னவோ! அல்லது, "காதல் செய்வீர் உலகத்தீரே!" என நாவலித்த கவியின் வாக்கை ஏற்று, அதை நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டிய பொறுப்பு கவி உள்ளம் பெற்ற தனக்கு உண்டு என்ற நினைப்பு அவனுக்கு இருந்தாலும் இருக்கலாம்.

அவனுடைய எண்ணங்கள் எப்படி இருந்தால் என்ன? அவற்றின் விளைவாக மலர்ந்த செயல்கள் அவன் வாழ்க்கையின் ஏறு அலைகளாகவும் இறங்கு அலைகளாகவும் விளங்கின என்பதுதான் முக்கியம்.

காதல் எனும் அற்புதத்தின் முதல் ரேகை அவன் உள்ளத்தை தொட்டபோது, ரகுராமனுக்கு பதினேழு வயதுதான் ஆகியிருந்தது. பள்ளிப் படிப்பை முடித்து

விட்டு சும்மா ஊர் சுற்றிப் பொழுது போக்கி வந்த அவன், 'கண்டது கற்றுப் பண்டிதன் ஆகும்' நோக்கத்துடன், கைக்குக் கிடைத்த எல்லாப் பத்திரிகைகளையும் நாவல்களையும் படித்து மகிழ்ந்தான். அதன் கோளாறுகளாகவே இருக்கலாம். அவன் தேடிக் கொண்ட அனுபவம்.

அவன் பெற்றோருடன் வசித்த வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் ஒரு அம்மணி வசித்தாள். அவளுக்கு இருபத்தைந்து வயதிருக்கலாம். என்றாலும் தான் ஒரு 'சின்னப் பொண்ணு' என்ற நினைப்பு அவளுக்கு. கிருஷ்ணம்மா எனும் அந்த அம்மணிக்கு கல்யாணம் ஆகியிருந்தது. பல வருட இல்லற வாழ்வு அவள் மீது குழந்தைச் சுமையை ஏற்றிவிடவில்லை. அதை ஒரு குறையாக அவள் கருதவுமில்லை.

கிருஷ்ணம்மா 'ரொம்ப ஸ்டைல் பேபி!' நாகரிக அலங்கார விதிகளை பின்பற்றி தன்னை சிங்காரித்துக் கொண்டு அங்குமிங்கும் அலைவாள். வாசல்படி ஓரம் நின்று வீதி வழியே போவோரை கண்டு களிப்பாள். மென்குரலில் பாட்டிசைத்து மகிழ்வாள். வீட்டினுள் குதித்துக் குதித்து நடப்பாள். கண்ணாடி முன் நின்று முகத்தைக் கோரணிகள் பண்ணி, கலகலவெனச் சிரிப்பாள். அவள் விழிகள் ஆயிரம் கஜல்கள் பாடும் எப்போதும்.

ரகுராமனுக்கு அவளை அடிக்கடி பார்க்க வாய்ப்பும் வசதியும் இருந்தன. அவன் தன்பக்கம் பார்க்கும் போதெல்லாம், கிருஷ்ணம்மா ஒய்யாரப் பார்வை எறிந்து சொகுசுச் சிரிப்பை சிந்துவது வழக்கம். ரகு, ரகு என்று செல்லமாக அழைத்து வம்புகள் பேசி ஆனந்தம் அடைவாள். எப்பொழுதாவது அபூர்வமாக அவள் தன் கைவிரல்களை அவன் கன்னத்தில் விளையாட விட்டு, மோவாயைப் பற்றி கொஞ்சுதலாக அசைத்து, காந்தப்

பார்வையை அவன் முகத்தில் நிறுத்தி, வசியச் சிரிப்பு தீட்டுவதும் உண்டு. அச்சமயம் அவனுக்கு 'ஐயோ! ஐயோ!' என்று இருக்கும்.

ஆகவே கிருஷ்ணம்மா தன்மீது காதல் கொண்டு விட்டாள் என்று ரகுராமன் நம்பினான். தனக்கு அவள் பேரில் அளவிலாக்காதல் என்று அவன் என்றோ முடிவு கட்டியிருந்தானே! அதனால் ஒருநாள் அவன் துணிச்சல் கொண்டான். கிருஷ்ணி, கிருஷ்ணி என்று ஆசையோடு குழைந்தான்.

அவள் திகைத்துப் போய் நின்றாள். வியப்புடன் அவனைப் பார்த்து 'ஊம்ங்?' என்றாள்.

''உனக்கு என்மீது காதல்தானே?'' என்று கேட்டு அவள் மேல் சாய்ந்தான் ரகு.

''ஐயோ, லவ்வே!'' என்று கிண்டலாகக் கூறி, 'வவ்வவ்வே' என்று முகம் சுளித்துப் பழிப்பு காட்டிய கிருஷ்ணம்மா சடாரென விலகிக் கொண்டாள். அதனால் அவன் தடாலென தரையில் விழுந்தான்.

ரகுராமனுக்கு தலையில் நல்ல வலி. உள்ளத்திலும் வலி எடுத்தது. கண்கள் நீர் சிந்தின.

''அழாதே கோந்தே, லட்டு முட்டாசி வாங்கித் தாறேன். அப்பா அம்மாகிட்டே சொல்றேன்'' என்று அவள் நையாண்டி பண்ணவும், அவனுக்கு ஒரே மானக்கேடுதான்.

உடனே அங்கிருந்து கிளம்பியவன்தான். ரகு மறுபடியும் வீட்டுக்குப் போகவில்லை. எப்படியாவது, ஏதாவது, ஒரு வேலை தேடிக் கொள்வது என்று ஒரு நகரத்துக்கு பிரயாணமானான்.

அவன் போன நகரில் அவனுக்கு உறவினர் ஒருவர் இருந்தார். அவர் வீட்டில் தங்கினான். அவரே அவனுக்கு ஒரு வேலையும் தேடிக் கொடுத்தார்.

கொஞ்ச காலம் அவன் ஒழுங்காக இருந்தான். அப்புறம் காலம் அவனை சும்மா இருக்கவிடவில்லை.

அந்த உறவினரின் மகள் மைதிலிக்கு பதினைந்து வயசாகியிருந்தது. அவள் பள்ளிக் கூடம் போய் வந்து கொண்டிருந்தாள். அப்படி அவள் போகிற அழகும், வருகிற ஜோரும் ரகுராமனை கிறங்கடித்தன.

மைதிலி அவனிடம் சகஜமாகப் பழகினாள். சாதாரணமாகப் பேசிச் சிரித்தாள். பாடங்களில் சந்தேகம் கேட்டாள். தன் சிநேகிதிகள் பற்றி சிரிக்கச் சிரிக்கப் பேசினாள்.

ஒருநாள் ரகுராமன் அருகில் நின்று அவள் பேசிக் கொண்டிருந்த போது, அவன் அவளுடைய கையைப் பிடித்து ஆசையோடு வருடினான். 'மைதிலி' உள்ளதை சொல்லிப் போடு. உனக்கு என் மீது லவ்வு தானே?' என்று கேட்டுவிட்டான்.

மைதிலி இதை எதிர்பார்க்கவில்லை. அவள் முகம் குபீரென ரத்த ஓட்டம் பெற்றுச் சிவந்தது. தலை குனிந்து நின்றாள்.

அது சம்மதத்தின் அடையாளம் என்று அவனாகவே எண்ணிக் கொண்டான் ரகுராமன். 'நாம் ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாம். இப்பவே இல்லை. உன் படிப்பு முடிந்த பிறகுதான். நம்ம ரெண்டு பேருக்கும் நல்ல பொருத்தம். நான் ராமன். நீ மைதிலி' என்று கொஞ்சுதலாகப் பேசினான். அவள் கன்னத்தைத் தடவக் கைநீட்டினான்.

அப்புறம் நடந்ததை அவன் எதிர்பார்க்கவில்லை. சிரித்து சிங்காரமாக நின்றாள். பின் முகம் சிவந்து தலை தாழ்த்திய மைதிலி கேவிக் கேவி அழுது கொண்டே ஓடினாள். அவள் அம்மா என்னவோ ஏதோ என்று பதறினாள்.

மகளிடமிருந்து விஷயத்தை மெது மெதுவாகக் கேட்டறிந்து கொண்ட அம்மா காளிதேவியாக மாறினாள். அவள் கொட்டிய ஏச்சுக்களுக்கும், சாபங்களுக்கும் அளவே கிடையாது.

எல்லாவற்றையும் மவுனமாக ஏற்று நின்ற ரகுராமன், 'சுத்த மூளை கெட்ட ஜென்மங்கள்!' என்று தான் எண்ணினான். 'வீட்டை விட்டு வெளியே போடா எச்சிக்கலை நாயே!' என்று அந்த அம்மையார் சொல்லும்வரை தான் அங்கேயே நின்றிருந்த மடத்தனத்துக்காக அனுதாபப்பட்டவாறே அவன் வெளியேறினான். இருந்த வேலையையும், ஊரையும் விட்டுவிட்டுப் போக வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்பட்டது.

ரகுராமனின் மூன்றாவது காதல் முயற்சி அவனது இருபதாம் வயசில் தலைகாட்டியது. அப்போது அவன் இருந்த ஊரும் வேறு; பார்த்த வேலையும் சிறிது வசதியானதுதான்.

அவன் அலுவலகத்துக்கு வழக்கமாகப் போய்வரும் தெருவில் ஒரு வீட்டின் சன்னலில் சந்திரோதயம் கண்டான் ஒரு நாள். அம்முக மண்டலத்தில் அற்புத நட்சத்திரங்கள் போல் இரண்டு கண்கள் ஒளிவீசக் கண்டான். அம்புலியும் விண்மீன்களும் சிரிப்பை மலர்வித்துக் காட்டும் தாமரையாக மாறித் திகழ்வதை மறுநாள் பார்த்தான். கருவிழிகள் புரளும் கயல் மீன்களாக வேலை காட்டுவதைக் கண்டான் அடுத்த நாள்.

இப்படியாக வளர்ந்த அற்புதம் வாசல்படியில் மின்னல் கொடியென உருவெடுக்கக் கண்டான்.

அவன் பார்க்கவும் மான் போல் ஓடி ஒளியக் கண்டான். மறுநாள் மயிலென நிற்கக் கண்டான். அன்னம் போல் அசைந்து கள்ளப் பார்வை நோக்கக் கண்டான். தினந் தோறும் இவ்விதம் புதுமைகள் பலவும் கண்டான். காலம் ஓடுவதும் கருத்தில் கொண்டான்.

பார்த்தாள் பதுங்கி நின்று. முகம் முழுவதும் காட்டினாள். பின், மேனி எழில் காட்டி நின்றாள். நாணி ஓடினாள். அப்புறம் நின்று பார்க்கலானாள். நின்றவள் சிரிக்கத் துணிந்தாள். குரல் நயம் காட்டத் துணிந்தாள். ஆகவே, இவளுக்கு என்மீது காதல்தான்; வேறென்ன! என்று தீர்மானித்தான் ரகுராமன்.

காதலை வளர்க்க என்னென்னவோ செய்தான்.

ஒரு நாள் அக்குமரி வளைகள் கலகலக்க கை அசைத்தாள். வீதி வழியே சென்ற அவன் திரும்பிப் பார்த்தான். அவள் சிரிப்பது போல் தோன்றவே அவனும் சிரித்தான்.

அருகில் சென்று, 'உனக்கு என்மீது காதல் தானே?' என்று தனக்குத் தெரிந்த பாடத்தை ஒலிபரப்ப நினைத்து நின்றான்.

ரகுராமன் திடுக்கிட்டுத் திகைக்க நேரிட்டது. காரணம், திமுதிமு வென்று ஓடிவந்தார் ஒரு பெரியவர்.

ஏய் அயோக்கியப் பயலே! தெருவோடு ஒழுங்காகப் போகமுடியலியோ? நானும் தினம் தினம் கவனிக்கிறேன். இந்தப் பக்கமே முறைக்கிறது. பல்லைக் காட்டுகிறது, உருட்டி உருட்டி முழிக்கிறது. இப்படி வீணத்தனம் பண்ண உனக்கு எவ்வளவு தைரியம்?' என்று அவர் கத்தினார்.

உம்ம மகளா அவள்? அவளை கண்டிக்கிறது தானே?' என்று அவன் மனம் முனகியது. ஆனால்

நாக்கு உச்சரிக்கவில்லை. அவன் மண் பொம்மை மாதிரி நின்றான். அவனைச் சுற்றிலும் கும்பல் கூடி விட்டது.

'நீ இனிமேல் இந்தத் தெருவில் அடி எடுத்து வைத்தால் தொலைந்தே. என்ன நடக்கும்கிறதை அப்புறம் பார்த்துக் கொள்' என்று உமினார் பெரியவர்.

ரகுராமனின் கண்கள் வாசல்படியின் பக்கம் ஓடின. அங்கு அவள் நின்று கொண்டுதானிருந்தாள். வேடிக்கை பார்த்துச் சிரிக்கும் களிப்பு அவள் முகத்தில் நிறைந்து காணப்பட்டது.

அவனுக்கு 'சீ' என்றாகி விட்டது. 'சே என்ன உலகம்! என்ன மனிதர்கள்!' எனக் குமைந்தது அவன் உள்ளம்.

நிமிர்ந்து பார்க்காமலே நடையைக் கட்டினான் அவன். அன்றே இரவோடு இரவாக ரகுராமன் அந்த வீட்டை காலி செய்தான். ஊரை விட்டு வெளியேறினான்.

ரகுராமன் வாழ்க்கையில் இவ்விதம் எத்தனையோ அனுபவங்கள் குறுக்கிட்டன. அவன் அந்த ஒரு பாடத்தை பலமுறை உச்சரித்து விட்டான். எப்பவும் அவனுக்கு தவறான விடையே கிடைத்து வந்தது.

அவனுக்காக அனுதாபப்பட்டவர்கள் பலர். 'வாழத் தெரியாத அப்பாவி' என்றார்கள் சிலர். 'எதை எப்படிச் செய்யவேணும் என்று தெரிந்து கொள்ளாதவன்' 'சாமார்த்தியம் போதாது' 'மடையன்' 'பைத்தியம்' 'காதல் பித்து'-இப்படி அவனுக்குக் கிடைத்த சான்றுகள் பலவாகும்.

லைலாவும், மஜ்னுவும் காவியத்தில்தான்என் பதுசரியல்ல. ஒரு மஜ்னுவுக்கு ஒரே லைலா என்பது வேண்டு

மானால் காவியத்தில் மட்டுமே காணக்கூடியதாக இருக்கலாம். மஜ்னு ஒரு காதலில் தோல்வி அடைந்த பிறகு மனம் ஒடிந்து போயிருக்கத் தேவையில்லை. முதல் காதல் முறிந்து போனால் அடுத்து வேறு காதல்; ஒரு காதலி நழுவி விட்டால், இன்னொரு காதலி எதிர்ப்படாமலா போவாள்? 'நவயுக ஜூலியட் ஒரு டஜன் ரோமியோக்களை விரும்ப முன்வருவாள்' என்று ஒரு அறிஞர் சொல்லவில்லையா? இது ராமனின் தடம் புரண்ட சிந்தனை.

அவன் இப்போது ஒரு முதலாளியிடம் செயலராகப் பணியாற்றி வருகிறான். அந்த முதலாளியின் மகள் செல்வா குதித்து ஆடும் கோலமயில். ஒயிலாக நடக்கும் மணிப்புறா. எல்லோரிடமும் சிரித்துப் பேசும் வண்ணக்கிளி.

ரகுராமன் அவளை கவனித்துக் கொண்டுதான் இருக்கிறான். அவனை நன்கு அறிந்தவர்கள் ஒரு சோதிடம் கூறமுடியும்.

"அவன் அறிந்தது ஒரே பாடம். ரகுராமன் செல்வா விடமும் அந்தப் பாடத்தை ஒப்புவிப்பான் அவள் கையினால் கன்னத்தில் அறைவாங்கிக் கொண்டு வெளியேறுவான். அப்புறம் வேறு ஊர் வேறு வேலை. வேறு காதலி மயக்கம்!"

அவர்கள் கூறும் 'எதிர்காலப் பலன்' அப்படியே பலித்துவிடக்கூடும். அனுபவங்கள் மனிதர்களை அவ்வளவாக ஞானவான்கள் ஆக்கி விடுவதில்லை என்பதுதானே வாழ்க்கை நியதியாக இருக்கிறது!

☆ 'இளையமித்திரன்' (சுதேசமித்திரன்)—19-3-1995

# சாதனை வீரர்!

"வே, உமக்கு கவனிப்பும் நிலையான பேரும் வரணும்னு சொன்னா, அதுக்காக நீரு அபாரமான காரியங்களை செய்தாகணும்கிற அவசியம் எதுவும் கிடையாது. அசட்டுத்தனமான, முட்டாள்தனமான, கோணல் தனமான காரியங்களை செய்தும் நீரு பேரு பெற முடியும்."

இப்படி ஓங்கி அடித்தார் சூரியன் பிள்ளை அண்ணாச்சி. அவரது முழுப்பெயர் சூரிய நாராயண பிள்ளை. வழக்கத்திலே அது சூரியப்பிள்ளை என்று குறுகிப் போச்சு.

"என்ன அண்ணாச்சி இப்படிச் சொல்லுதீக?" என்று அதிசயித்தார், கூட இருந்த ஒரு தம்பியா பிள்ளை.

"இல்லாததையா சொல்லுதேன். இந்திய சரித்திரம் முகமது பின் துக்ளக் செயல்களையும் பதிவு செய்து வச்சிருக்காக இல்லையா? அவன் ஏறுமாறான காரியங்களைத்தானே செய்துக்கிட்டிருந்தான்?" என்று கேட்டார் சூரியன்பிள்ளை.

பிறகு அவரே தொடர்ந்தார். "அவ்வளவு தூரம் போவானேன்! நம்ம தாமிரவர்ணி ஆத்திலே கொக்கிர

குளம் பாலத்துக்கு கிழக்கே ஒரு ஓடை ஓடிக்கிட்டிருக்கு. புள்ளெயைப் போட்டு பலாப்பழம் எடுத்த ஓடையின்னு அதுக்குப் பேரு. அதுக்கு ஏன் அந்த பேரு வந்தது?"

தம்பிமார்களுக்குத் தெரியவில்லை. "நீங்களே சொல்லுங்க அண்ணாச்சி," என்றார்கள்.

"ரொம்ப காலத்துக்கு முந்தி -அது நடந்து எத்தனையோ தலைமுறை ஆகுது. -எவளோ ஒரு பொம்பிளை செய்த அசட்டுத்தனமான வேலையை நித்தியமா, நிரந்தரமா அது நினைவுபடுத்திக்கிட்டே இருக்கு!"

"அது என்ன விசயம், அண்ணாச்சி?"

"ஒரு பொம்பிளை. ஒக்கல்லே புள்ளையை வச்சுக்கிட்டு அந்தப் பக்கமா வந்திருக்கா. ஓடையிலே ஒரு பலாப்பழம் உருண்டு புரண்டு வாறதை அவ பார்த்தா, பார்த்தாளா? அவளுக்கு பலாப்பழத்து மேலே ஆசை உண்டாயிட்டுது. அதை புடிச்சி எடுத்துரலாம்னு தோணிச்சு. ஒக்கல்லே இருந்த புள்ளையை ஓடைக் கரை மேலே படுக்க வச்சிட்டு' பலாப்பழத்தை புடிக்கப் போனா. ஓடையிலே தண்ணி நெறைய. அது வேகமாகவும் ஓடுது. அவ கைக்கு எட்டாம பலாப்பழம் உருண்டு, புரண்டு போயிக்கிட்டே இருக்கு. அவ அதை விரட்டிகிட்டே போறா.

"அவ கரையிலே படுக்கப் போட்டிருந்த பச்சப் புள்ளை, கரை சரிவா இருக்கறதுனாலே, உருண்டு, உருண்டு ஓடைத் தண்ணியிலே விழுந்திட்டுது. அதை தண்ணி அடிச்சிக்கிட்டுப் போகுது. புள்ளை கத்துது. பலாப்பழ ஆசையிலே அலையிற அம்மாக்காரி காதுலே அது விழலே. 'ஏய் சவத்துப் பய பலாப்பழமே, நீ எங்கிட்டே ஆப்பிடாமப் போயிருவியா? நான் உன்னை

விட்டுருவனா'ன்னு கறுவிக்கிட்டு அவ ஓடி, ஒருமட்டும் அந்தப் பழத்தை எட்டிப் புடிச்சு, கஷ்டப்பட்டு தூக்கி எடுத்து, புள்ளையை அணைக்கிற மாதிரி உடம்போடு சேர்த்து அமுக்கினா. அப்பதான் அவளுக்கு புள்ளை ஞாபகம் வந்தது.

''புள்ளையோட அழுகைச் சத்தமும் காதிலே விழுந்தது. தண்ணியிலே அது உருண்டுக்கிட்டு வர்றதும் கண்ணிலே பட்டுது. அடி, பாவி மட்டை-பாதகத்தி கெடுத்தேனே கேட்டை! எம் பிள்ளை தண்ணியோடுல்லா போகுதுன்னுட்டு, அவ கையி லிருந்த பலாப்பழத்தை அவசரம் அவசரமா கரையிலே வச்சிட்டு புள்ளெயைப் புடிக்க ஓடினா. தண்ணிதான் வேகமா ஓடுதே. அது புள்ளையை இழுத்துக்கிட்டு வேகமாகப் போகுது. அவ ஓட ஓட புள்ளையோடு தண்ணியும் ஓடுது. மேட்டிலேயிருந்து பள்ளத்திலே விழற இடத்திலே புள்ளையும் தண்ணியோடு சேர்ந்து விழுந்து, ஆழத்திலே முங்கி முங்கி அலைக்கழிஞ்சு, அவுட்டாயிட்டுது.

''அவ தலையிலே, தலையிலே அடிச்சுக்கிட்டு அலறுதா. இதுக்குள்ளே அவ கரையிலே வச்ச பலாப் பழமும் உருண்டு தண்ணியிலே விழுந்து, ஓடைத் தண்ணி அதையும் அடிச்சுக்கிட்டுப் போயிட்டுது. பயித்தியாரி வாயிலேயும், வயித்துலேயும், தலையிலே யும் ஓங்கி ஓங்கி அடிச்சுக்கிட்டு 'லபோ லபோ'ன்னு கத்துனா. கத்தி என்ன பிரயோசனம்? வழியோடு போனவங்க வந்தவங்க நின்னு விசாரிச்சாங்க. அந்தக் கூறுகெட்ட மூளியின் செயல் அம்பலமாச்சு. இது வாய் வழிச் செய்தியா பரவிப் பரவி, அந்த ஓடைக்கு ஒரு அடையாளமாக, ஓடையின் பெயரா நிலைச்சு நின் னிட்டுது!'' என்று அண்ணாச்சி விளக்கினார்.

''அதனாலதான் நான் சொல்லுதேன், அசட்டுத் தனமான காரியங்களை செய்தாலும், நிலையான

கவனிப்பை பெற்றுவிட முடியும்னு,'' என்று பெருமையாக முடித்தார் சூரியன் பிள்ளை.

''அண்ணாச்சி 'சூரியன் பிள்ளை பலே எம்டன்லா. சரியான 'அய்டியா பிரதர்' என்று அவரை தெரிந்தவர்கள் பேசிக் கொள்வார்கள். அவர் சொல்வதை எல்லாம் செயலில் செய்து காட்டுவாரோ என்னவோ-யாரும் அதுபற்றி கவலைப்படுவது இல்லை. அவரோடு பேசிக் கொண்டிருந்தால் பொழுது போவதே தெரியாது. அதுதான் தேவை மற்றவர்களுக்கு.

''வேய்; நீரு என்னதான் சொல்லும். நீங்கள்ளாம் தூக்கி வச்சுக் கொண்டாடுத இட்லி, தோசை, உப்புமா, பூரி இதுகள்ளாம் நம்ம பழயச் சோத்து பக்கத்திலே நிக்க முடியுமாவே? பழையச் சோறு-ஆ! அமிர்தம்லா அது. ஒரு மரவை நிறைய பழையச் சோத்தை திறுகப் பிசைஞ்சு வச்சுக்கிட்டு, அருமையான கட்டித் தயிரை ஊத்தி, கொஞ்சம் உப்புக்கல்லைப் போட்டு பிசைஞ்சு, தொட்டுக்கிடதுக்கு சுண்டக்கறியும் வச்சுக்கிட்டு, உருட்டி, உருட்டி வாயிலே போட்டா, வயிறு கொண்டா கொண்டானில்லே கேக்கும்! வயிறு முட்டச்சாப்பிட்டுப் போட்டா, மணிக்கணக்கிலே கம்னு இருக்கும். அதும் ருசியே தனி வேய்!'' என்று ரசித்துச் சொல்வார் அவர்.

''அது சரி அண்ணாச்சி, என்னமோ மரவைன்னு சொன்னீங்களே, அது என்ன?'' ஒரு தம்பிச்சியின் நியாயமான கேள்வி இது.

''ஓ அதுவா? அது வந்து ஒரு பாத்திரம். மரத்திலே செய்தது. அதனாலேதான் மரவைன்னு பேரு. மரத்தை கடஞ்சி, தேவைப்பட்ட சைசிலே அழகா வட்டில், குழம்புக்கு புளி கரைக்கிறதுக்கு கும்பா மாதிரி, சாப்பிடுற தட்டு எல்லாம் செய்திருப்பாங்க. நாற்பது, அம்பது வருசங்களுக்கு முன்னாலே நம்ம பக்கமெல்

லாம் இது சர்வசாதாரணமா புழக்கத்திலே இருந்தது. அப்புறம் பீங்கான் தட்டு, கோப்பை, கெட்டில்னு ஏனாமல் பாத்திரங்க வந்தது. அதுக்குப் பிறகு ஜெர்மன் சில்வர்னு அலுமினியச் சாமான்கள் நெடுக ஆளுகை யிலே இருந்துது. இப்ப இருந்தாங்குடியா எங்க பாரு, எவர்சில்வர் சாமான்கதான். இப்படி காலத்துக்குக் காலம் மாறுதல்கள் வந்துக்கிட்டே தானிருக்கு,'' என்றார் பிள்ளை.

''ஒரு சமயம் சூரியன் பிள்ளை, கொம்பங்குளம் முருகையாப் பிள்ளையை கூட்டு சேர்த்துக்கிட்டு ஒரு 'கிளப்புக்கடை' ஆரம்பித்தார். 'மண்பானை சமையல்' விசேஷம் அந்த சாப்பாட்டுக் கடையில். சுண்டக்கறி, மாங்கா ஊறுகா 'பேமஸ்!' சாயங்காலத்திலிருந்து இரவு வெகு நேரம் வரை 'சுக்கு வெந்நி,' 'மொச்சைக் கொட்டை மசாலா சுண்டல்' என்று ஜமாய்த்தார். கொஞ்ச நாள் கூட்டம் தூள் பரப்புச்சு. ஆனாலும் கடை 'ரன் பண்ணலே.' தவசிப்பிள்ளையா இருந்த கொம்பங்குளத்துப் பிள்ளைவாள் அகப்பட்டதை சுருட்டிக்கிட்டு 'ரன் பண்ணிட்டாக.' மேலும், எல்லா ரும் அண்ணாச்சிக்கு தெரிஞ்ச தம்பிச்சிகளா இருந்தது னாலே, கடன் சொல்லி சாப்பிட்டு விட்டுப் போனாக. கடனை வசூல் பண்ண முடியலே. அண்ணாச்சி கொடுத்துத் தீர வேண்டிய கடன் பாக்கியும் ஏறிட்டுப் போச்சு. ஆகவே, 'கிளப்புக் கடை' தானாகவே படுத் திட்டுது. அப்புறம் அதை தூக்கி நிறுத்துறது எங்கே?

''அந்தக் கட்டத்திலே தனக்கு அபாரமான அய்டியா ஒண்ணு தோணிச்சு என்றும், ஆனாலும் பிழைச்சிட்டுப் போறானுகன்னு அதை செயல்படுத் தாமல் இருந்ததாகவும் அண்ணாச்சி பிற்காலத்தில் சொல்வது வழக்கம். அது என்னன்னு கேட்டா...

''வே, மகாயுத்தத்துக்கு முன்னாடி நம்மளவங்க பணம் சம்பாதிக்க ரங்கூன்-பர்மான்னு போனாங்க.

அவங்கள்ளே சில பளுவான்க இருந்தாங்க. எமப்பளு வானுக. பிசினசிலே கடனாயிரும். இந்த கோப்பனுக என்ன செய்வானுக தெரியுமா? பெரிய பெரிய வீடு கள்ளே வாடகைக்கு இருப்பானுக. வீட்டுக்குள்ளே அருமையான தேக்கு மரக்கதவுக, உத்திரம், சன்னல் கதவு எல்லாம் இருக்கும். இந்த எம்டனுக அதுகளை, அதுகள்ளே உள்ள பித்தளை கைப்பிடி, கீலு இது களை எல்லாம் நைசா அகட்டி வித்து காசாக்கிப் போடு வானுக. தாராளமா கடனும் வாங்குவானுக. கப்பல் இந்தியாவுக்கு எப்ப போகுதுன்னு குறியா இருப்பாங்க. ராத்திரி வீட்டிலே விளக்கை ஏத்தி வச்சிட்டு-அப்பெல் லாம் அரிக்கன் லைட்டுக தானே!- வீட்டைப் பூட்டிட்டு நைசாக் கிளம்பி கப்பல் ஏறிருவாங்க.

''வீட்லே விளக்கு எரிஞ்சுக் கிட்டே இருக்கும். வெளியேயிருந்து பாக்கிறவங்க ஆளுக இருக்குன்னு நெனைச்சிக்கிடுவாங்க.

ஆனா, ஆளுகளோ கப்பல்லே ஏறி கம்பி நீட்டி யிருப்பாங்க! நானும் அது மாதிரி செய்யலாமான்னு நெனச்சேன். அது வேணாம்னிட்டு மஞ்சக்கடுதாசி கொடுத்திட்டேன். அதுதான் ஐ.பி. இன்சால்வன்ட் பெட்டிஷன். பாப்பர் நோட்டீசு!''

இதை சொல்லிவிட்டு அமர்க்களமாகச் சிரிப்பா, அண்ணாச்சி. ''வே, காதல்லேயும், சண்டையிலேயும் எதுவும் நியாயமாகி விடும்னு சொல்லுவாங்க. கடன் வாங்கிட்டு ஏப்பம் போடுறவங்களும், ஏமாளிகளுக்கு நாமம் போடுவது நியாயமான காரியம்னு நம்புறாங்க. நானும் அப்படி நடந்ததுலே என்ன தப்பு?'' என்று கேட்பார் சூரியன் பிள்ளை.

''அய்டியா பிரதர் வடக்கே போயிட்டு வெற்றிகரமா வந்து வரவேற்பு பெற்றதுதான் அவருடைய சாதனை

களில் முக்கியமானது'' என்று அவருடைய வட்டாரத்தினர் சொல்லி மகிழ்வார்கள்.

அண்ணாச்சியின் இளம் பிராயத்தில் அந்த ஊர், பக்கத்து ஊர்களிலிருந்து 'வடக்கே போறது' என்பது அரும்பெரும் காரியமாகக் கருதப்பட்டது. அவர்களுக்கு மதுரை வரை போனாலும் சரி, மெட்ராஸ் போனாலும் சரி, 'வடக்கே போயிருக்காக' தான். அவர்களுக்கு அடுத்த தலைமுறையினருக்கு மெட்ராஸ் போவது சர்வசகஜம் ஆகிவிட்டது. டில்லி, பம்பாய். கல்கத்தா என்று போனவர்கள் உண்டு. எல்லாரும் 'வேலையா' வடக்கே போயிருப்பவர்கள்' தான்.

''வே, வெள்ளைக்காரன் சொல்லுவான், 'சீ வெனிஸ் அன்ட் டய்'னு. 'வெனிஸ் நகரத்தை பார்த்திட்டுச் சாகு'ன்னு சொன்னான். வெனிஸ் அப்படியாப்பட்ட அழகான ஊராம். நம்மளவங்களுக்கு மதுரைதான் ரொம்ப அழகான ஊரு. அதனாலே 'மதுரை பாராதவன் கழுதை'ன்னு நம்ம பக்கத்திலே சொல்லிக்கிடுவாங்க. நான் ரொம்ப வயசுக்குப் பிறகுதான் மதுரைக்கு போக முடிஞ்சுது. சல்லி நடமாட்டம் நம்மகிட்டே தாராளமா இல்லாத காலம்தான் நம்ம வாழ்க்கையிலே நிறைய,'' என்பார் அண்ணாச்சி.

''அதுக்காக 'சாதனை புரியாமல்' இருக்க முடியுமா?''

ஒருநாள் ரயிலடியில் பெரும் பரபரப்பு. வடக்கே இருந்து வருகிற ரயிலை எதிர்பார்த்துத்தான்.

''வடக்கே போன சூரியம் பிள்ளை அண்ணாச்சி வாறாக,'' என்று பலரும் சொன்னார்கள். அவருக்கு வேண்டியவர்கள் மாலைகளோடு நின்றார்கள். சிலர் கதர் நூல் மாலை வைத்திருந்தார்கள்.

எக்ஸ்பிரஸ் வண்டி வந்து நின்றது.

சூரியன் பிள்ளை மிடுக்காக இறங்கி, கம்பீரமாக அப்படியும் இப்படியுமாக பார்த்தார்.

அவருடைய நண்பர்களும், வியப்பர்களும் அவரை நெருங்கி மாலைகள் அணிவித்தார்கள். "வடக்கே சென்று வெற்றியோடு திரும்பும் அண்ணாச்சி அவர்களே, வருக! வருக! அண்ணாச்சிக்கு ஜே! சூரியன் பிள்ளை அண்ணாச்சி வாழ்க!" என்ற கோஷங்கள் முழங்கப்பட்டன.

அண்ணாச்சி பெருமையோடு முறுவலித்து பெரிதாகக் கும்பிடு போட்டார்.

"பட்டணம் போயி ஏதோ காரியம் முடிச்சிட்டு வாறாரு போலிருக்கு." இப்படி எண்ணிக் கொண்டு போனார்கள் இதர பிரயாணிகள்.

"அண்ணாச்சி தூர தொலைக்கு எங்கேடா போனாரு? முந்தாநத்து தானே போனாரு போலிருக்கு, என்று ஒரு அப்பாவி வியப்பன் தன் நண்பனிடம் கேட்டான்.

"ஸ்ஸ் .. சத்தம் போட்டுப் பேசாதே. அண்ணாச்சி கோயில்பட்டு போயி பக்கத்து ஊரிலே ஒரு சொக்காரன் வீட்டிலே தங்கியிருந்திட்டு வாறாரு. எல்லாம் ஒரு செட்-அப்பு தான்," என்றான் நண்பன்.

☆ தினமலர்-கதைமலர் 10-793

